எங்களது வாடிக்கையாளர்களுக்கும்
நலம் நாடுவோருக்கும்
உளங்கனிந்த
பொங்கல் வாழ்த்துக்கள்




லக்ஷ்மி விலாஸ்
பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம் : கரூர் 639001
நிர்வாக அலுவலகம் : சென்னை 600 086

மங்கையர் மலர்

பிப்ரவரி 1981



'ரஜனிகாந்த்'துக்கு 'அம்மாவோட பேசறும்'



'லட்சுமி ராஜரத்னம்' தரும் முழு நாவல்



சந்தா விவரம்

தனிப்பிரதி ரு. 1-50

ஆண்டுச் சந்தா ரு. 18/-

ஆறு மாத சந்தா ரு. 9/-

உள்ளே...



Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press Race Course Road, Guindy, Madras-600 032 (Phone: 431543) Editor: K. Kasturi Rangan Associate Editor: V. Manjula Ramesh



RAJ BHAVAN
MADRAS 600 022

29th December, 1980

## MESSAGE

I am glad to learn that the publication of the 'MANGAYAR MALAR' has been once again revived.

It is good to know that the magazine is devoting features to inform and educate all sections of women. This is an important contribution in maping the emancipation of woman a reality.

I wish the journal all success.

Shanti Sadiqali

---

TMT. GOMATHI SRINIVASAN, B.A., B.ED.,
MINISTER FOR SOCIAL WELFARE




FORT ST. GEORGE
MADRAS-600 009



## வாழ்த்துச் செய்தி

''மங்கையர் மலர்'' என்கிற மாத இதழ் இடையே கொஞ்ச காலம் நிறுத்தப்பட்டு மீண்டும், வருகிற பொங்கல் விழாவினையொட்டி வெளிவர இருக்கிறது, என்பதனை அறிந்து மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். இந்த இதழ் பெண்களின் நலனுக்காக பெண்களால் நடத்தப்படுகிறது என்பதனை அறிந்து எனது பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறேன். பெண்களின் சமுதாய சீர்திருத்தங்களுக்கும் அவர்களின் சுயவேலை வாய்ப்புக்கும் வழி காட்டியாகவும் இருக்க இந்த ''மங்கையர் மலர்'' முயல்கிறது என்பதனை அறிந்து மகிழ்ச்சி அடைகிறேன். இந்த இதழ் மேன்மேலும் வளர்ந்து பெண்கள் சமுதாயத்துக்குத் தொண்டு புரிய வேண்டுமென வாழ்த்துகிறேன்.

கோமதி சீனிவாசன்
29.12.80

# வாழட்டும் பல்லாண்டு!



**தா**ய்நாட்டில் பல ஆண்டுகள் வாழ்ந்த போதும் சரி, பிறகு தென் ஆப்பிரிக்கா சென்று பல ஆண்டுகள் வாழ நேர்ந்த போதும் சரி, பல்வேறு அனுபவங்கள் எனது வாழ்க்கையில் ஏற்பட்டன.

சமூகத் துறை, வைத்தியத் துறை, இலக்கியத் துறை என்று பல அழியாத நினைவுச் சுவடுகள். அதில் திரு. தாமஸ் தாத்தாவினால் ஏற்பட்ட சுவையான ஓர் அனுபவம்...

தென் ஆப்பிரிக்காவில் வைத்தியராகப் பணியாற்றிய சமயம். வீட்டையும், வேலையையும் கவனித்துக் கொண்டு சமாளிக்க நேரமே இல்லாமல், ஓட்டமாய் ஓடிக் கொண்டிருந்தேன். இந்த அழகில் எனக்கு தோட்டக்கலையில் ஈடுபாடு வேறு!

எத்தனைதான் ஆள் வந்து தோட்டக் கலையில் உதவினாலும் நாமும் கொஞ்சம் வேலை செய்துதானாக வேண்டும். எங்கள் வீட்டிலிருந்து மூன்றாவது வீட்டில்தான் தாமஸ் தாத்தா வசித்து வந்தார்.

வயது எண்பதுக்கு மேல் இருக்கலாம். மேல் தோலெல்லாம் சுருங்கி, கக்காவிவிட்ட வயோதிகத் தோற்றம். ஆனாலும் தோட்டத்தில் கொத்துமல்லி, கருவேப்பிலை முதல் ரோஜாவும், ஹைபிஸ்கஸ் செடி வளர்ப்பது வரை கண்ணும் கருத்துமாய் பாடுபடுபவர்.

எனக்கும், தாமஸ் தாத்தாவுக்கும் தோழமை ஏற்பட்டதற்கு இரண்டு அடிப்படையான காரணங்கள். ஒன்று.. எங்களது தோட்டக் கலை ஆர்வம். இரண்டு... என்னைப் போலவே அவரும் பல ஆண்டுகளுக்கு முன்பாக, தாய் நாட்டிலிருந்து இந்த மண்ணில் வேரூன்றியவர்.

தாத்தாதான் எனக்கு ரோஜாச் செடிகளை பாதுகாக்க ஆலோசனை வழங்குவார். தோட்டக் கலையின் அருமை பெருமைகளை எங்கள் வீட்டுத் தோட்டத்தில் போடப்பட்டிருக்கும் கல் மேடையில் அமர்ந்தபடி மணிக் கணக்காய்ப் பேசுவார். அவருக்கு நன்றி தெரிவிப்பதற்காக அடிக்கடி 'டீ' கொடுத்து சாப்பிடச் சொல்லி நான் உபசரிப்பதுண்டு.

அப்போதெல்லாம் எங்கள் உரையாடல் தாய்நாட்டின் மீது திரும்பிவிடும்.

''எங்க ஊர்ல, திண்டிவனத்திலெ, பெரிய பழத் தோட்டம் உண்டும்மா... மாம்பழம் சொம்பு சொம்பாய்க் காய்க்கும். சாப்பிட்டா கல்கண்டுதான்... உம்! அதெல்லாம் இப்ப எங்கே கிடைக்கப் போவுது?'' என்பார்.

''எங்க ஊர்க் கோவில்ல....'' என்று விவரிப்பார். நீங்காத நினைவுகளோடு, அவர் ஒன்றிப் போய்விடுவார். அடிக்கடி அன்பாக, அவர்கள் வீட்டுத் தோட்டத்துப் புதினா, கரிவேப்பிலை கொத்துமல்லியோடு வந்து நிற்பார்.

''துவையல் அரைத்துச் சாப்பிட்டா நல்லா இருக்கும்மா'' என்பார் கனிவாக.

திடும்மென ஒரு நாள் வாயிலில் மணியோசை. அதிகாலை வேளை. வழக்கம்போல் அவசரமாக வேலைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தேன். எரிச்சலுடன் கதவைத் திறந்தவள், பக்கத்து வீட்டுப் பையன் 'குமரு' நிற்பதைப் பார்த்தேன்.

''தாமஸ் தாத்தா நேத்து ராத்திரி காலமாயிட்டாரு'' என்றான்.

என் காதுகளையே நம்ப முடியாமல் அவனைப் பார்த்தேன். அவன் என் பதிலுக்குக் காத்திராமல், மேற்கொண்டு செய்தியைச் சூடாகப் பரப்ப அக்கம் பக்கம் ஓடிக் கொண்டிருந்தான்.

தாத்தா போய்விட்டாரா? வயது ஆகிவிட்டது. இருந்தாலும்... என் நெஞ்சை ஏதோ அடைத்தது. வேகமாக தோட்டத்துக்குள் புகுந்தேன்.

மலர்க் கொத்துக்களுடன், தாமஸ் தாத்தாவின் வீட்டை நெருங்கிய என்னுடைய பரபரப்பை அக்கம், பக்கம், எதிர் வீடு என்பவர்களின் ஆவலைக் கிளப்பிவிட, அவர்

களும் என் மூலமாக விஷயத்தைத் தெரிந்து கொண்டு, பின்னால் வந்தனர். வீட்டு வாயில் கதவு 'கம்'மென்று மூடியிருந்தது.

என்ன இது! ஒரு அடையாளமும் தெரியலே. பின்னால் வந்தவர்கள் தயங்கிய படி, 'கேட்'டருகில் நிற்க, நான் மட்டும் மலர்க் கொத்தோடு சிறிது தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, அழைப்பு மணியை அழுத்தினேன்.

கதவு திறந்தது. 'ஆ'வெனத் திறந்த வாயை அழுந்த மூடியபடி ஓரடி பின் வாங்கினேன்.

''குட் மார்னிங்! எங்கே காலை நேரத்தில? கையில மலர்க் கொத்து'' தாமஸ் தாத்தா சிரித்தபடி வரவேற்றார்.

அதிர்ச்சியும், அசட்டுக் களையுமாகத் தடுமாறிவிட்டு ''உங்களுக்குப் பிடிக்கும்னு மலர்.... கொண்டு வந்தேன். குட் மார்னிங்'' உளறினேன். ''வேலைக்குப் போகணும். ஸாரி, மன்னிச்சுக்கோங்கோ!'' திரும்பிப் பாராமல், கேட்டருகில் நின்றவர்கள் முகத்தைக் கூடப் பார்க்காமல் ஒரே ஓட்டமாய் வீடு சேர்ந்தேன்.

அன்று ஆஸ்பத்திரி வேலையிலிருந்து திரும்பியவள், வாயில் தோட்டத்துக் கல்மீது தாமஸ் தாத்தா அமர்ந்திருப்பதைக் கண்டதும், நாணத்துடன், ''குட் ஈவினிங்'' என்றேன்.

''புதிரு கொண்டு வந்திருக்கேன்'' தாத்தா மெதுவாகக் கூறிவிட்டு, ''ஆமாம், காலையில நான் செத்துட்டேன்னு மரியாதை செய்யத்தானே வந்திங்க எல்லோரும்? எனக்குத் தெரியும்'' என்றார் குறும்புச் சிரிப்புடன்.

''பக்கத்து வீட்டுப் பையன்....'' நான் முடிக்கு முன் ''தாத்தா செத்துப் போயிட்டார்னு' அவன் சொன்னது உண்மை. ஆனா அது அடுத்த வீட்டுத் தாத்தா! தாமஸ் தாத்தா இல்லை.''

நான் விழுந்து விழுந்து சிரித்தேன். ''நான் தமிழ் நாட்டு வேர்ல முளைச்ச கட்டை. அவ்வளவு சீக்கிரம் செத்துப் போயிட மாட்டேன். உடம்பில நல்ல வலு இருக்கிறது'' என்றாரே பார்க்கலாம்!

அவர் இன்னமும் உயிரோடு இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். இன்னும் பல ஆண்டுகள் வாழட்டும்.

---

**Justice S. Mohan**




41, VENKATAKRISHNA IYER ROAD,
MADRAS-600 028.



28-12-80

பெண்ணாய்ப் பிறப்பதற்கே மாதவம் செய்திடல் வேண்டுமம்மா என்பது கவிஞரின் வாக்கு.

மா தவத்தால் பெற்ற வாழ்வின் முழு நிறைவு பெற, மங்கையர்கள் வாழ்வு மலர கல்வி ஒரு சிறந்த சாதனம். கல்வி என்பது பாடப் புத்தகங்களில் மட்டுமில்லை, எழுத்து வடிவத்தில் எது அமைந்தாலும் அது அறிவு புகட்டும் கருவி. படித்த மட்டும் அறிவு; ஏனென்றால் கற்றனைத்தூறுவது அறிவு. அந்த அறிவுக்கு உறு துணையாக வரவுள்ளது **மங்கையர் மலர்**. திருமதி **மஞ்சுளா ரமேஷ்** அதன் இணை ஆசிரியர் என்பது கண்டு மகிழ்ந்தேன்.

அவருடைய சலியா உழைப்பும், தளரா முயற்சியும், இம் மலர் மலர்வதற்கு நல்ல உரமாக அமையும். அந்த மலர் ஆயிரம் மணங்களில் மலரட்டும். அவ்வாறு மலர என் உளங்கனிந்த வாழ்த்துக்கள்.

அன்பு,

ஸ. மோகன்.

# எனக்கு 62 அவசியமானது, ஆடம்பரமானதல்ல

நான் வீட்டுத் தலைவி. நாள் முழுவதும் வீட்டு வேலையால் களைப்படையும் போது எனது இன்றியமையாத பொழுது போக்கு சாலிடெர் டிலக்ஸ் TS 62. முக்கியமாக வீட்டில் அடைப்பட்டிருப்போருக்கு உற்ற பொழுது போக்கு. எந்த ஒளி நிகழ்ச்சியானாலும் அது, TS 62ன் நேர்த்தியான அமைப்பினால் மேன் மேலும் உன்னதமாகக் காட்சியாவதை உணர்ந்து ரசிப்பீர்கள்.

ஆம்! TS 62 தெளிவான நடுக்க மில்லாத படக் காட்சியை அளிக்கிறது. செய்தி வாசிப்பவரின் முகத்தில் உள்ள பருவோ அல்லது கண் இமைகளோ மிகத் துல்லியமாகத் தெரிகிறது. இதில் உள்ள 10 வாட் ஹைஃபை ஒலிபெருக்கியும், 8" டியூயல் கோன் ஸ்பீக்கரும், ஈடு இணையற்ற இசைத்திறனை அளிக்கிறது.

சாலிடெர் டிலக்ஸ் TS 62 வீட்டு வேலையினால் சலிப் படையாமல் இருக்க உற்ற பொழுது போக்கு.

ஹை-பீம்
எலக்ட்ரானிக்ஸ் பி. லிட்.
சென்னை-600 020.

**Solidaire**
-that seldom fails!

சென்னையிலிருந்து 160 கி. மீ. தொலைவில் வசிப்பவர்கள் கூட உபயோகிக்க வல்ல ஒரே டி. வி.

வெளியூர் டீலர்கள்: எஸ். எஸ். டிரானிக்ஸ் 17-B, ஜி. எஸ். டி. ரோடு, செங்கல்பட்டு, ஜெகதாம்பிகா சைகிள் ஸ்டோர்ஸ் 439, காந்தி ரோடு, காஞ்சிபுரம்-631 501 தொலைபேசி: 2405, டி. வி. எம்போரியம் FF-22, ஜவஹர்லால் நேரு தெரு, பாண்டிச்சேரி-605 001, ஜெயந்தி ரேடியோ & எலெக்ட்ரிகல்ஸ் 1/4-5, கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரி ரோடு, வேலூர்-1 தொலைபேசி: 22995

# கோரா கும்பர்



ஸ்ரீ வேணுகோபாலன்



நாமதேவர் வாழ்ந்த காலத்திலேயே வாழ்ந்தவர் கோரா கும்பர் என்னும் மகான். குயத் தொழில் செய்து வந்தவர். ஏழையானாலும் மனத்தைப் பாண்டுரங்க பக்தியால் நிரப்பியவர். தேர தோகி (மகாராஷ்டிரத்தில் உள்ளது) என்னும் ஊரில் 1267ல் பிறந்தவர்.

அவர் வாழ்ந்த நாளையில் பாண்டுரங்க பக்தி நாடு முழுவதையும் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது. சாரி சாரியாக பக்தர்கள் பாண்டுரங்கனைப் பற்றிப் பாடுவதும், ஆடுவதுமாகி, பக்தி இன்பத்தில் மெய் மறந்து லயித்த வண்ணம் இருந்தார்கள். பக்தி ஒரு தொழிலாகவும், இனிய பொழுது போக்காகவும் ஆகிவிட்டது. எங்கும் பக்திப் பிரேமை ஜொலித்து எழுந்து அதை நெருங்குகிறவர்களை யெல்லாம் உன்மத்தமாக்கிக் கொண்டிருந்தது.

கோரா கும்பர் இந்த பக்தி வெள்ளத்தில் ஈடுபட்டுத்தான் தன் வாழ்க்கையைத் தித்திக்கும் அருள் அனுபவமாக மாற்றி இருந்தார்.

காலையில் எழுந்தால் அவர் நாவில் பாண்டுரங்க நாமமும் எழுந்து விடும். வீட்டுக் காரியம் செய்யும்போதும் சரி, அல்லது தொழிலில் ஈடுபட்டு மண் பாண்டங்கள் உருவாக்கும்போதும் சரி, பாண்டு ரங்கன் பெயர்தான் சிறிதளவும் விலகாது அவருடன் துணையிருந்தது.

கோராகும்பருக்கு நின்றுகொண்டே மண்ணைத் துவட்டிப் பிசைவதில் அலாதி இன்பம். காலால் மண்ணைத் துவைத்துக் கொண்டே இரு கைகளையும் மேலே தூக்கி தாளம் போட்டுப் பாண்டுரங்கன் நாமங்களை மெய் மறந்து பாடுவார்; பாட்டின் வெறி ஏறி கூத்தும் ஆடுவார். ஆனந்தப் பெருக்கில் மெய்மறந்து கோராகும்பர் பாடுகிறார் என்றால் அப்போது அவர் மண்ணும் மிதித்துக் கொண்டிருக்கிறார் என்று அர்த்தம்.

இவர் பக்தி வெறியில் ஈடுபட்டிருக்கும் போதுதான் ஒரு நாள் ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

இவரது மனைவியார், 'நதியில் போய்த் தண்ணீர் எடுத்து வருகிறேன். அதுவரை குழந்தையைப் பார்த்துக் கொள்ளுங்கள்!' என்று சொல்லித் தனது ஒரே குழந்தையை விட்டு முகப்புத் தாழ்வாரத்தில் விட்டு விட்டு கையில் குடத்துடன் நதியை நோக்கிச் சென்றாள்.

கோரா கும்பர் வழக்கம்போல் மண்ணைப் பிசைய ஆரம்பிக்க, அதே நேரம் அவரது பாண்டுரங்க கீர்த்தனமும் உடனே தொடங்விட்டன.

மண்ணைத் துவைத்துக் கொண்டே அவர் கடவுள் புகழைப் பாட, அவரது ஆர்வமும் வெறியும் படிப்படியாக மேலே ஏறிச் சென்றன. கடைசியில் பாடவும் ஆடவும் தொடங்க, அவரது பக்தி ஓர் உன்னத உயரத்துக்குச் சீக்கிரம் சென்று கொண்டிருந்தது. கண்களை மூடினார். கைகளால் ஓங்கி ஓங்கித் தாளம் போட்டார். கண்களிலிருந்து நீராக வழிய பாண்டுரங்கனின் பெயரையே உச்சரித்து வெறி வந்தது போல் மண்ணைத் துவைத்துக் கொண்டு ஆடினார்.

அப்பொழுது முகப்புத் தாழ்வாரத்தில் இருந்த குழந்தை தந்தையை நோக்கித் மெள்ளத் தவழ்ந்து வர ஆரம்பித்தது. கோரா கும்பரின் பாட்டும் கூத்தும் அந்தக் குழந்தைக்கு மிகவும் வேடிக்கையாக இருந்தது. தந்தையின் அணைப்பை ஏங்கி, அந்தக் குழந்தை தவழ்ந்து, தவழ்ந்து வந்தது.

கோராகும்பர் அந்தச் சமயத்தில் உலகத்தையே மறந்து ஆடிக் கொண்டிருந்தார். அவர் கண்களுக்கு எங்கும் பாண்டுரங்கனே தோன்றிக் கொண்டிருந்தார். அந்த பக்தி மெய்மறப்பில் இந்த நிஜ உலகத்தை அவர் முழுவதுமாக மறந்து விட்டார்.

இந்தச் சமயத்தில் குழந்தை மண்ணில் இறங்கி அவர் துவைத்துக் கொண்டிருக்கும்

சகதிப் பக்கம் வந்து விட்டது. கோரா கும்பர் குழந்தையைக் கவனித்தார் இல்லை. கடைசியில் குழந்தை சகதியிலும் இறங்கி விட்டது. கோராகும்பர் அதைக் கவனிக்கவே இல்லை. தமது வெறியில் கால்களை மாற்றி மாற்றித்துவைக்க, குழந்தை அந்த துவைப்பில் அகப்பட்டுக் கொண்டது. அது வீறிட்ட சப்தம்கூட கோரா கும்பருக்கு கேட்கவில்லை. அவர் உயர்ந்த குரலில் பாடிக் கொண்டிருந்தார்.

குழந்தை முடிவில் மண்ணோடு மண்ணாகக் கலந்து மிதிக்கப்பட்டு இறந்துவிட்டது.

கோரா கும்பர் அப்போதும் பாடிக் கொண்டே இருந்தார்.

ஆற்றுக்குப் போயிருந்த அவர் மனைவி சிறிது நேரத்தில்திரும்பி வந்தாள். முதலில் அவர் கண்கள் குழந்தையைத் தேடின. குடிலுக்குள் போய்ப் பார்த்துவிட்டு வந்தாள். உள்ளே இல்லை. சுற்று மெங்கும் தேடினாள். எங்கும் குழந்தை தென்படவில்லை. கணவர் கூத்தாடும் பக்கம் அச்சத்துடன் வந்தாள். திகிலுடன் மண் பகுதிகளைப் பார்த்தாள்.

அவள் நினைத்தது சரியாகிவிட்டது.

அங்கே அவள் குழந்தை மண்ணோடு துவைக்கப்பட்டு இறந்து கிடந்தது.

'ஐயோ, குழந்தையைக் கொன்றுவிட்டீர்களே!' என்று கதறிக்கொண்டு கீழே சாய்ந்தாள் அவள்.

அவள் கூக்குரல் கேட்டு கோரா கும்பர் தம் ஆட்டத்தை நிறுத்தினார். பாட்டையும் நிறுத்தினார். கீழே மண்ணில் புரண்டு அழும் மனைவியைப் பார்த்தார். அதன் காரணத்தைத் தேடினார்.

சீக்கிரம் அவர் செய்த காரியம் அவருக்குப் புரிந்துவிட்டது. 'விட்டலா!' என்று இரைந்தார் அவர். 'என் குழந்தையை நானே துவைத்துக் கொன்று விட்டேனா?' என்று துக்கம் பொங்கப் புலம்பினார்.

பின்னர் தேறிஎழுந்த அவர் தம் மனைவியை ஒருவாறுகத் தேற்ற முயன்றார். அவளோ துக்க சாகரத்தில் மூழ்கி இருந்தாள். கோபத்தில் அவள், "நீங்களும், உங்கள் பாட்டும், உங்கள் பாண்டுரங்கனும்!எல்லோரும் எனக்கு அநியாயம் செய்து விட்டீர்கள். நீங்கள் வணங்கும் கடவுள் மீது ஆணை! என்னை இனி மேல் தொடாதீர்கள்!" என்றாள்.

"விட்டலா!" என்று கூறிய கோராகும்பர் அந்தக் கணமே மனைவி மீது தேற்றுவதற்காக வைத்திருந்த தமது கரங்களை எடுத்து விட்டார்.

மாதங்கள் பல சென்று அவர்கள் துக்கம் ஒருவாறு மிதப்பட்டபின், கோரா கும்பரின் மனைவி தான்இட்ட ஆணைக்காக வருந்தினாள். 'ஏதோ கோபத்தில் சொல்லி விட்டேன். பொருட்படுத்தாதீர்கள்' என்று புத்திர சந்தானத்தை விரும்பி அவரை அழைத்துப் பார்த்தாள். ஆனால் கோராகும்பர் அசையவில்லை. 'கடவுள் மீது ஆணை வைத்துவிட்டாய். அதை மாற்றுவதற்கில்லை' என்று கூறினார்.

பின்னர் கும்பரின் மனைவி பல விதங்களில் யோசித்து. 'என்னைத்தான் தொட வேண்டாம். வேறு பெண்ணைத் தொடலாம் அல்லவா!' என்று நினைத்து, தன் தந்தையின் ஊருக்குச் சென்று அவருடன் ஆலோசித்து தனது தங்கையையே கும்பருக்கு இரண்டாவது தாரமாகத் திருமணம் செய்து வைக்கத் தீர்மானம் செய்தாள்.

கோராகும்பரும் ஒருவாறு இசைய, அவரது இரண்டாவது திருமணம் இனிது நடந்தது.

புதுப் பெண்ணை அழைத்துக்கொண்டு கும்பர் புறப்படும் வேளையில், மாமனார் கும்பரின் இரு கைகளையும் பிடித்து, "ஐயா, எனது இரண்டாவது மகளையும் தங்களுக்குத் திருமணம் செய்து வைத்தேன். தாங்கள் தங்கள் முதல் மனைவியை எப்படி நடத்துவீர்களோ அது பிரகாரமே இவளையும் நடத்த வேண்டும்" என்றார் மனம் உருக.

கோராகும்பர் அதையும் இறைவனின் கட்டளை என்று ஏற்றுக் கொண்டார்.

முதல் மனைவியைப் போலவே இரண்டாவது மனைவியையும் தொடவே இல்லை.

சகோதரிகள் இருவரும் இதனால் மனம் உடைந்தார்கள். கோரா கும்பரின் மனத்தை எப்படி மாற்றுவது என்று யோசித்தார்கள். ஒரு நாள் இரவு கோரா கும்பர் தூங்கும் போது அவரது கைகள் அவர்கள் உடல்களில் தொடும்படி வைத்துவிட்டுப் படுத்தார்கள். கும்பர் விழித்துப் பார்த்தால் தம் ஆணை முறிந்துவிட்டது என்று அறிந்து இனிமேல் இல்லற வாழ்க்கையை ஏற்பார் என்று இரு மனைவியரும் நம்பினார்கள்.

ஆனால் தூங்கி விழித்த கும்பர் தம் கைகள் அவர்கள் மீது இருப்பது அறிந்து ஆணை முறிந்து விட்டதாகப் பதறினார். அதற்குத் தண்டனை யாகத் தம் உள்ளங் கைகளைத் தாமே வெட்டிக் கொண்டார்.

குடும்பத்திலெல்லோரும் துக்கப்பட்டனர். மனைவியரின் சோகத்துக்கு அளவில்லை. அவர்களுக்கு நியாயம் கிடைக்கவில்லை என்று ஒரு ஆதங்கம் எழுந்தது. எல்லோரும் சென்று விட்டலனிடமே இது பற்றி முறையிடுவது என்று தீர்மானித்தார்கள்.

ஒரு ஏகாதசி அன்று பண்டரிபுரத்தைஅனைவரும் அடைந்தார்கள். கோவிலுக்குள் போகும் போதே கோராகும்பர் தன் வசம் இழந்தார். விட்டல் விட்டல் என்று



மெய்யுருகக் கதறிக் கொண்டு அவன் நாமங்களைப் பாடத் தொடங்கினர்.

உள்ளே சந்நிதி முன்பாக நாமதேவர், ஞானேச்வரர் போன்ற பெரிய பக்தர்கள் கூடி கடவுள் நாமாக்களை உச்சரித்துக்கொண்டிருந்தார்கள்.

கோராகும்பரைக் கண்டதும் மிகவும் ஆனந்தித்துத் தங்கள் கோஷ்டி பஜனைகளைப் பெரிதாக்கினார்கள்.

கும்பர் ஏற்கனவே பக்திப் பரவசத்தில் மூழ்கி இருந்தார். நாமதேவரும், ஞானேச்வரரும் பாடல்களை மேலும் ஊக்கிவிட,

கும்பரும் ஆனந்தப் பரவசராகி, கண்களில் அருவி சோர, தமது முடமான கைகளை மேலே தூக்கி 'விட்டல் விட்டல்' என்று தாளம் போட்டு ஆடத் தொடங்கினர்.

சீக்கிரம் அங்கே கூடியிருந்தோர் எல்லாம் பாடலில் பங்கு கொள்ள எங்கும் விட்டலின் நாமம் பொங்கி வழிந்தது.

கும்பர் தம்மை மறந்து எங்கும் விட்டலையே காணலானர்.

வியவர்வயும் கண்ணீரும் வழிவதைப்பார்த்தால், அவர் உடலே உருகுவது போல் இருந்தது. 'விட்டல் விட்டல்' என்று நாமம் எங்கும் எதிரொலிக்க, அந்த நேரத்தில் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. கோரா கும்பரின் விரல்களற்ற கோரமான கை தாமாக வளர்ந்து முழுக் கைகளாக மாறின. அவர் இரு கைகளிலிருந்தும் தாளம் வெகு அழகாக ஒலித்தது.

அதைக்கண்ணுற்ற கும்பரின் மனைவியர் விட்டலரிடம் தங்கள் குறைகளையும் கூறி மெய்யுருகப் பிரார்த்தித்தார்கள்.

சில விநாடிகளில் விட்டலர் சந்நிதியிலிருந்து கும்பரின் குழந்தை மெள்ளத் தவழ்ந்து வந்தது. மனைவியர் அதிசயப்பட்டு ஓடிப்போய் அதை எடுத்து அணைத்துக்கொள்ளக் கூடியிருந்தஎல்லோரும்பரவசரானர்கள்.

கோரா கும்பர் பின்னர் நெடு நாள் வாழ்ந்து பாடல்களை இயற்றி விட்டலரைத் தொழுதுகொண்டு வாழ்ந்து வந்தார்.


# திருமண மலர்

திருமணம் செய்து கொள்ள விரும்பும் ஆண்களும் பெண்களும் **மங்கையர் மலரில்** விளம்பரம் செய்யலாம். கட்டணம் ரூ. 10/- மட்டுமே. இது **மங்கையர் மலர்** என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராக மட்டுமே அனுப்பப்பட வேண்டும். விளம்பரத்திற்கு பதில் அனுப்புபவர் தபால் பெட்டி எண்ணை மறக்காமல் குறிப்பிட வேண்டும்.

முகவரி :

'திருமண மலர்'ப் பகுதி
மங்கையர் மலர், கிண்டி, சென்னை-32

**மாதிரி விளம்பரம்**

பி.எஸ்ஸி படித்து அரசாங்க வேலையிலுள்ள ரூ. 500/- மாத வருமானம் பெறும் 25 வயது முதலியார் வகுப்பு இளைஞனுக்கு அதே இனத்தில் பெண் தேவை.

த. பெ. எண்.
**மங்கையர் மலர்**

# புத்தாண்டு மணக்க
# நரசுஸ்
# காபி அளிக்கும்
# வெகுமதிகள்!






- 12 கிலோ நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் காபி டபரா செட்.
- 6 கிலோ நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் காபி டம்ளர்.
- 2 கிலோ நரசுஸ் காபிக்கு வண்ணத் துணிப்பை.
- 750 கிராம் நரசுஸ் காபிக்கு பெரிய எவர்சில்வர் ஸ்பூன்.
- 500 கிராம் நரசுஸ் காபிக்கு சிறிய எவர்சில்வர் ஸ்பூன்.

மொத்தமாகவோ, சில்லரை யாகவோ வாங்கும் நரசுஸ் காபி யுடன் கிடைக்கும் வெகுமதிக் கூப்பன்களைப் பெற்று வெகு மதிகளைப் பெறுங்கள்.

22-12-80 முதல் 21-2-81 வரை முடியும் விற்பனைக்கே இப் பரிசுகள் உரியவை.

**ஜீவனுள்ள ஒரே காபி!**

## நரசுஸ்

**"தெர்மலோ" காபி!**



**நரசுஸ்**
**காபி கம்பெனி**
சேலம் 636 007.
கிளைகள்: தமிழ்நாடெங்கும்.

ADWAVE/NCC/1528

# தைப்பொங்கல் அமுதுண்போம் கைத்தறி ஆடை அணிவோம்!



கோஆப்டெக்ஸ்






ELEGANT

**"போடி பைத்தியம்! இந்த மாதிரி உலகத்திலே கத்துக்க எத்தனை புதுசு புதுசு சப்ஜெக்டுகள் இருக்கு தெரியுமா?"**

**கை**யில் இருந்த புத்தகத்தின் மீது மனம் ஓடவில்லை ரேகாவுக்கு. வரவர எல்லாவற்றிலும் சுவாரஸ்யம் குறைந்துகொண்டு வருகிறது.

மத்யானப் பொழுதின் நிசப்தம் எல்லா இடத்திலும் நிரம்பியிருந்தது. முன்பெல்லாம் இந்த நிசப்தம் அவளுக்கு ரொம்பவும் பிடிக்கும். ஏனென்றால் எப்போதோ ஒரு முறை சந்திப்பதுதானே? கல்லூரி நாட்கள் போட்டு போட்டுக் கொண்டு ஓடும்போது அமைதியாக உட்கார நேரமேது?

ஆனால் இப்போதோ ஒரு மாதமாக இதே வேலைதான். எம். ஏ. பொருளாதாரம் முடித்து ரிசல்டுக்காகக் காத்துக் கொண்டு கிடக்கும் இந்த நேரத்தில் பொழுதுதான் போகவில்லை.

''உங்க பொண்ணுக்கு என்னம்மா? எப்பத்தான் அவ படிப்பிலே சோடை போனா! எப்பவும் பர்ஸ்ட் கிளாஸ்தான். இப்பவும் பாருங்களேன், ரிசல்ட் வரட்டும், உடனே வேலை கிடைச்சுடும்!''

பக்கத்தறையில் அம்மாவின் சிநேகிதி மத்தியான மாநாடு நடத்திக் கொண்டிருந்தாள்.

அம்மா பெருமூச்சு விடுவதும் கேட்டது.

''என்னமோ நானும் அந்தத் தைரியத்திலேதான் இருக்கேன். நல்லாப் படிக்கிறாளே, அவ ஆசையைக் கெடுப்பானேன்னு முடியற வரைக்கும் படிக்க வச்சாச்சு. கையில் ஏது காசு? சீக்கிரமா ஒரு வேலையில உக்காந்துட்டான்னு, கொஞ்சம் காசு சேர்த்து ஒருத்தன் கையிலே ஒப்படைச்சுடணும். அதுவரைக்கும் என் வயத்துல நெருப்புக் கட்டிண்ட மாதிரிதான்!''

''ஏன் கல்யாணி அப்படிச் சொல்றே? ரேகா சமர்த்துப் பொண்ணு. அவள மாதிரி அடக்க ஒடுக்கமா இந்தக் காலத்திலே எந்தப் பொண்ணு இருக்கா? அவ காலேஜுக்குப் போறதும் தெரியாம, வர்றதும் தெரியாம... என்ன பொண்ணு...''

இந்த வார்த்தைகளை அவள் சம்பாதித்துக் கொண்டது இன்று நேற்றைக்கல்ல. ரேகா வீட்டைச் சுற்றி இருக்கிற அத்தனை பேருக்கும் இதுதான் ஏகோபித்த அபிப்பிராயம்.

'ரேகா மாதிரி ஒரு பொண்ணு இருக்கக் கொடுத்து வைச்சிருக்கணும். ரொம்ப அடக்க ஒடுக்கமான பொண்ணு.'

# என்னதான் செய்தாய்?

வி. மஞ்சுளா ரமேஷ்



அப்படித்தான் இருந்தாள் அவளும். கல்லூரியிலும் சரி; வீட்டிலும் சரி. அவளுடைய தோழி கல்பனா கடைசி நாளன்று எச்சரிக்கை விட்டது இப்போது நினைவுக்கு வந்தது.

''இப்படிச் சந்நியாசினியா எவ்வளவு நாள் இருந்துவிட முடியும்னு நினைக்கிறே ரேகா! உன்னோட அடக்கமும், ஒடுக்கமும், ஆழ்ந்த அறிவும் இந்த உலகத்துக்குத் தேவையில்லே. சாமர்த்தியசாலிதான் தேவை.''

ஒரு புன்சிரிப்பால் அதை ஒதுக்கிவிட்டாள் ரேகா; அதிகம் பேசாத ரேகா.

கல்பனாவை நினைக்கும்போது வேடிக்கையாக இருந்தது. அவளுக்குசுவாரசியம், இல்லாத விஷயமே இருக்காதோ என்று ஆச்சரியமாகி இருந்தது.

'ரஜனி திரும்பவும் பீல்டுக்கு வந்து இவ்வளவு தூரம் பிக்-அப் ஆனது எவ்வளவு பெரிய விஷயம் தெரியுமா? நம்ப மக்களெல்லாம் பிரபலமானவர்களோட அந்த




''நம்ம லக்ஷ்மியோட பொண்ணு அவ புருஷன் வீட்டிலெ இருக்கப் பிடிக்காமெ பொறந்தாத்துக்கு வந்துட்டாளாம்...''

''ஏன்? நல்ல வசதியான இடத்துலெதானே அவளைக் கட்டிக் கொடுத்திருக்காங்க...''?

''அது சரி, அவபுருஷன் அவபேச்சையே தட்டறதில்லியாம்...அவ மாமியார் ஊமையாம்... ஒண்ணும் சண்டை சச்சரவுக்கே வழியில்லாமெ ஒரே போரடிக்குதுன்னு வந்துட்டாளாம்.''

— சுதா

ரங்க வாழ்க்கையையும் சேர்த்துத்தான் பார்ப்பாங்க. ஆனா இவர் விஷயத்துல விதிவிலக்காயிடுச்சு' என்பாள் ஒரு நாள்.

எம். ஏ. ஸ்டூடண்ட் பேசும் பேச்சா இது என்று சலிப்பாக இருக்கும் ரேகாவுக்கு.

''போடி பைத்தியம்! இந்த மாதிரி உலகத்துல கத்துக்க எத்தனை புதுசு புதுசு சப்ஜெக்டுகள் இருக்கு தெரியுமா? உன்னை மாதிரி புஸ்தகத்தையே குடைஞ்சுகிட்டு இருக்கச் சொல்றியா?''

''படிப்புல ஆழ ஆழ அதுல நான் தெரிஞ்சுக்கற அறிவு போதும் எனக்கு.''

நாட்கள் கொஞ்சம் கொஞ்சமாக நகர ஆரம்பித்தன.

அவளுடைய இழுத்துப் போர்த்திய தலைப்பும், இதுவரை சுமந்து கொண்டிருந்த நல்ல பேராகிய கிரீடமும் வேலைக்குப் பயன் படவேயில்லை.

யார் மூலமாவது சிபாரிசு பிடித்துப் போகலாம் என்றாலும், ''உங்க பொண்ணுக்கு டைப் தெரியுமோ?'' என்று கேட்டார்கள்.

அப்பா தர்மசங்கடத்துடன் அசைந்தார்.

''ரேகா நல்லாப் படிக்கிற ஸ்டூடண்ட். அவளுக்குப் படிப்புல இருக்கிற கவனத்தை டைவர்ட் பண்ண வேண்டாம்னு டைப்புக் கெல்லாம் அனுப்பலே.''

''அப்ப என்ன பிரயோசனம் சார்? எல்லாரும் டைப் தெரியுமா, ஷார்ட் ஹேண்ட் தெரியுமான்னுதானே கேக்கறா?''

இரண்டு வருடங்களைப் பிடித்துத் தள்ளியாகி விட்டது. இன்னும் 'இருக்கும் இடம் தெரியாமல்' இருக்கும் ரேகாதான்.

அவளை உதாரணம் காட்டி அறிவுரை சொல்லப்பட்ட பெண்கள் எல்லாம்கூட, அவரவர்கள் எஸ். எஸ். எல். சி., பி.யூ.சி படித்துவிட்டுச் சின்னச் சின்ன வேலைக்குப் போக ஆரம்பித்து விட்டார்கள்.

ரேகா...? அப்படியேதான் இருந்தாள்.

அப்ளிகேஷன் எழுதி, போஸ்டல் ஆர்டர் இணைத்துப் போஸ்டில் சேர்த்தபோது மனசுக்குச் சங்கடமாக இருந்தது. இன்னும் எத்தனை நாளைக்கு இந்த வேதனை...

இருபத்தைந்து வயது வரை பெற்றோருக்குப் பாரமாக இருந்து படித்து அவர்களைக் கஷ்டப்படுத்தி, அவர்களுக்கென்று திருப்பித் தர எதுவும் இல்லாமல் மீண்டும் மீண்டும் அவர்களையே கஷ்டப்படுத்திக் கொண்டு...

ஒரு நிமிடம் தபால் பெட்டி யருகே குனிந்து கொண்டிருந்தவள் திரும்பியபோது ஆச்சரியம் காத்துக் கொண்டிருந்தது.

கல்பனா!

இத்தனை நாள் தனிமையில் சுமந்திருந்த வருத்தமெல்லாம் ஓடி, மனசே திறந்து கொண்டு ஜிலுஜிலுவென்று ஆகிவிட்டது.

''ஹாய், ரேக்! எப்படி இருக்கே?''

''நீதான் பார்க்கறியே. காலேஜ் விட்டுப் போன அன்னிக்கு என்ன பொசிஷனோ அதுதான். நீ எப்படி இருக்கே?''

''நான் மிண்ட்லே ஒரு பிரைவேட் கம்பெனியிலே செகரட்டரியா இருக்கேன். கல்யாணம் கூட நிச்சயமாகும் போல இருக்கு!''

சொல்லும்போதே முகம் சிவந்துவிட்டது கல்பனாவுக்கு.

அம்மாவுக்குக் கல்பனாவைப் பார்த்ததும் ஒரே சந்தோஷம்.

''எவ்வளவு நாளாச்சும்மா உன்னைப் பார்த்து! இதோ பார், எங்க ரேகா முகத்துல சிரிப்புக்கூட ரொம்ப நாள் கழிச்சு இப்பத்தான் பாக்கறேன்...''

என்றபோதே கண் கலங்கி விட்டது.

''ஏம்மா, அப்படிச் சொல்றீங்க?''

''இல்லம்மா, ரேகாவுக்கு வீட்லயும் அடைஞ்சு கிடக்க முடியலே. வேலையும் கிடைக்கல்லே. வசதி யிருந்தா கல்யாணமாவது பண்ணி வச்சுடலாம். அதுவும் இல்லாம ஒரு படிச்ச பொண்ணுக்கு இப்படி

இருக்கிறது எவ்வளவு பெரிய நரக வேதனை யான விஷயம்னு எனக்குத் தெரியும்!''

''ரேகா, ஒண்ணு செய்யேன். என்னோட இளம்பி வா. என்னோட கம்பெனி மானே ஜரை உனக்கு அறிமுகம் பண்ணி வைக் கிறேன். அங்க வேகன்ஸி இல்லேன்னாலும் வேற எங்கேயாவது வாங்கித் தருவார்!''

அதுவும் ஒரு பெரிய ரிலீஃப்தான். இன் றைய மத்தியானமும் சந்தடியில்லாத தெரு வைப் பார்த்துக் கொண்டு வெறுமையான மனத்துடன் இருக்க வேண்டாம். அதை நினைக்கும்போதே சந்தோஷமாக இருந்தது.

கல்பனா எங்கெங்கோ சந்து பொந்தெல் லாம் நடந்து செல்வது ஆச்சரியமாக இருந் தது ரேகாவுக்கு. அவள் இங்கெல்லாம் வந்ததுகூட இல்லே.

''ஸார், என்னோட டியர் மோஸ்ட் ஃப்ரெண்ட் ரேகா இவ. காலேஜ் பர்ஸ்ட். எக்கச்சக்கமான அறிவாளி. எப்படியாச்சும் அவளுக்கும் எங்கயாச்சும் வேலே வாங்கித் தரணும்...''

அந்த மீசை மானேஜர் சிரித்தார், கல்பனா வின் உரிமையான பேச்சைக் கேட்டு. கல்பனா ஓடிவிட்டாள். தனிமையில் விடப்பட்ட ரேகாவை ஏறிட்டுப் பார்த்தார் மானேஜர்.

''ஏம்மா, எம்.ஏ.ல என்ன க்ளாஸ்?''

''பர்ஸ்ட் க்ளாஸ் வாங்கியிருக்கேன் சார்!''

''டைப்ரைட்டிங் தெரியுமா?''

''தெரியாது.''

''ஷார்ட் ஹாண்ட்...?''

''இல்லே சார்...''மெதுவாகத் தலையசைத் தாள் ரேகா.

''உங்க ஹாபி என்ன? பெயிண்டிங், எம்ப் ராய்டரி, இல்லன்னு கதை கவிதை எழு தறது....''

சங்கடத்துடன் தலையசைத்தாள் அவள். ''இல்லே சார். எனக்கு ஸெமஸ்டர்ங்கறதால படிக்கவும், அஸைன்மெண்ட் எழுதவுமே நேரம் சரியா இருக்கும்...''

''ஸ்போர்ட்ஸ்ல கலந்துக்கிட்டு இருக் கீங்களா?''

''இல்லே சார்...''

''வேற ஏதாவது...?''

கண்ணில் நீர் தளும்பி விட்டது ரேகா வுக்கு. மௌனமாக அமர்ந்திருந்தாள்.

''அப்ப இவ்வளவு நாளா என்னதாம்மா பண்ணீங்க? எக்ஸ்ட்ரா இண்ட்ரஸ்ட் ஒண் ணும் இல்லே. படிப்பைத் தவிர வேற ஒண் ணுமே தெரியாதுன்னு எப்படிம்மா வேலே தர்றது? ஆச்சரியமா இருக்கே, என்னதான் செஞ்சுக்கிட்டு இருந்தீங்க...''

ஒவ்வொரு வார்த்தையும் இடியாக இறங் கியது அவளுக்குள்.

'ரேகா மாதிரி ஒரு பொண்ணு இருக்கக் கொடுத்து வச்சிருக்கணும். இருக்கற இடம் தெரியாம அடக்க ஒடுக்கமா...'

'இவளா எம். ஏ. படிச்சான்னு ஆச்ச ரியமா இருக்கே... என்ன அடக்கமான பொண்ணு....'

வீட்டுக்குள் கிடைத்த நல்ல பெயரெல் லாம் வெளி உலகத்துக்கு உபயோகப்படா மல்....

''என்ன செய்தாய் இவ்வளவு நாளாய்... ஒண்ணுமே தெரியலேயே உனக்கு...''

''ஒண்ணுமே தெரியலேயே உனக்கு...!''

''ஒண்ணுமே தெரியலேயே உனக்கு...!''

எப்படித்தான் இவ்வளவு நேரம் அடக்கிக் கொண்டாளோ, காண்டீனில் கல்பனா வுடன் தனிமையில் உட்கார்ந்தபோது அழுகை வெடித்துக் கொண்டு வந்துவிட்டது. கல்பனா பதறிப் போய்விட்டாள்.

''ஏய், ஏய், என்னடி இது?''

ரேகாவின் நிதானமும் அமைதியும் எல் லாம் போய் அழுகையினூடே சொன்ன போது கல்பனா சிறிது நேரம் அமைதியாக இருந்தாள்.

''ரேகா, நீ உலகத்தைப் புரிஞ்சுகண்டது அவ் வளவுதான். நீ என்னை மாதிரி கலகலப்பான வளா இருக்க முடியாது. நான் உன்னை மாதிரி புத்தகப் புழுவா மாற முடியாது. ஆனா ஒண்ணு மட்டும் ஞாபகம் வச்சுக்கோ.

பொண்ணாப் பொறந்தவ இந்தக் காலத் துல எவ்வளவு வேஷம் போட வேண்டியதா

---

1981-ம் வருடம் 'ஊனமுற் றோர் ஆண்டாக'க் கொண்டாடப் படுகிறது. நலிந்த நிலையில் வாழும் அவர்கள் வாழ்வில் முன் னேற 'மங்கையர் மலர்' வாழ்த்துகிறது.

கண், காது, வாய் ஊனமுற்ற நிலையிலும் வாழ்வில் பெரிதும் முன்னேறிய 'ஹெலன் கெல் லரை' நினைவில் கொள்வோம். அவரின் நினைவாக அமெரிக்கா வெளியிட்ட தபால் தலைதான் இது.




---

யிருக்கு தெரியுமா? அம்மா, அப்பா, வீட்டச் சுத்தியிருக்கவங்களுக்கு நீ வாங்கின பேரு மாதிரி அடக்கமான பொண்ணுதான் இருக் கணும். ஆனால் அவளே வெளி உலகம் வர்றப்போ எல்லாக் கலைகளையும் தெரிஞ் சுக்கிட்டவளா, சாமர்த்தியசாலியா இருக் கணும்னு நினைக்கிறாங்க. புருஷனுக்கு அடங் கினவளா அங்க மண்ணு மாதிரி இருக்கணும். அதே சமயம் அவன் அவளை வெளியே கூட்டிக் கிட்டு வர்றப்போ அறிவாளி அப்படின்னு சொல்லிக் பெருமைப்பட்டுக்கவும் வேணும்னு இன்னிக்கு நினைக்கிறாங்களே! அது மாதிரி தான் இதுவும். இதெல்லாம் நீ என்னிக்குத் தான் கத்துக்கப் போறியோ?''

ரேகாவுக்குக் கேட்கக் கேட்கத் தலையை- தான் சுற்றியது.

அடக்கமான பெண்ணாக வீட்டில் நல்ல பேரா?

சாமர்த்தியசாலியாக வெளியுலகை வெல் லும் பெண்ணா?








அம்மா....!

அந்தச் சொல்லின் அற்புதமே தனி. உலகத்தில் அம்மா என்ற சொல்லைக் கேட்டு உருகாதவர்கள் யார்? தாயின் மடியில் ஆறுதல் பெறுதவர்கள் யார்? அவள் பாத நிழலில் கவலையை மறந்தவர்கள் எத்தனைபேர்!

இப்பேர்ப்பட்ட அம்மா இல்லாமல் எத்தனை குழந்தைகள் தவிக்கிறார்கள்! தாயன்பே கிடைக்காத மனிதர்களின் நிலை பரிதாபத்துக்குரியது. அப்படிப்பட்டவர்கள் துயரத்தின் உச்சிக்குப் போகும்போது எங்கோ தன் தாயின் சாயலைக் காணும்போது இந்தப் பெண்ணையே தன்னுடைய தாயாக்கிக் கொண்டு மனம் தேறுகிறார்கள்.

நமது தமிழகத்தின் முன்னணி நட்சத்திரமான ரஜனிகாந்தின் வாழ்வில் நடந்த சம்பவமே இதற்குச் சான்று.

பிப்ரவரி 1979: மூன்றாவது நாளாக ஓர் அழகிய வீட்டில் திரைப் படத்திற்கான படப் பிடிப்பு நடந்து கொண்டிருந்தது. படப்பிடிப்புக் குழுவுக்கு இருக்கும் தொல்லைகள் போதாவென்று பிரபல கதாநாயகனின் தொல்லை வேறு. எக்கச்சக்கமாகக் குடித்து விட்ட நிலையில் கதாநாயகன் இருந்ததால் மேலும் ஒரு நாள் படப் பிடிப்பை அந்த வீட்டில் நீடிக்க வேண்டியதாகி விட்டது.

அந்த வீட்டின் சொந்தக்காரப் பெண் பயந்தது போலத்தான் நடந்தது. இவருக்குத் தன்னுடைய வீட்டைப் படப் பிடிப்புக்கு விடுவதற்கு இஷ்டமே இல்லை. தம்முடைய குழந்தைகளின் ஆசையைக் கெடுக்கக் கூடாது என்றுதான் சம்மதித்தார்.

இந்த மூன்று நாட்களும் அவர் படப் பிடிப்பைப் பார்க்கப் பிடிக்காமல் மாடியிலேயே தங்கி விட்டார். கதாநாயகன் நடவடிக்கைகளினால் அடுத்த நாளும் படப் பிடிப்பு நீடித்தபோது, எரிச்சல் காரணமாக அந்தக் கதாநாயகனைப் பார்ப்பதற்காக இறங்கி வந்தார் அவர். வேடிக்கையான பிரயோகத்தில் தமிழைப் பேசும் அந்த ஒல்லியான கதாநாயகனையும் கவனித்தார். இந்தக் கதாநாயகனின் நிலையைப் பார்த்து லேசாக வருத்தப்பட்ட அந்த அம்மாள்

படப் பிடிப்பு முடிந்து விட்டதை அறிந்து கொண்டு மாடிக்குப் போகத் தயாரானார். கதாநாயகன் நடித்து முடித்து விட்டுப் பிரகாசமான விளக்கின் ஒளியிலிருந்து விடுபட்டு வந்தவர், இந்தப் பெண் மணியைக் கவனித்தார்.

சில நொடிகள் திகைத்து நின்றுவிட்ட கதாநாயகன் அப்படியே பார்த்தது பார்த்த படியே இருந்தார். பிறகு அந்த அம்மாளிடம் ஓடிவந்து, அதே தமிழில்,

''அம்மா, நான் உங்களுடன் பேச விரும்புகிறேன். உங்களிடம் சொல்வதற்கு எனக்கு நிறைய விஷயங்கள் இருக்கு!'' என்றார்

ஒரு நிமிஷம் என்ன செய்வது என்று தோன்றாமல் பின்வாங்கிய அந்த அம்மாள், அந்த நடிகரைப் பற்றிக் கேள்வி பட்டு இருந்தெல்லாம் நினைவு வர, ''நானும் உனக்குக் கொஞ்சம் அறிவுரை சொல்லத்தான் விரும்புகிறேன்!'' என்றார்.

நடிகர் சில நிமிஷங்கள் ஒன்றும் பேசாமல் அந்தப் பெண்மணியின் கண்களையே பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு, ''நான் தினமும் உங்களுடன் பேச வருகிறேன், அம்மா!'' என்றார்.

இந்தச் சந்திப்புத்தான் அந்த நடிகரின் வாழ்க்கையில் ஒரு திருப்பு முனையாக அமைந்து, அந்த நடிகரையும் காப்பாற்றியது மட்டுமல்லாமல், அந்தப் பெண்ணையும் பல சாதனைகளைச் செய்யும்படி செய்தது.

அந்தக் கதாநாயகன் தான் பிரபல நடிகர் ரஜனிகாந்த். நடந்து கொண்டிருந்த படப் பிடிப்பு தர்ம யுத்தம். அந்தப் பெண்மணிதான் சென்னையில் பிரபல சமூக சேவகி திருமதி ரெஜினு வின்சென்ட்.

இதைப் பற்றி நினைக்கும் போது திருமதி ரெஜினு சிரித்தார். ''அந்தச் சம்பவத்தை நான் மறந்தே போய் விட்டேன். ஆனால் பிப்ரவரி 22ந் தேதி, அதாவது சரியாக ஒரு வாரம் கழித்து ரஜனிகாந்த் என்னைத் தேடிக்கொண்டு வந்து விட்டார்.

அன்றைக்குச் சாயந்திரம் நேராக நடந்து வந்து என்னருகே நின்ற அவர், ''அம்மா நான் உங்களோடு பேச வந்திருக்கிறேன்'' என்றார். எனக்கு என்ன பேசுவது என்று தோன்றவில்லை. நான் இந்தச் சந்திப்புக்குத் தயாராகவும் இல்லை. சினிமாத் துறையைச்



சேர்ந்த மனிதர்களுடன் எனக்குப் பழக்க மில்லை. ரஜனிகாந்துடன் பேசுவதற்கு என் குழந்தைகளுக்கு அதிக விஷயம் இருக்கும்.

ஆனல் ரஜனிகாந்த் எனக்கு எந்தவித அவகாசமும் தரவில்லை. நான் வாயைத் திறப்பதற்கு முன்பே என் காலில் விழுந்து வணங்கிய அவர்,

''அம்மா, என்னை ஆசிர்வாதம் பண்ணுங்கள். அப்புறம், எனக்கு ஏதோ அறிவுரை சொல்ல நினைக்கிறேன் என்று அன்றைக்குச் சொன்னீர்களே, அதையும் சொல்லுங்கள்'' என்ருர்.

எனக்கு ஒரே திகைப்பு. நானும் ஏதோ படப் பிடிப்பின் ஒரு காட்சியில் கலந்து கொண்டிருப்பது போலத் தோன்ற ஆரம்பித்து விட்டது. ஆனல் ரஜனிகாந்தின் குரலில் இருந்த சத்தியத்தையும், தீவிரத்தையும் என்னுல் சந்தேகிக்க முடியவில்லை.

ஆனல் எனக்குத் தெரியாது, அப்போது தான் ரஜனிகாந்த் அவருடைய மனே சஞ்சலத்தின் உச்ச நிலையில் இருந்தார் என்பது.

(இதைப் பற்றிக் குறிப்பிடும்போது ரஜனிகாந்த், ''நான் அப்போதெல்லாம் பதினுறு பதினேழு மணி நேரம் வேலை செய்துகொண்



டிருந்தேன்'' என்கிருர். 1975ல் ஒரே ஒரு படம் அவருடையது ரிலீஸானது (அபூர்வ ராகங்கள்) 1976ல் நான்கு, 1977ல் பதினென்கு, 1978ல் இருபது, 1979ல் பதினென்கு எனக் குறுகிய காலத்தில் 'மட மட' வென்று முன்னேற ஆரம்பித்து, நடித்துக் குவித்து விட்டார்.)

நான் ரஜனிகாந்தைப் புரிந்து கொண்டேன். தோட்டத்தைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த நாங்கள் பேச ஆரம்பித்தோம். அப்போதுதான் அவருடைய குடிப் பழக்கத்தைப் பற்றிக் குறிப்பிட்டேன்.

''குடிப்பது பெரிய தவறில்லை. ஆனல் அது வேலையில் வந்து குறுக்கிட்டு வேலையைப் பாழாக்க விடக் கூடாது'' என்று சுட்டிக் காட்டினேன்.

நான் ஆச்சரியப்படும் வகையில் அவருடைய பதில் அமைந்தது.

''நான் இதுவரைக்கும் இப்படி யெல்லாம் சத்தியம் செய்ததில்லை. ஆனு இப்போ சத்தியம் செய்கிறேன். இனிமேல் சத்தியமாக என் வேலை நேரத்தின்போது நான் குடிக்க மாட்டேன்'' என்ருர்.

அதற்கப்புறம் எங்களுடன் மதிய உணவுக்கு வந்தபோது மதுவைப் பற்றிய பேச்சே இல்லை. எனக்கு இதைப் பற்றி மிகவும் சந்தோஷமாக இருந்தாலும் அவரைப் பார்க்கும்போது கொஞ்சம் வருத்தமாகவும் இருந்தது. ஏனென்ருல், குடிப் பழக்கத்தை 'சட்' டென்று அவ்வளவு எளிதாக விட முடியாது என்பது எனக்குத் தெரியும். அதற்கப்புறம் வேலை நேரம் என்றில்லாமல், மற்ற சமயங்களில் கூடக் கொஞ்சம் கொஞ்சமாகக் குடிப் பழக்கத்தை நிறுத்த ஆரம்பித்தார் அவர்.

பிறகு நடந்த பேச்சுக்களின்போதுஅவர் நிறையப் பேசினர். அவருடைய தாயார் இவர் சிறுவனுக இருந்தபோதே காலமாகி விட்டாரராம். என்னைத் தனது தாயாராகவே அவர் தத்து எடுத்துக் கொண்டு விட்டார்! பிறகு, தன் வாழ்க்கையில் கிடைக்காமல் போனது, தன் இலட்சியங்கள் என எல்லாவற்றையும் பேசினர் அவர்.

என்னிடம் பேசும்போது தாயாருக்கு அடங்கி நடக்கும் ஒரு குழந்தையைப் போலவே நடந்து கொள்வார். சில சமயம் சாதாரணமாகவே பேசினர். திடீரென்று அவர் பேசுவது அசாதாரணமாக இருக்கும். அப்புறம்தான் எனக்குப் புரிய ஆரம்பித்தது, எங்கேயோ அவரிடம் தவறு இருக்கிறது' என்பது. அவரையும் மீறிய சக்தி ஒன்று அவரை ஆட்டிப் படைப்பதை என்னுல் புரிந்து கொள்ள முடிந்தது.

கொஞ்ச நாட்கள் அவர் வருவது நின்று விட்டது. பிறகு அவர் வந்தபோது, தான் டாக்டர்களிடம் சிகிச்சை பெற்றுக் கொண்டு வருவதாகச் சொன்னுர். அவர் விஜயா ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டதும் எனக்குப் பிறகுதான் தெரியும்.

ஒரு நாள் அங்கிருந்து எனக்கு போன் வந்தது. டாக்டர் செரியனும், ரஜனிகாந்துடைய மனேதத்துவ டாக்டரும் என்னேடு பேசினர்கள்.

''அவர் அம்மா, அம்மா என்று அழைத்துக்கொண்டே இருக்கிருர். யார் அது என்று அவரையே விசாரித்தபோது உங்களுடைய பெயரையும் விலாசத்தையும் சொன்னுர்'' என்ருர்கள்.

நான் என்னுடைய கணவரிடமும், மற்ற குடும்பத்தினரிடமும் பேசிவிட்டு, மருத்துவமனைக்குப் போனபோது நான் கண்ட காட்சி அப்பப்பா!

ரஜனிகாந்த் ஒரு கொடூர மிருகம் போல இருந்தார். மருத்துவர்களாலோ, நர்சுகளாலோ வேறு யாராலும் அவரை அடக்க முடியவில்லை. டாக்டர் செரியனும் ரஜனிகாந்தைப் பொறுத்தவரை அவரும்

பிக்கை அடைந்து விட்டார், 'இந்தக் கேஸைக் குணப்படுத்த முடியாது' என்று.

ரஜனிகாந்தும் ஆஸ்பத்திரியை விட்டு வெளியேறி எங்கள் வீட்டுக்கு வந்து விட்டார். நாங்கள் டாக்டருக்குப் போன் செய்து. 'கொஞ்ச நாட்கள் எங்களுடன் அவர் தங்கியிருக்கலாமா?' என்று அனுமதி கேட்டோம்.

அவர்கள் உடனடியாகச் சம்மதித்துவிட்டார்கள். அதற்கப்புறம் நான்கு மாதங்கள் எங்கள் வீட்டில்தான் இருந்தார் ரஜனிகாந்த்' என்று சிரித்தார் திருமதி ரெஜினா.

''அன்றைக்கு இரவு நன்றாகத் தூங்கிய ரஜனி மறுநாள் டாக்டருக்குப் போன் செய்து, முந்தைய நாள், தான் நன்றாகத் தூங்கியதைச் சொன்னார். அவர்களுக்கெல்லாம் ஒரே ஆச்சரியம்.

''எப்படி இதை நீங்கள் சாதித்தீர்கள்? நாங்கள் மார்பியா கொடுத்தும் கூட எங்களால் அவரைத் தூங்க வைக்க முடியவில்லை'' என்று பின்னால் என்னுடன் பேசும்போது டாக்டர் செரியன் ஆச்சரியப்பட்டார்.

''நீங்கள் எவ்வளவு பெரிய அற்புதத்தைச் செய்து கொண்டிருக்கிறீர்கள் என்று உங்களுக்குத் தெரியுமோ என்னவோ? நம்பிக்கை விட்டுப் போன ஒரு மனிதனுக்கு மறு வாழ்வு கொடுத்துக் கொண்டிருக்கிறீர்கள்!'' என்றார்.

ஆனால் பத்திரிகைகளில் இது விஷயமாக என் பெயர் அடிபட்டுப் பிரபலமாகிவிடுவேனோ என்ற பயம் எனக்கு அதிகரித்தது. நல்லவேளையாக அப்படி ஒன்றும் நடக்கவில்லை. நான் ரஜனியின் நிலைமையைப் போனில் டாக்டர்களுக்குச் சொல்வதுதான் அவர்களின் வழியாகப் பத்திரிகைகளுக்குச் சென்றது. என் குழந்தைகளுக்கு இதையெல்லாம் பார்க்கப் பார்க்க ஆச்சரியமாக இருந்தது.

''இந்தக் காலங்களில் ரஜனி என்மேல் வைத்திருந்த தாயன்பு வளர்ந்துகொண்டே வந்து, என்னுடைய மகனாகவே மாறிவிட்டார். அவர் குடிப் பழக்கத்தையும், ஜரிதா பீடா போடுவதையும் குறைத்துக்கொண்டு விட்டார்.

என்னுடைய காரிலேயே, சில வேலையாட்களுடன் படப்பிடிப்புக்கு அனுப்பி வைத்தேன். அவருக்கு எரிச்சலூட்டும் சூழ்நிலைகளிலிருந்து அவர் விலகியிருக்கும்படி அவர்கள் பார்த்துக் கொண்டார்கள். படப்பிடிப்பு முடிந்தவுடன் நேராக வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்து விடுவார்கள். கொஞ்சம் கொஞ்சமாக இவருடைய நிலைமை முன்னேற ஆரம்பித்தது.

அவருடைய கடவுள் பக்தியும் நம்பிக்கையையும் நான் தெரிந்து கொண்டேன். அவருடைய ஒவ்வொரு சிறப்புக் குணமும் வெளிவர ஆரம்பித்தது. அடிப்படையில், நல்ல பண்புகளைக் கொண்டவர் ரஜனி; யாராவது தனக்கு ஒரு நல்லது செய்தால் அதை மறக்காத நன்றிக் குணம் அவரிடம் உண்டு.

கடவுள்தான் ரஜனியை என்னுடைய பார்வைக்குக் கொண்டு வந்திருக்க வேண்டும். இல்லையென்றால், டாக்டர்கள் கூட நம்பிக்கை இழந்து இனி ரஜனியைக் குணப்படுத்த முடியாது என்று கைவிட்டபோது, ஒருவித மருந்தும் இல்லாமல் சாதாரண மனிதனாக மாறினார் என்றால், அதுகடவுளின் சக்தி என்று சொல்லாமல் வேறென்ன சொல்வது?



நாங்கள் அவருக்குக் கொடுத்ததெல்லாம் அவர் அமைதியாக இருக்க வீடு, நிறைய அன்பு, எங்களுடைய பிரார்த்தனைகள் இவ்வளவேதான்.

மே மாதம் நான் என் கணவருடன் வெளிநாடு போக வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. இதை ரஜனியிடம் சொல்லி, அவர் தொடர்ந்து எங்கள் வீட்டில் இருக்கலாம் என்றபோது அவர் ஒரு குழந்தையைப் போல வருந்த ஆரம்பித்தார்.

''நீங்கள் இல்லாமல் நான் என்ன செய்வேனோ, தெரியவில்லையே அம்மா!'' என்று புலம்பவே ஆரம்பித்து விட்டார்.

நான் ஜூனில் இந்தியாவுக்குத் திரும்பியபோது அவர் முழுமையாகக் குணமடைந்து விட்டதைப் பார்த்துக் கடவுளுக்கு நன்றி தெரிவித்தேன். பின்னர், அவருடைய வாழ்க்கையை ஒழுங்குபடுத்திக் கொள்ள வேண்டும் என்பதையும், பண விவகாரங்களில் கண்டபடி செலவழிக்காமல் இருக்க வேண்டும் என்பதையும் சொன்னேன்.

அப்போதுதான் அவர், தான் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு வாழ்க்கையில் 'செட்டில்' ஆகி விட வேண்டும் என்றார். கொஞ்சம் கொஞ்சமாகத் தம் வாழ்வைச் சரியாக அமைத்துக் கொள்ள ஆரம்பித்து விட்டார் அவர்.

இப்போதும்கூட அவர் அடிக்கடி எங்களை வந்து பார்ப்பார். இந்தத் தாயாரின் ஆசீர்வாதங்கள் என்றைக்கும் அவருக்கு உண்டு.'' என்று மனம் நெகிழக் கூறினார் திருமதி ரெஜினா வின்சென்ட்.

ஜானகி வெங்கட்ராமன்

காப்பிரைட்: 'அசைட்'



# அவள்

## ஒவ்வொரு பெண்ணின் வாழ்க்கையும் ஒரு கதை; ஒரு படிப்பினை!

'முப்பது கோடி முகமுடையாள்' என்று பாரத தேவியைப் பாடினார் பாரதி. அவர் பாடும்போது இருந்த ஜனத்தொகை இப்போது இரு மடங்காகி, பெண்கள் மட்டும் முப்பது கோடியாய் இருப்பார்கள்.

முப்பது கோடி முகங்கள்! நமது பெண்களுக்குத்தான் எத்தனை முகங்கள் எத்தனை விதங்கள்! எத்தனை குணங்கள்!

ஆணுக்குப் பெண் சரிநிகர் சமானம் என்ற சர்ச்சை வளர்ந்து உரிமை முழக்கம் ஒலிக்கின்ற நேரத்தில், அப்படிப்பட்ட உரிமைகள் தங்களுக்கு வழங்கப் பட்டிருக்கின்றனவா என்றுகூடத் தெரிந்திராத பாமரப் பெண்கள்தான் இந்தப் பாரத தேசத்தில் அதிகமாக இருக்கிறார்கள்.

அவர்களுக்கடுத்து, "பெண்ணாகப் பிறந்து விட்டாலே இப்படிதான் வாழவேண்டும்" என்று சாஸ்திர சம்பிரதாயங்கள்படி தங்களுக்குள்ளே வரையறை செய்து கொண்டு நாலு சுவர்களுக்குள்ளே வாழ்ந்து கொண்டிருக்கிற பெண்மக்கள்!

அதே சமயம் புற உலகுக்குத் தெரியாமல் தாங்களாகவே உரிமைகளை அபரிமிதமாக அபகரித்துக் கொண்டு ஆண்கள் மேல் ஆதிக்கம் செலுத்துகிறவர்களும் உண்டு.

நாகரிகம் என்ற மோகத்தால் நலிந்தவர்கள் உரிமை பேசி உன்னதமான உறவுகளை இழந்தவர்களும் பொறுமையால் அழிந்தவர்களும் உண்டு. சீர் கெட்டவர்களும் உண்டு.

ஒவ்வொரு பெண்ணின் வாழ்க்கையும் ஒரு கதை. ஒரு படிப்பினை.

பெண்களைப் பற்றித் தெரிந்து கொள்வதில் ஆண்களை விடப் பெண்களுக்கே ஆர்வம் அதிகம் என்பார்கள். அப்படி அறிந்து கொள்வதும் நன்மைக்கே என்ற எண்ணத்தில் பிறந்தது தான் இந்த "அவள்"

நவரத்தினங்கள் போல ஒன்பது குழந்தைகள். இத்தனைக்கும் நடுத்தரக் குடும்பம் தான். ஆனாலும் அந்தப் பெற்றோர்கள் அந்தக் குழந்தைகளை வளர்த்து ஓரளவு கல்வியும் கொடுத்துக் கல்யாணங்களும் செய்து கடமையை முடித்தார்கள்.

அந்தக் காலமாக இருந்ததால் குழந்தைச் செல்வம் ஒரு தொல்லையாகத் தெரியவில்லை. அவற்றையும் ஒரு செல்வமாகவே கருதினார்கள்.

அந்த ஒன்பதிலே அவள் ஒருத்தி. வைரம் போலப் பிரகாசித்தாள். மூத்த பெண்ணும் அடுத்துப் பிறந்த மகனும் மூத்தவர்களாக இருந்தாலும் அவள்தான் அம்மாவின் ஆசைப் பெண்ணாக இருந்தாள்.

அம்மா எப்படி மடமடவெனக் குழந்தைகள் பெற்றாளோ, அதே போல் குழந்தைகள் வயசுக்கு வந்ததும் மடமடவெனத் திருமணம் நடத்த ஆரம்பித்தாள்.

மூத்தவளுக்குத் திருமணம் முடிந்தால் அடுத்தது மகனுக்கல்ல; அவளுக்குத்தான்.

அந்தக் குடும்பத்திலேயே அவள் அம்மன் சிலையைப் போல மூக்கும் முழியுமாகத் திரண்டு மதர்ப்பாக இருந்தாள். அழகு. அதோடு அவள்தான் குடும்ப சம்பிரதாயத்தை மீறி முதலில் ஹைஸ்கூல் வரை படித்தவள். வீட்டிலே வசதி இல்லை யென்பதற்காகத் தோழி வீட்டிலே வீணை வாசிக்கக் கற்றுக் கொண்டாள்.

மூத்தவளின் திருமண வாழ்க்கையின் ஆரம்ப அத்தியாயங்கள் அவ்வளவு சந்தோஷமாக இல்லை. அடிக்கடி பிறந்தகம் வந்துவிடுவாள். அவள்தான் அவளுக்கு ஆதரவாக இருந்தவள்.

மூத்தவளின் திருமண வாழ்க்கையின் அதிருப்திகளே அவளது திருமணத்தைப் பற்றிய சிந்தனைக்கு இடம் தரவில்லை.

அம்மாவுக்கு ஆதரவாக வீட்டு வேலைகளைச் செய்வாள். தனது தம்பி, தங்கைகளைக் குளிப்பாட்டி, உடுத்தி, பள்ளிக்கு அனுப்பி வைப்பாள். குடும்பத்து வரவு செலவுகளைப் பார்த்துக் கொண்டவளும் அவளே. அவளது உதவி இருந்ததாலே அம்மா கவலையற்றிருந்தாள்.

அக்கம் பக்கத்தில் உள்ளோர் அவள் உதவியை நாடி வருவார்கள். அம்மாவுக்கும் தெரியாமல் அவள் அவர்களுக்கு உதவுவாள். பிறராலும், யாசகம் கேட்டு வருவோர்களாலும், அவள் 'மகாலட்சுமி' என்றும் 'தர்மிஷ்டி' என்றும், 'இந்த மாதிரி சகல குணங்களும் ஒருசேர அமையப்பெற்ற பெண் எங்கே இருக்கப் போகிறாள்?' என்றும் புகழப்பட்டாள்.

ஜன்னல்தான் அவளது உலகம். பத்திரிகைகள், சில சமயம் சினிமாக்கள் அவளது உலக அனுபவப் பாடங்கள்.

அவள் எதிரே வந்தால் போகிற காரியம் வெற்றியடையும், அவள் கையில் பணம் வாங்கிச் சென்றால், ஒன்று பத்தாகும். அவள் 'போணி' செய்தால் வியாபாரம் செழிக்கும் — இப்படியெல்லாம் அவளைப் பற்றிய விமரிசனங்கள்.

இதன் தொடர்ச்சி, இப்படிப்பட்ட அழகு, அறிவு, குடும்பப் பொறுப்பு, தர்ம சிந்தனை கொண்ட பெண்ணை அடையப் போகிறவன் பாக்கியசாலி என்றும், இப்படிப்பட்ட பதவிசான பெண்ணுக்கு ஏற்றதான பையன் அமைவான் என்றும் ஆரூடங்கள்.

அம்மா, மூத்தவள் திருமணம் முடிந்து, முதல் குழந்தை பெற்று, அவள் வீட்டுக்கு அனுப்பிய நாளிலிருந்து அவளுக்கு ஒரு வரனைத் தேடிக் கொண்டுதான் இருந்தாள்.

பெண் பார்க்கும் படலம் தொடர்ந்து கடைசியாக ஒருவர்—நல்ல அரசாங்க ஊழியம், நல்ல குடும்பம் என வர, ஜாதகம் பொருத்தம் அமைய, தாம்பூலம் மாற்றப் பட்டுத் திருமணமும் நடந்தது.

சந்தோஷமாக நடந்த திருமணம் முடிந்து அவள் மாமியார் வீட்டுக்குச் செல்லும்போது தான் எவ்வளவு சோகம்! வீடு அழுதது. அந்த வீதியே விழுதது.

மண வாழ்க்கை அவள் கனவு கண்டபடியே ஆரம்பித்தது. முதல் ஆண்டிலேயே தனிக் குடித்தனம்.

ஒரு பெண் குழந்தைக்குத் தாயானாள். பிடித்தது சனியன். கணவனுக்குப் பொல்லாத நோய். தனி வீடு சென்றதாலேயே மாமியார் வீட்டிலும் ஆதரவில்லை. நோய் அடிக்கடி தொடர்ந்ததாலே பிறந்த வீட்டு ஆதரவும் அவ்வளவாக இல்லை. தானே தன்னந் தனியாகத் தான் கொண்டு வந்த சீர் செட்டுகளை விற்றும், அடகு வைத்தும் கணவனைக் காப்பாற்றினாள்.

இரண்டாவது குழந்தை. பெருத்த ஏமாற்றம். பெண்ணாகவே பிறந்தது.

அதன் பிறகு போகாத கோயில் இல்லை. அனுஷ்டிக்காத விரதங்கள் இல்லை. மூன்றாவது மகனாகப் பிறக்க வேண்டும். அதோடு முற்றுப்புள்ளி வைத்துவிடலாம் என்று நினைத்தாள்.

ஐந்துபெண் பெற்றால் அரசனும் ஆண்டி 'என்பார்கள். ஐந்துபெண்களுக்குப் பிறகும் விரதம் தொடர்ந்தது!

அப்பாடா! ஆறாவதாக ஒரு பையன். அவள் அடைந்த ஆனந்தத்துக்கு எல்லையே இல்லை.

ஆறு குழந்தைகள். வாழ்க்கை தள்ளாட்டம் போட்டது. இதற்குள் மூத்த பெண் பள்ளிப் படிப்பு முடித்து கல்லூரிக்குச் சென்றாள். தன் மக்களை எப்படியும் அறிவாளிகளாக மாற்ற உறவுக்காரர்களை விட உயர்ந்த மக்களாக ஆக்கிவிட வேண்டும் என்று ஆசை.

கடன்கள் வளர்ந்தன. கட்டிய கணவன் மற்றவர்களை மாதிரி கிம்பளமோ வேறு தொழில் செய்து பொருளீட்டவோ தெரியாத, மனைவியை மட்டுமே நம்பி வாழ்ந்தவன். அவளுக்கு மற்றவர்களைப் பார்க்கப் பார்க்கப் பொறாமை. தன்னை விடத்தாழ்ந்த தலையில் தட்டுத் தடுமாறிக் குடும்பம் நடத்தியவர்களை அவள் பார்க்கவில்லை அதைவிட, தம்மை விடத் தாழ்ந்திருந்தவர்கள் உயர்ந்து போய் விட்டார்களே என்று பேராசை!

இந்தச் சமயத்திலும் அவள் தமது உறவுக்காரர்களை வரவேற்று அவர்கள் செய்யும் உபசாரங்களுக்கு மேலாகவே உபசரித்துத் தன்னை உயர்த்திக் காட்டவே செய்தாள். போலி ஜம்பம். கடன்தான் வளர்ந்தன.

ஏமாற்றங்கள் அவளைப் பல வகையிலும் முற்றுகையிடும் போது கல்லூரியில் படிக்கிற தனது பெண் ஒரு பையனுடன் வெளியே சுற்றுகிறாள் என்ற ஒரு செய்தி அவளுக்கு எட்டியது. எந்த மகள் படித்து முடித்து ஓர் ஆண்மகனைப் போல சம்பாதித்துப் போட்டுத் தன் குடும்பத்தை மற்றவர்களுக்குச் சரிநிகராகக் கொண்டு வருவாள் என்று நினைத்தாளோ, அந்தப் பெண் இப்படி ஒரு வாலிபனுடன் சுற்றுவதைப் கேள்விப்பட்டாள். அவளது கடைசி நம்பிக்கையும் தூள் தூளாகி வெடித்தது.

ஒரு நாள் அவளுக்கு என்ன தோன்றியதோ, குழந்தைகள் பள்ளி சென்றிருந்த சமயம், கணவன் ஊரில் இல்லாத சமயம் தற்கொலை செய்து கொண்டாள்.

ஆறு குழந்தைகள். முதல் ஐந்தும் பெண்களாகப் பிறந்து அதிருப்தி வளர்ந்து, கடைசியில் தனது லட்சியமாக ஒரு மகனையும் பெற்றுச் சிறிதும் மனம் மாறாமல் வளர்த்த அந்தத் தாய் ஆறையும் அனாதையாய் விட்டுச் செல்கிற அளவுக்கு மனம் மாறிய காரணம் என்ன?

வாழ்க்கையில் வளர்த்துக் கொண்ட ஆசைகளா, நம்பிக்கைகளா? அல்லது மற்றவர் போல் நம்மாலும் வாழ முடியவில்லையே என்ற ஏக்கமா, ஏமாற்றமா? அவள் ஒரு புதிராகவே போய்விட்டாள்.

—அனந்த்



# தோற்றுப் போனவன்

பாலகுமாரன்

திருவரங்கத்துக்குப் போனவர்கள் எல்லாம் திரும்பி வந்துவிட்டார்கள். வயதானவர்களைத் தவிர, பெண்டு பிள்ளைகளைத் தவிர, கிராமத்திலிருந்த அத்தனை பேர்களும் திருவரங்கத்துக்குப் போயிருந்தார்கள். அந்தப் பெண்ணைத் தந்தப் பல்லக்கில் அமர்த்திப் பட்டுத் திரைகள் மூடி வெண்சாமரமும் பரந்த வெள்ளைக் குடையும் ஒற்றை முரசுமாய் ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து திருவரங்கம்வரை நடந்தே போய்விட்டு வந்தார்கள். குதிரையோ யானையோ கூட வரக்கூடாது என்று சொல்லி விட்டார்கள். அந்தப் பெண்ணின் வாகனத்தை விட, அவள் ஏறிய தந்தப் பல்லக்கை விட உயரமானதாகவும் விரைவானதாகவும் · போகும் வாகனம் கூடாது என்று சொல்லி விட்டார்கள். அத்தனை பேரும் மாற்றி மாற்றிப் பல்லக்கைத் தூக்க வேண்டும்என்று கட்டளையிட்டார்கள். ஊர்ப் பெரியவர்கள் இட்ட இந்தக் கட்டளையை எதிர்த்து யாரும் பேசவில்லை. இது எதிர்த்துப் பேசும் விஷயம் இல்லை.

திருவரங்கம் போய்ச்சேரும்வரைக்கும் இது என்னவாய் முடியும் என்றுயாருக்கும் தெரியவில்லை. திருவரங்கம் கோவிலுக்குள் போன உடனேயே அது நடந்து விட்டது. பல்லக்கோடு காவிரியில் இறங்கி இடுப்பாழம் வரை ஆற்றில் நகரும்போதே மாற்றி மாற்றி பல்லக்குத் தூக்கிகள் முழுக்குப் போட்டு நேரே கோவிலுக்குள் போய் பல்லக்கை இறக்கி, பட்டுத் துணியை அகற்றி பூங்கோதையை நிவேதனம் பண்ணுகிற மாதிரி பெரியாழ்வார், சுவாமிக்கெதிரே நீட்டியது மட்டும்தான் ஞாபகம் இருக்கிறது.

பெரியாழ்வார் கதறி அழுதபோது பயமாகிப் போய்விட்டது. பக்கத்திலிருந்த பவபூதியை மாதவராயன் குலுக்கி விசாரித்தான். பூபதி தலையைக் குனிந்து 'அது அவ்வளவுதான்' என்று சொன்னான். பூங்கோதை ஸ்வாமியிடம் போய்விட்டாளாம். மாதவராயனுக்கு மிகவும் வேதனையாக இருந்தது. பூங்கோதையை அவனுக்கு ஐந்து வயது முதல் தெரியும். அந்தப் பெண்ணைத் தோளில் வைத்துக் கொண்டு நிறையப் பாட்டுப் பாடியிருக்கிறான். அவள் கையால் எத்தனையோ முறை நீர் மோரும் வெல்லமும் சாப்பிட்டு இருக்கிறான். கூந்தப் பனை மட்டையை நெருப்பில் காட்டி மாவலி சுத்தியிருக்கிறான். கோதை இருக்கிறவரையில் கார்த்திகைக்குத்தான் மாவலி என்பதே போய் விட்டது. அவனுக்காகவே நூற்றுக் கணக்கில் பனை மட்டைகளைச் சேர்த்து வைத்துக் கொள்வதாயிற்று.

''மாதவராயா மாவலி சுற்றேன். சங்கு மாதிரி சுற்றேன், சக்கரம் மாதிரி சுற்றேன்''

கோதைசொன்னபோது மாட்டேன் என்று யாருக்குமே மனசுவந்ததில்லை. முழுவேகத்தில் விஷ்ணு சக்கரம் மாதிரி சுற்றும்போது பூங்கோதை அவன் எதிரே கண் முழுக்க ஒளி படர கைகள்கூப்பி, 'கோவிந்தா கோவிந்தா' என்று அலறினது இன்னும் காதில் கேட்கிறது.

பவபூதி கோதைக்கு முறைப் பையன் அந்தணன். அதனால் பூபதி கோதை இருக்கும் பக்கம் கூட வரமாட்டான். ஊரில் அத்தனை பேரும் கோதையை நேசித்தனர். பூபதிக்கு மட்டும் அவளை நேசிக்க முடியவில்லை. முறைப் பெண்ணை எப்படி நேசிப்பது? வேண்டுமானால் கல்யாணம் செய்து கொள்ளலாம். ஆனால் ரொம்ப சீக்கிரமே தெரிந்து விட்டது. பூபதிக்குக் கல்யாணம் ஆகாது என்று. முறைப் பெண்ணே மணந்து கொள்ள மறுத்துவிட்டபோது வேறு யார் பெண் கொடுக்க வருவார்கள்?

பவபூபதி இதை மாதவராயனிடம்சொல்லி வருத்தப்பட்டான். மாதவராயன் இதை பவபூபதியின் அப்பாவிடம் பேசினான். பால் பானைகளை வீட்டில் இறக்கி தும்புக் கயிற்றைத் திண்ணைத் தூணில் கட்டிய பிறகு, ''சிறிய நம்பியைப் பார்க்க வேதனையாக இருக்கிறது'' என்று கைகூப்பிப் பேசினான். பவபூபதியின் அப்பாவுக்குப் புரிந்து விட்டது. ''கௌபீனத்தைக் கிழித்துவிட்டு அவனைப் போகச் சொல்'' என்று சொல்லிப் போய்விட்டார்.

இனிமேல் தரிக்கவே முடியாது என்கிற போதுதான் கௌபீனக் கயிற்றை அறுத்தெறிவார்கள். வெறும் பன்னாடையை இடுப்பில் சுற்றிக் கொண்டு ஊரை விட்டுப் போய்விடுவார்கள். அப்படிப் போனவர்கள் திரும்பி வந்ததாகச் சரித்திரமே இல்லை. கிட்டத்தட்ட கஷாயம் ஊற்றிக்கொள்கிற ஸ்திதி அது.

மாதவராயன் இதைப் பவபூபதியிடம் சொல்லவில்லை. பவபூபதி கௌபீனத்தையும் அறுக்காமல், வீட்டுக்கும் போகாமல் வெகுநாள் வெளியிலேயே சுற்றிக் கொண்டிருந்தான். பவபூபதிக்கு உணவு ஒரு பிரச்னை இல்லை. எந்த ஆயர் வீட்டிலும் அரிசியும் தயிரும் கொடுப்பார்கள். பவபூபதியும் வெறுமே கைநீட்டிக் கேட்க மாட்டான். கோலம் போட்ட திண்ணையில் அமர்ந்து கொண்டு சாம வேதம் சொல்வான். ருத்ரம் சொல்வான். இந்த வீட்டுக் கூரையைப் பொத்துக் கொண்டு ஸ்வர்ணமாகப் பொழிய வேண்டும் என்று லட்சுமி தேவியை வேண்டுவான். அவன் குரல் · கிராமத்தில் பல பேருக்குப் பிடித்திருந்தது. அவன் சொன்னது நடக்குமோ என்று நம்பிக்கை இருந்தது.

பவபூபதி பகல் வேளைகளில் மாதவராமன் மாடு மேய்க்கும் இடத்துக்குப் போவான். தானும் தமிழில் பாட்டெழுத வேண்டும் என்று முயற்சி செய்வான். இடுப்

பில் செருகியிருந்த ஓலைத் துணுக்குகளை, எடுத்து உரக்கப் படித்து மாதவராயனிடம் சரியா என்று கேட்பான். சில சமயம் நப்பின்னைக்கும் படித்துக் காண்பிப்பான். நப்பின்னை மாதவராயனை நேசிக்கிறவள். அவன் எதிர் வீட்டில் வசிப்பவள்.. அவளை மாதவராயன் ஒருமுறை ஓநாயிடமிருந்து காப்பாற்றியிருக்கிறான். நப்பின்னைக்குத் தூரத்து உறவாகக் கூட முறைப் பையன் யாரும் இல்லை. நப்பின்னையின் தாயார் மாதவராயன் உள்ளே வந்தால் உட்காருவதில்லை. தனக்கென்று நூறு மாடுகள் வந்தவுடன் மாதவராயன் நப்பின்னையைக் கல்யாணம் செய்து கொள்வான். பகல் வேளைகளில் நப்பின்னை சினை மாடுகளுக்குத் தண்ணீர் ஊற்ற வருவான். ஆண்டாளைப் பற்றி





### ஒரு புள்ளி விவரம்!

ஜே. கிருஷ்ணமூர்த்தியின் கூட்டங்களுக்கு, போன வருடத்தை விட இந்த வருடம் பெண்கள் அதிகமாக வந்திருந்தார்கள். பெண்கள் அறிவு ரீதியாக முன்னேறத் தொடங்கி விட்ட நிலைக்கு இதுவும் ஒரு சான்று.

---

ஆயிரம் ஆயிரமாய்க் கதை சொல்வான். ''மாடு புல் மேய்கிறது. மாதவராயன் காட்டை மேய்க்கிறான். நீ இங்கே மல்லாந்து படுத்து மேகத்தை தேய்த்துக்கொண்டிருந்தால் எப்படி? போ. போய் கோதையிடம் பேசு'' என்று சொல்லுவான். அவன் வார்த்தையை நம்பி கோதையிடம் போய் அவமானப்பட்டாயிற்று.

சமித்து மூட்டையும், மூங்கில் அரிசியும் அவன் வீட்டில் இறக்கி குசலம் விசாரித்த போது கோதை வெளியே வரவேயில்லை. பெரியாழ்வாரும் பிடிகொடுத்துப் பேசவில்லை. அவன் விடை பெற்றுக்கொள்ள எழுந்த போது பூங்கோதை உரக்கப் பாடுவது காதில் கேட்டது.

''வானிடை வாழும் அவ்வானவர்க்கு மறையவர் வருத்த வேள்வி அவிகானிடைத் திரிவதோர் நரி புகுந்து கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப''.

பாட்டை முடிப்பதற்கு முன்னால் பவபூபதி எழுந்து விட்டான். மிச்சத்தைத் தெருவில் நின்றபடி கேட்டான். அவள் தேவர்களுக்கு உண்டான அவி பொருளாம். மிக மிக உயர்ந்தவளாம். பவபூபதி நரியாம். நாயாம். அவன் அடிக்கடி வந்து போய்க் கொண்டிருப்பதை அப்படி இடித்துக் காட்டுகிறாளாம்.

மாட்டேன், மாட்டேன் என்று சொல்கிற பெண்ணை மறுபடி மறுபடி பார்ப்பது தவறுதானே என்று பவபூபதிக்குப் பட்டது. நரி, நாய் என்று ஏகம் அளவுக்கா நடந்து கொண்டோம் என்று ஆத்திரம் வந்தது. ஒரே இனத்தில் ஒரே இடத்தில் பிறந்த சகமனிதரை அவளை விட்டானே இத்தனை அலட்சியப் படுத்துவது ஆகாத்தியம் என்று பட்டது. எனக்கு என்ன குறை என்ற கேள்வி வந்தது.

லேசாய் மூக்கில் ஒரு வளைவு. உயரம் சற்றுக் குறைவு. வடமர் நிறம் இல்லாமல் கொஞ்சம் கறுப்பு.'நான் அழகில்லை. ஆனால் அகோரமும் இல்லையே. பாட்டு எழுதுகிற ஆசையால், பூஜை புனஸ்காரம் செய்கிறவள் என்பதால் என்னைப் புறக்கணிக்கிறாள் என்று நினைத்தேன். நிஜமாகவே இவள் சுவாமியைக் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறாளா? கடவுளைக் கல்யாணம் செய்து கொள்வது என்றால் என்ன? தஞ்சாவூர் செங்கமல தாசி செய்வது மாதிரியா? ச்சு... ஆண்டாள் அந்தணர் குலம் ஆயிற்றே வேறு எவ்விதம்தான் இது நடக்கும்? ''வாரணம் ஆயிரம் சூழ வலம் வந்து...'' என்று நப்பின்னை ஒரு பாட்டுப் பாடினாளே எங்கள் ஆண்டாள் எழுதியது என்று கண்கள் செருகப் பேசினாளே. அது மாதிரியே நடக்குமோ? பார்ப்பன சிட்டர்கள் பறந்து வந்து ஏற்றி அப்பா! எத்தனை அற்புதமான வரி அது. ஒருவேளை இந்த வரியை என்னை நினைத்துக் கொண்டுதான் பாடினாளோ? வாசலில் நின்று அவள் திருமணத்தின்போது ருத்ரம் சொல்லிக் காசு வாங்கிக் கொண்டு போ என்கிறாளோ?

இத்தனை அலட்சியம் ஒரு பெண்ணுக்கு ஆகுமோ? திருமணம் என்பது மனிதர்களுக்குள் நடப்பதுதானே? மனிதன் மிருகத்தை மணந்து கொண்டால் அது திருமணம் என்று சொல்ல முடியுமா? அதே விதமாய் அறிய முடியாத தேவனை என்னை மணந்துகொள் என்று அழைப்பதும் நியாயமாகுமோ?

கோதை, நீ ஏன் மனிதர்களை வெறுக்க ஆரம்பித்து விட்டாய்? வெறுக்க தக்கது என நீ மனிதனிடம் கண்டது எது? நிலையாமையா? அது உனக்கும் உண்டல்லவா? கோதை நீ என்னை மட்டும் இல்லை. இந்த ஊரையே பாழ்படுத்தப் போகிறாய் என்று நினைக்கிறேன். ஆணைத் தேடி பெண் ஏங்குவதும், பெண்ணைத் தேடி ஆண் அலைவதும் இயல்பு என்பதை ஏன் மறந்து விட்டாய்? ஆண் எனப்படுபவன் விஷ்ணு என்று சொல்வது ஒரு உபசாரத்துக்காக. உபமான சந்தோஷத்துக்காக. இது உண்மையல்ல கோதை. ஆனால் இதையெல்லாம் கோதைக்கு யார் எடுத்துச் சொல்ல முடியும்? எல்லாம் வல்ல அவனை எனக்கும் பிடிக்கிறது. அவனுள் நீயும் அடக்கம், நானும் அடக்கம். நீயும் நானும் சந்தோஷிக்கையில் அவன் சந்தோஷம் அடைகிறான். நாம் கோபம் கொள்ளும்போது துக்கம் கொள்கிறான். என்னை வேதனைப்படுத்திவிட்டு நீ யாரைச் சந்தோஷிக்கப் போகிறாய்? குழந்தையை மிதித்துவிட்டா கோவில் தேர் ஓட்டுவார்கள்?'

பவபூபதி அதற்குப் பிறகு கோதையைத் தேடிப் போகவில்லை. ஆனால் கோதையின் செயலால் ஊர், மாறிக் கொண்டிருந்ததைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

மாதவராயன் ஒரு மாட்டை மடக்கிப் பிடித்தபோது சறுக்கி விழுந்துவிட்டான்.

மதுரையில்
அழகிய வேலைப்பாடுள்ள
தங்க நகைகள் & வெள்ளிப்பாத்திரங்களுக்கு
நம்பிக்கையான ஸ்தாபனம்

# R. R. C.

**R. ராமனாதன் செட்டியார்**

**கீழ ஆவணி மூலவீதி, மதுரை-1**

தொலைபேசி: 22200 தந்தி: "ஜுவல்லரி"

## நன்றி அறிவிப்பு

நான் பெருங்காய டப்பாவை எங்கே வைத்தேன் என்ற திணறல், டிபன் பாக்ஸை ஆபீஸிலேயே மறந்து விட்டு வந்த தவிப்பு, எந்த பொருளை எங்கே வைத்தோம் என்ற மறதி, எந்த வேலையிலும் உற்சாகமின்மை போன்ற குறைபாடுகளால் சிரமப்பட்டேன். என்னுடைய சக கல்லூரி மாணவி வேதாவை சந்தித்து தவிப்பைச் சொன்னேன். அவள் கல்லூரி நாட்களிலிருந்தே ஞாபக சக்தி அளிக்கும் **"ANAC MEMORY PILLS HOMOEO"**—வை ஹோமியோ கிளினிக் & ரிசர்ச் சென்டர், 5, சீதா நகர் முதல் தெரு, ஸ்டர்லிங் ரோடு பஸ் ஸ்டாப், S.A.P. கல்யாண மண்டபம் பின்னால், நுங்கம்பாக்கம், சென்னை-34ல் பெற்று சாப்பிட்டதால் நல்ல ஞாபக சக்தி, சுறுசுறுப்பு, தன்னம்பிக்கை பெற்ற அனுபவத்தை சொன்னாள். அதன்படி நானும் **"ANAC MEMORY PILLS HOMOEO"**—வை மேற்கண்ட விலாசத்திற்கு நேரில் சென்று வாங்கி உபயோகித்தேன். நல்ல ஞாபக சக்தி, வீட்டு வேலைகளில் சுறுசுறுப்பு, எழுதப் படிக்க ஆர்வம் பெற்றிருக்கிறேன். குறை தீர்த்த எங்கள் குலதெய்வம் ஸ்வாமிமலை சுப்பிரமணியரை குடும்பத்துடன் சென்று தரிசித்து வந்தோம். வேதாவுக்கு எங்கள் குடும்பத்தின் நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

**(Sd.) M. தருமாம்பாள்**
**தெற்கு வீதி, திருவையாறு (தஞ்சை ஜில்லா)**

**10 கிராம் சுமார் 120 மாத்திரைகள் அடங்கிய பாட்டிலின் விலை:**

சிறியவர்களுக்கு ரூ. 6/- பெரியவர்களுக்கு ரூ. 7-50

தபால் ரிஜிஸ்டர் செலவு ரூ. 3/-

முன் பணம் அனுப்ப வேண்டும் வி.பி.பி.யில் கிடையாது

நப்பின்னையும் அவள் தோழிகளும் கை கொட்டிச் சிரித்தார்கள்.

''எங்கள் கோவிந்தன் குழல் கொண்டு ஊதினபோது'' என்ற பாட்டைக் கும்ப லாய்ப் பாடினார்கள். கோவிந்தன் குழல் ஊதினால் பசுக்கள் தானாக வருமாம். மடி நிறை பால் சுரந்து தரையை நனைக்குமாம்.

''மாதவராயா! நீ உரத்த குரலில் பாடி விருப்பாய். அதுதான் என் மாடு மிரண்டு போகிறது'' என்று இடைச்சி அவனைக் குறை கூறினாள். காலை நேரத்தில் பெண்கள் தயிர் கடைவதை அறவே விட்டுவிட் டார்கள். மார்கழியும் ஆடியிலும் மட் டுமே நோன்பு நோற்கிறது என்பதை மறந்து விட்டார்கள். ஒவ்வொரு விடி விலும் கோவிலுக்குப் போய், நெடு நேரம் பாடினார்கள். ஆற்றுத் துறைக்கு ஆட்கள் போக முடியாதபடி கும்மாளமிட்டார்கள். நப்பின்னை பகல் பொழுதில் ஒரு மாமரத்தை வலம் வந்து அதை மாதவா மது சூதனா என்று கொஞ்சிக் கொண்டிருக்கிறாள். பெண் களின் கவனிப்பு குறைந்ததால் மாடுகள் நோயுறத் தலைப்பட்டன. தோள் வலிக்கக் கறந்து வைத்த பாலை குழந்தைகள் உருட்டி விட்டன. குழந்தைக்குத் திருஷ்டி கழித் தார்கள். கொண்டைப் பூவும், மயிற் பீலியும், தங்க அரை ஞாணும் மாட்டி அழகு பார்த் தார்கள்.

வேற்றூரிலிருந்து ஆண்கள் துணையுடன் பெண்கள் கோதையைப் பார்க்க வந்தார்கள் காவலுக்கு வந்த ஆண்கள் எதுவும் செய் வதற்கு அற்று வெறுமே குந்தியிருந்தார்கள். பொதுவாய் எல்லா ஆண்கள் முகத்திலும் ஒரு விரக்தி படர ஆரம்பித்து விட்டது.

நப்பின்னைக்கும் மாதவராயனுக்கும் கல் யாணம் நடந்தது. சடங்குகள் முடிந்ததும் நப்பின்னை கோதையிடம் போய் நமஸ் கரித்துவிட்டு வந்தாள். மாதவராயனிடம் வந்து இன்னும் ஒரு வருடத்துக்கு ஒன்றும் இல்லை என்று கூறினாள். மாதவராயன் வீட்டுக்குத் திரும்ப மறுக்கிற மாடுகளை புளிய மிளாறினால் அடிக்க ஆரம்பித்தான்.

பவபூபதியைக் கோதை மறுத்ததைத் தொடர்ந்து ஊரும் மறுக்க ஆரம்பித்தது. தன் நிலை மறந்து அழுது கொண்டிருந்த கோதையைப் பற்றியே பேசலாயிற்று. ஊரில் மஞ்சவிரட்டோ உரியடியோ வேண்டா மென்று ஆண்களே தடுத்து விட்டனர்.

திடுமென்று ஒரு விடியற்காலையில் திரு வரங்கம் எந்தத் திசையில் இருக்கிறது என்று தெரியாதவர்கள் எல்லாம் அங்கே பயணப்பட ஆயத்தம் செய்ய ஆரம் பித்தார்கள். பயணத்துக்குத் தயங்கிய ஆண்களைப் பெண்கள் கோபித்துக் கொண் டார்கள். உடுத்த கந்தலோடு ஊர் எல்லையில் அந்த ஊர்வலத்தில் பவபூபதியும் கலந்து கொண்டான். கோவிலுக்குள் மாதவ ராயன் உலுக்கி விசாரித்தபோது இனம் தெரியாத ஓர் இருட்டுக்குள் மூழ்கியிருப் பதைப் போல் உணர்ந்தான். அது அவ் வளவுதான் என்கிற மாதிரி பதில் சொன் னான். பவபூபதிக்கு மந்திரங்கள் மறந்து போயின. மடியில் இருப்பதைப் பிடுங்கி கன்னத்தில் அறைந்து யாரோ மல்லாக்கத் தள்ளின உணர்ச்சி வெகு நேரம் இருந்தது. முகம் அறியாத ஒரு நபர் மீது கோபம் பொங்கியது. ஊர் எல்லைக்கு வந்தவுடன் அங்கே இருந்தபடி கோதை வாழ்ந்த வீட்டை உற்றுப் பார்த்தான். இடுப்பில் இருந்த கௌபீனக் கயிற்றை அறுத்து எறிந்தான். உடைகள் எதுவும் இன்றி வடக்குத் திசையை நோக்கி நடக்கத் தொடங்கினான்.

---

தேன் பாகாய்க் காதில் பாய்ந்தது என்று சொல்வார்கள்.
அது சமீபத்தில் வெளியிடப்பட்ட 'ஒப்பிலியப்பன்' சுப்ரபாதத்தைக் கேட்டபோது
நிஜமானது. சுப்ரபாதம் பாடிய திருமதி சியாமளா சிவராமனின்
குரல் அற்புதம். பின்னணி இசை தெய்வீகச் சூழ்நிலையைக் கண்முன் நிறுத்தியது.
நீதிபதி ராம்பிரசாத ராவ் கலந்துகொண்ட இந்த இசைத்தட்டின்
வெளியீட்டு விழாவில், நீதிபதி கிருஷ்ணசுவாமி ரெட்டியார் இந்து அறநிலைய
ஆணையர் அருச்சுனனுக்கு முதல் இசைத்தட்டை வழங்கினார்.
'இன்ரிகோ'வால் வெளியிடப்பட்ட இந்த சுப்ரபாதத்தை இயற்றியவர் நாடறிந்த பெரும் சமஸ்கிருதப்
பண்டிதர் ஸ்ரீ வி. என். ஸ்ரீ ராமதேசிகாசார்யார் ஆவர்.



**என்னிடமுள்ள பணம் என் மகளின் திருமணத்துக்குத்தான் சரியாக இருக்கும்; பின்னர் வரும் செலவுகளை எப்படிச் சமாளிப்பது?**

**கவலை வேண்டாம். இந்தியன் பாங்கின் மறு முதலீட்டு டெபாசிட் திட்டம் உங்களுக்குக் கை கொடுக்கும்.**

கவலைப்படுவதற்குப் பதிலாக, உங்கள் மகளின் திருமணத்துக்கென நீங்கள் ஒதுக்கி வைத்துள்ள தொகையை இந்தியன் பாங்கின் மறு முதலீட்டு டெபாசிட் திட்டத்தில் போட்டு வையுங்கள். பத்து வருடங்களில் அந்தப் பணம் இரண்டரை மடங்கு பெருகி, மொத்தமாக ஒரு பெரிய தொகை உங்கள் கைக்கு வரும். அந்தப் பணத்தைக் கொண்டு உங்கள் மகளின் திருமணச் செலவுகளை மட்டுமின்றி, அதற்குப் பின்னர் ஏற்படும் மற்ற செலவு-களையும் நீங்கள் சுலபமாகச் சமாளித்துக் கொள்ளலாம்.

**முடிவின்றி பணம் பெருகும்**

இந்தப் பணத்தை நீங்கள் மீண்டும் மறு-முதலீட்டு டெபாசிட் திட்டத்தில் போடலாம். இவ்வாறு உங்கள் பணத்தைப் பெருக்கிக் கொண்டே போகலாம்.

இத்திட்டத்தின் விவரங்களைத் தெரிந்து கொள்ள அருகாமையிலுள்ள இந்தியன் பாங்குக்குச் செல்லுங்கள். எங்களது திட்டங்களையும் விரும்புவீர்கள்; எங்களது சேவையையும் விரும்புவீர்கள்.

இந்தியன் பாங்க்
(இந்திய அரசு நிறுவனம்)



**இந்தியன் பாங்க்**

உங்கள் செல்வச் செழுமைக்கு உதவும் வங்கி

SAA/IB 1468

# பின்னல் கற்றுக்கொள்வோம்


Fig 1

**பி**ன்னல் அடிப்படைகள்: தையற் கலையிலே மிகவும் பழைமையானதும் சுலபமாகச் செய்யக் கூடியதும் பின்னல் வேலை. இதற்கென்று விலையுயர்ந்த கருவிகள் எதுவும் தேவையில்லை. உள்ளத்துக்கு உற்சாகத்தைத் தரும், ஓய்வாகச் செய்வதற்கேற்ற இந்தப் பொழுதுபோக்குக்கு ஈடு வேறு எதுமில்லை. மேலும் கம்பளி ஆடைகளைச் சீக்கிரமாகப் பின்ன முடிவதால் வேலையின் பலனைச் சீக்கிரம் காணவும் முடிகிறது. இதனால் மனசுக்கும் திருப்திகரமான மகிழ்ச்சி ஏற்படுகிறது.

பின்னல் ஊசிகள்: நல்ல பின்னல் ஊசிகள் லேசாகவும், மொழு மொழுப்பாகவும், நேராகவும் இருக்க வேண்டும். பின்னல் ஊசிகளைப் பலவகையாகப் பிரிக்கலாம் — மிகவும் மெல்லிய வகையிலிருந்து பருமனான வகை வரை. ஊசியில் குறிப்பிட்டிருக்கும் எண்ணிலிருந்து அதன் அளவை நம்மால் தெரிந்துகொள்ள முடியும். பருமனான ஊசிகளைக் கொண்டு தடிப்பான கம்பளி நூல்களைப் பின்ன வேண்டும். அதாவது இரட்டைப் பின்னல் நூல் கொண்டு கனமான கம்பளி உடைகள் பின்னுவது போல் மிகவும் மெல்லிய பின்னல் ஊசிகளின் மெல்லிய நூலைப் பயன்படுத்திப் பின்ன வேண்டும்.


Fig 2

**பின்னலைத் தொடங்குவோமா?**

• இடையிடையே கோத்துப் பின்னுவதால் அடர்த்தியான ஒருவகைத் துணியை அமைக்க முடிகிறது. ஒரு வரிசை தையலின் மேல் மறு வரிசைத் தையல் எழும்புகிறது. இடது கையில் ஊசியை ஏந்தி அதில் இருக்கும் தையல்களை வலது கை ஊசிக்கு ஒவ்வொரு தையலாக மாற்றிக் கொள்கிறோம். ஒரு வரிசையைப் பின்னி முடித்தவுடன் வலது கை பின்னலை இடது கைக்கு மாற்றிக் கொண்டு அடுத்த வரிசை பின்னவும்.

**பின்னலை எப்படிப் பிடித்துக்கொள்ளலாம்?**


Fig 3

• கம்பளி ஆடைகளை நேர்த்தியாகவும் வேகமாகவும் பின்னுவதற்கு முக்கியமாகக் கவனிக்க வேண்டியது கையிலே பின்னலைப் பிடித்துக்கொள்ளும் விதம். நூலின் ஓட்டத்தைக் கட்டுப்படுத்தி ஒரு நிலையில் வைத்துக் கொண்டால் பின்னல் நேராகவும் சீராகவும் அமையும்.

முதல் படி: இடது கையை ஊசியின் மேலாகப் பிடித்துக் கொள்ளவும். ஊசியை மென்மையாகவும், அதே சமயம் அழுத்தமாகவும், கட்டை விரலுக்கும் மற்ற விரல்களுக்குமிடையே பிடித்துக் கொள்ளவும்.

இரண்டாவது படி: வலது கையில் ஊசியைக் கட்டை விரலுக்கும் ஆள்காட்டி விரலுக்கும் இடையே படிய வைத்துக்கொள்ள


Fig 4
Fig 5
Fig 6

வும். இவ்விரு விரல்களின் நுனிகளிடையே ஊசி இருக்க வேண்டும்.

மூன்றாவது படி: நூலை வலது கையின் சிறு விரலைச் சுற்றி, மோதிர விரல், நடுவிரல் இரண்டுக்கும் கீழாகக் கொண்டு சென்று ஆள்காட்டி விரலின் மேலாக எடுத்துச் சென்று பின்ன வேண்டும். இப்படிச் செய்வதால் விரல்களுக்கு இடையே நூல் கட்டுப் பாட்டுக்கு அடங்கி, ஒழுங்காகப் பின்ன வரும்.

தையலை உருவாக்குதல்: கம்பளி பின்னுவதற்கு முதலாவதாகச் செய்ய வேண்டியது, ஒரு வரிசைத் தையல்களை நூல் கொண்டு ஊசியில் ஏற்படுத்துதல் ஆகும். தையல்களை உருவாக்குவதற்கென பல வழிமுறைகள் உள்ளன. எந்த வழியைப் பின்பற்றினாலும் முதல் தையல் ஒரு சுருக்கினால் ஏற்படும் வளையத்துடன்தான் ஆரம்பிக்கும். இப்படிச் செய்வதற்கு நூலை அழுத்தமாகப் பிடித்துக் கொண்டு இடது கையின் முதல் இரண்டு விரல்களைச்சுற்றி நூல் வளையம் போட்டுக் கொள்ளவும். இந்த நூல் வளையத்தை இடது கை கட்டை விரலால் நன்றாக அழுத்திக் கொள்ளவும். இனி வலது கையினால் ஊசியை நூல் வளையத்தின் உள்ளே நுழைத்து, நூலை இழுத்துக் கொள்ளவும். நூலின் நுனிகளை நன்றாக இழுத்து ஊசியுள் சுருக்கம் விழுமாறு செய்யவும். இதுதான் கம்பளிப் பின்னலின் முதல் தையல்.

மேற்கொண்டு தையல்களை உருவாக்கக் கீழ்க் காணும் வழிமுறைகளில் ஏதேனும் ஒன்றினைப் பின்பற்றவும்.

கட்டை விரல் பிரயோகம்: இந்த வகையைப் பின்பற்றினால் ஒரு ஊசி போதும். இவ்விதம் தையலை உருவாக்கினால் பின்னலின் விளிம்பு அல்லது ஓரம் என்று சொல்லப்படுவது உறுதியாக அமையும்.

நூல் உருண்டையின் அருகே ஒரு சுருக்கு வளையம் போட்டுக் கொள்ளவும். ஊசியை வலது கையால் வளையத்தின் உள்ளே நுழைத்து விடவும். நூல் பின்னால் இருக்கும் உருண்டையிலிருந்து வந்து கொண்டிருக்கும். (படம் 5)

ஓர் அளவு நூலை எடுத்து இடது கைக் கட்டை விரலைப் பிரதட்சிணமாகச் சுற்றி ஒரு வளையம் போட்டுக் கொள்ளவும். நூலைக் கடைசி மூன்று விரல்களால் பிடித்துக் கொண்டு கட்டை விரலால் நூலைச் சுற்றிக் கொள்ளவும். முதல் தையலுடன் இருக்கும் ஊசியின் முனையை வளையத்தின் உள்ளே நுழைத்து, வலது கையால் உருண்டையிலிருந்து வரும் நூலை ஊசியின் முனையைப் பின்புறமாகச் சுற்றி முன்னால் கொண்டு வரவும். நூல் வளையத்தின் வழியாக இழுத்துக்கொண்டால் ஊசியில் தையல் நிற்கும். இவ்விதமாகத் தொடர்ந்து எத்தனை தையல்கள் வேண்டுமோ அமைத்துக்கொள்ளலாம்.

இந்த வழிமுறையைப் பின்பற்றித் தையல்களை அமைத்தால், பின்னும்பொழுது முதல் வரிசையிலேயே டிசைனைத் துவக்கலாம்.

(மீதி அடுத்த இதழில்)


Fig 7
Fig 8

# குழந்தைக் குல்லாய்

**தேவையான பொருட்கள் :**

கோட்ஸ் ஆங்கர் பின்னல் நூல் நெ. 20 (20 கிராம்) மதுரை கோட்ஸ் தயாரிப்பு.

கோட்ஸ் ஆங்கர் பின்னல் நூல் நெ. 8 (10 கிராம்) மதுரை கோட்ஸ் தயாரிப்பு.

ஒரு பந்து பிடித்த கலர் நூல்.
இரண்டு நெ. 13 நிட்டிங் ஊசிகள் இரண்டு

முக்கால் அங்குல (9 மி.மீ) அகலத்தில் முக்கால் அங்குல ரிப்பன் (68.5 செ.மீ)

அளவு: எல்லா வட்டமும் சேர்த்து 12 அங்குலம். (30.5 செ.மீ)

சுமாராக 9 தையல் 1 அங்குலம் (2.5. செ.மீ)

**வார்த்தைகளின் சுருக்கம் :**

பி: பின்னல் (Knit)
ம. பி.: மறு பின்னல் (Purl
தை: தையல் (Stich)
நு.மு.போ: நூலே முன்னால் போடுதல் (Yarn for ward)
இ.தை.சே.பி.: இரண்டு தையல்களை சேர்த்துப் பின்னுதல் (together)
நு.ஊ.சு.: நூலே ஊசியைச் சுற்றிப் போடுதல் (Yarn round needle)
பி.வ.போ.: பின் பக்க வளைவு வழியாகப் போடுதல் (through back of loops)
தொ.: தொடர்வது (Con tinue)
அமை: அமைப்பு (Pattere)
ஆ: ஆரம்பம் (begining)
தி.செ: திரும்பச் செய்யவும்
ஸ்டா. தை: ஸ்டாகிங் தையல் (Stocking Stich)

(ஒரு வரிசை பி. ஒரு வரிசை ம. பி)

நிட்டிங் ஊசியில் 111 தையல்கள் உருவாக்கவும்.

ஆரம்பம்: பி. வரிசையில் ஆரம்பித்து 4 வரிசை ஸ்டா. தை. பின்னவும்.

அடுத்த வரிசை: (Picot) வளைவு பி. 1* நு.மு.போ., உ. தை.சே.பி. விருந்து தி.செ. அமைப்பு ஆரம்பம்:

முதல் வரிசை பி. 1* பி. 1 நு.மு.போ., பி.வ.போ., உ.தை.சே.பி., பி. 1, உ.தை. சே.பி., நு.மு.போ., விருந்து கடைசி உ.தை. வரை தி.செ., பி. 2.



2வது வரிசை: பி. 1., ம.பி.2, நு.ஊ.சு., ம.பி.3., சே.பி., நு.ஊ.சு., ம.பி.1, விருந்து கடைசி இ.தை. வரை தி.செ., ம.பி.1, பி. 1.

3வது வரிசை பி.

4வது வரிசை:* பி.1 ம.பி.1, பி.வ.போ., ம.பி.2, சே.பி., நு. ஊ. சு., ம.பி.2., சே.பி. விருந்து கடைசி இ.தை. வரை தி.செ., ம.பி.1., பி.1.

5வது வரிசை: பி.1, பி.2 சே.பி., நு.மு.போ., பி.3, நு.மு.போ., பி.3 சே.பி, விருந்து கடைசி 6 தை வரை தி.செ. நு.மு. போ., பி.3, நு.மு.போ., பி.வ.போ., பி.2 சே.பி., பி.1 .

6வது வரிசை: பி.1 கடைசி தை வரை ம.பி., பி.1.

இந்த ஆறு வரிசைகளும் அமைப்பின் விளக்கம்: இந்த அமைப்பை 5 அங்குலம் (12.5 செ.மீ) பின்னவும். 6வது வரிசையில் முடிக்கவும்.

அடுத்த வரிசை: 42 தையல்களை நீக்கவும். (விளக்கம் பார்க்க)(பி.1, நு.மு.போ.,பி.வ.போ., .2 சே.பி., பி.1. பி.2, சே.பி.

நு.மு.போ.) 4 தடவை பி.2, 42 தையல் நீக்கவும்.

உள் பக்கம் நம்மைப் பார்க்குமாறு வைத்துக்கொண்டு நூலே நடுவில் இருக்கும் தையல்களுடன் இணைக்கவும். 2வது அமைப்பு வரிசையில் ஆரம்பித்து நாலேமுக்கால் அங்குலம் (12 செ.மீ) அமைப்பு வரிசைகளைத் தொடர்ந்து பின்னவும். தையல்களை நீக்கவும்.

முடிக்கும் விதம்: நீக்கின தையல்களை நடு பாகத்தின் இரண்டு ஓரங்களில் இணைக்கவும். ஆரம்பத்தில் பின்னிய வளைவு பாகத்தை உள் பக்கமாக இரண்டாக மடித்துத் தைக்கவும். வெளிப் பக்கத்தை நம்மைப் பார்த்தாற்போல் வைத்துக் கொண்டு கீழ் பாகத்தில் இருக்கும் 80 தையல்களை ஊசியில் மறுபடியும் எடுத்துக்கொண்டு அரை அங்குலம் (1.3 செ.மீ) வரை பி.1, ம.பி.1 வரிசைகள் பின்னவும்.

இதேபோல் பி.1, ம.பி.1 உபயோகித்து தையல்களை நீக்கவும். ரிப்பனை இரண்டாக வெட்டி இரண்டு ஓரங்களில் இணைக்கவும்.

எதிரில் உட்கார்ந்திருந்தவர் கண்களை மூடிக்கொண்டு ஏதோ தியானத்தில் ஆழ்ந்தார். வாய் ஏதோ மந்திரங்களை உச்சரித்த வண்ணம் இருந்தது.

மாயாவுக்கு மனசைத் திக் திக்கென்று அடித்துக் கொண்டது. இந்த வெள்ளைத் தலை மயிரும் ருத்ராட்ச மாலையும் சந்தனப் பொட்டும் மனத்தில் ஒரு கலக்கத்தை ஏற்படுத்திற்று. நாம் இங்கு வந்தது சரிதானு பழனிச்சாமி பேச்சைக் கேட்டுக் கொண்டு இங்கு வந்தது சரியா? நமக்கும் என்ன புத்தி பேதலித்துப் போயிற்று? மந்திரத்திலும் மாயத்திலும் நமக்கும் எப்படி நம்பிக்கை வந்தது?

பூசாரி கண்களைத் திறந்தார். கண்கள் ஜிவுஜிவு என்று சிவந்திருந்தது. கோபம் தெரிந்தது. அவளுள் ஒரு பயம் படர்ந்தது.

''ரொம்பக் கடுமையான வசிய மருந்து வச்சிருக்காள் அந்த அம்மாள். உன் புருஷனைத் தலைமோ மாத்திட்டா. பூரா பணத்தையும் கறக்கிற வரைக்கும் விட மாட்டா.''

அவள் ஏதும் பேசத் தோன்றாமல் கண்களில் துளிர்த்த நீரோடு உட்கார்ந்திருந்தாள். மாந்திரிகனின் கண்களின் கடுமை லேசாகக் குறைந்தது.

அவளை அனுதாபத்துடன் பார்த்தான். ''கவலைப்படாதே. இதற்கு மாற்று மருந்து வெச்சுத்தான் முறிக்கணும். வேறே வழியில்லே.''

''இதனுலே ஒண்ணும் கெடுதல் இல்லையே?'' அவள் ஒரு கலக்கத்தோடு, சந்தேகத்தோடு கேட்டாள்.

''கவலையே வேண்டாம்.''

புருஷன் கைநழுவிப் போய் விட்டானே என்கிற உணர்வு... அது நம்முள் ஏற்படுத்தியிருக்கும் கையாலாகாத் தனம், தாழ்வு மனப்பான்மை.... என்ன செய்தால் அவனைத் திருப்பலாம் என்கிற பதைப்பு... ஷியர் டெஸ்பரேஷன்... இதற்கு நான் உந்தப்பட்டுள்ளேன். இதற்கு நான் பொறுப்பில்லை. கடவுளே நீதான் எனக்கு மார்க்கத்தைக் காண்பிக்கணும். என் கஷ்டத்தை விலக்கணும்...

அவன் ஒரு வெள்ளித் தாயத்தை அவளிடம் ஜபித்துக் கொடுத்தான்.

''இதை நான் கொடுத்தால் அவர் கட்டிக்க மாட்டாரே?''

''பரவாயில்லே. இதை அவர் அந்த இடத்துக்குப் போகும்போது அவரோட உடுப்புக்களோடு வை. தாயத்துக்குள்ளே மந்திரிச்ச குங்குமம் இருக்கும். அது அவனோட இருந்தாலே போதும். அடுத்த வாரம் மறுபடியும் வந்து பார்.''

அவள் எழுந்தாள். தாயத்தை எடுத்துக் கொண்டு 'சத்தியத்துக்குக் கட்டுப்பட்டவள் போல், குருமூர்த்தி நிர்மலாவின் வீட்டுக்கு மறுபடி கிளம்புகையில் அவன் பார்க்காத சமயத்தில் அவனுடைய சூட் கேஸில் துணிகளுக்கிடையே அந்தத் தாயத்தைப் போட்டு வைத்தாள்.

அவன் வழக்கம் போலவே இருந்தான். நிர்மலாவுடன் கூச்சமே இல்லாமல் தங்கிவிட்டு, நினைத்தபோது திரும்பி வந்தான். மாயா அவன் எப்போது வந்தாலும் இருக்கட்டும் என்று சாப்பாட்டை வைத்துக் கொண்டிருப்பாள். அவள் கைச் சாப்பாட்டில் தனக்கு ருசியும் இல்லை, ஆர்வமும் இல்லை என்று அவன் காண்பித்துக் கொண்டான். அவன் இப்பொழுது இன்னும் தீவிரமாக நிர்மலாவின் பக்கம் சேர்ந்து விட்ட மாதிரி அவளுக்குப் பயமேற்பட்டது. அவள் மறுபடியும் அந்த மாந்திரிகனிடம் போனுள்.

# மௌனத்தின் குரல்



அவன் கொடுத்த தாயத்தினால் ஏதும் வித்தியாசம் தெரியவில்லை என்றாள்.

மாந்திரீகன் நிஷ்டையில் ஆழ்ந்தான்.

"நீ வெச்ச தாயத்தை அவள் கண்டு பிடிச்சிருக்காள். அதனாலே அதுக்கு மாத்து செஞ்சு, அதனுடைய சக்தியைக் குறைச்சிருக்காள். அந்த தாயத்து இருக்கான்னு பாரு. அதுக்குள்ளே நாவச்ச குங்குமம் இருக்கான்னு பாரு. இந்தத் தடவை நா வேறே ஒண்ணு தரேன்..."

மாந்திரீகனிடம் நடைகள் நீண்டன. தாயத்துக்களும், குங்குமப் பொட்டலங்களும் கைகள் மாறின. எதற்கும் எந்த பலனும் தெரியவில்லை.

ஒரு நாள் குருட்டு யோசனைகளுடன் நிராசை உள்ளத்துடன் உட்கார்ந்திருக்கையில் கம்பெனி மானேஜர் வந்தார். அவள் வியப்புடன் அவரை வரவேற்றாள். இது வரை அவளைத் தேடி ஆபீஸ்காரர்கள் வந்ததில்லை. மனத்தில் ஒரு கலக்கம் ஏற்பட்டது.

"என்ன சமாசாரம்?"

"உங்ககிட்ட எப்படிச் சொல்றதுன்னு தெரியல்லே."

அவள் மார்பு அடித்துக் கொள்ள பேசாமல் அவரைப் பார்த்தாள். இன்னும் என்னென்ன அதிர்ச்சிகளையும் அவமானங்களையும் தாங்க வேண்டி வரும்?

"மிஸ்டர் குருமூர்த்தி கம்பெனியைக் கவனிக்கிறதேயில்லை. எல்லாவற்றிலும் பெரிய நஷ்டம். அது மட்டுமில்லை. அவர் நடந்துகொள்வதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. அவருக்குப் பணம் வேண்டுமென்றால் கம்பெனிக்கு முக்கியமான சாமான்களையே விற்றுவிடுகிறார். ப்ரொடக்ஷனுக்காக மலிவாகக் கிடைத்திருந்த ஸ்டீல் ஷீட்டையெல்லாம் பிளாக்கில் விற்றிருக்கிறார். தன்னுடைய சொந்தக் கம்பெனியிலேயே இப்படிக் கைவைத்தால் எப்படி? வேலியே பயிரை மேய்கிற மாதிரி?"

அவள் அதிர்ந்து போய் உட்கார்ந்திருந்தாள்.

"கடன் ஏறிக் கொண்டிருக்கும்போது எந்தக் கம்பெனி முதலாளியும் சுய நினைவோடு செய்யத் துணியாத காரியங்களை யாருக்கும் தெரியாமல் செய்கிறார்..."

அவளால் அவரை நிமிர்ந்துகூடப் பார்க்க முடியவில்லை.

அவள் மெல்லிய குரலில் சொன்னாள், "இதில் நான் என்ன செய்ய முடியும் சொல்லுங்கள்? நீங்கள் அவருடைய அப்பாவிடம் போய்ச் சொல்லலாமே?"

"சொல்லியாகிவிட்டது."

"அவர் என்ன சொல்கிறார்?"

"அவர் இதில் தலையிட மாட்டேன் என்கிறார். ரொம்பக் கோபமாக இருக்கிறார்."

அவள் தலையைக் குனிந்து கொண்டாள். மாமனாரின் கோபம் மிகவும் நியாயமானது என்று நினைத்துக் கொண்டாள்.

"நீங்கள் தான் உங்கள் மாமனாரிடம் போய் சொல்ல வேண்டும். நீங்கள் சொன்னால் அதற்கு வால்யூ அதிகம் இருக்கும். உங்கள் சென்டிமெண்டுக்கு முன்னால் அவருடைய கோபம் குறைந்தாலும் குறையும். வொய் டோன்ட் யூ ட்ரை?"

அவள் வெகு நேர மௌனத்துக்குப் பிறகு "ஆகட்டும்" என்றாள்.

**மா**மனாரின் வீட்டுக்குப் போகையில் ஒரு தவிப்பும், சந்தேகமும் மனசை வியாபித்தது. அவர் உதவுவாரா? அவருடைய கோபம் பிரசித்தமான கோபம். நிர்தாட்சண்யமில்லாத கோபம். பிரம்மாண்டமான அந்த வீட்டைப் பார்க்கையில் மனசில் ஏதோ கழன்று போகிற மாதிரி இருந்தது. இத்தனை பெரிய வீட்டில் பிறந்தவன் சீரழிந்து நிற்பதை நினைத்துக் கண்களில் நீர் தளும்பிற்று.

அவள் படியேறி உள்ளே செல்கையில் வீடு வழக்கம்போல் அம்போ என்றிருந்தது. ஆபீஸ் அறையில் மாமனார் ராமகிருஷ்ணன் உட்கார்ந்திருந்தார்.

அவளைக் கண்டதும் புருவத்தை லேசாகத் தூக்கினார்.

"ஓ. நீயா? வா. வேதா உள்ளே இல்லையா?"

"தெரியாது. அம்மாவைப் பார்க்கிறதுக்கு முன்னாடி உங்களோட பேசணும்."

அவர் முகம் சட்டென்று இறுகிற்று. "குருமூர்த்தியைப் பற்றிப் பேசத்தானே வந்திருக்கே? கம்பெனி நஷ்டத்திலே போறது. கடன் ஏறிட்டிருக்கு. தேவடியா வீட்டுக்குப் போறான். நீங்கதான் சகாயம் பண்ணணும்னு கேக்க வந்திருக்கே இல்லையா?"

அவள் தலையைக் குனிந்து கொண்டாள். ஒவ்வொரு வார்த்தையும் ஊசி முனையாய் குத்திற்று. குருமூர்த்தியின் செயலை விட குரூரமாய் இருந்தது.

அவள், கண்களில் நீர் மல்க அவரைப் பார்த்தாள்.

---

## முன்கதைச் சுருக்கம்

மாயா-எளிய நிலையில் நல்ல வசதி படைத்த குருமூர்த்தியின் கரம் பற்றுகிறாள். பிள்ளைதான் வேண்டுமென்று ஆசைப்படும் கணவனுக்கு 'வித்யா'வைப் பெற்றுக் கொடுக்கிறாள். மீண்டும் கர்ப்பமாகாத வகையில் கர்ப்பப்பையில் கோளாறு ஏற்பட்டு, மறுபடியும் தாய்மையைப் பெறுவதையே இழந்து விடுகிறாள்.

தந்தை ராமகிருஷ்ணனால் ஒரு தனிபாக்டரி, பங்களா முதலியவை கொடுக்கப்பட்டு வசதியாக வாழும் குருமூர்த்திக்கு, ஜோஸ்யம் தெய்வம் இவற்றில் அளவு கடந்த நம்பிக்கை. ஒரு கோயிலையே புதுப்பித்துக் கட்டுகிறான்.

அந்தக் கோயிலுக்கும் பூஜைக்கும் போகும் மாயா, தன் கணவனின் பெயருக்கு அர்ச்சனை செய்யும் பெண்ணைப் பார்த்து அதிர்ச்சியடைகிறாள். அவள் - நிர்மலா - குருமூர்த்தியின் இளமை பலவீனத்தைப் பயன்படுத்திக் கொண்டவள் என்பதைப் புரிந்து கொள்கிறாள் மாயா.

ஒரு பக்கம் ஜோஸ்யம், மாந்திரீகம்.

மறு பக்கம் நிர்மலா.

இரண்டுக்கும் நடுவே இருக்கும் குருமூர்த்தி கெட்டழிவதைக் கண்ணீருடன் பார்த்துக் குமுறுகிறாள் மாயா.

''அப்பா, நீங்களே இது மாதிரி பேசினா நான் எங்கே போவேன்? நடந்துவிட்ட தப்பை யெல்லாம் நீங்கதான் மன்னிக்கணும்.''

அவர் கோபத்துடன் அவளைப் பார்த்தார். ''தப்பா? சாதாரணமான தப்பாவா செஞ்சிருக்கான் ஒவ்வொண்ணும்? எனக்குப் பிள்ளைன்னு சொல்லிக்கவே வெட்கமாயிருக்கு. நன்னாயிருந்த பாக்டரி கடன்லே போயிண்டிருக்கு. மத்த பிள்ளைகளுக்கும் தான் தனித் தனியாப்பிரிச்சுக் கொடுத்தேன். எல்லாரும் நல்லபடியா இருக்காளா இல்லையா?''

பதில் சொல்ல முடியாமல் அவள் பேசாமல் இருந்தாள்.

''எதிலேயும் ஒழுங்கில்லே. வெளியிலே தலை காட்ட முடியல்லே எனக்கு. அவன் இப்படிப் போனதுக்கு யார் காரணம் தெரியுமா?''

அவள் தலை நிமிர்ந்து பார்த்தாள். அந்த மாந்திரீகன்தான் என்று இவரும் சொல்லப் போகிறாரோ என்று ஒரு விநாடி யோசித்தாள்.

''நீ!''

அவள் திடுக்கிட்டுப் போய் அவரைப் பார்த்தாள்.

''உன்னிடமிருந்து நான் நிறைய எதிர் பார்த்தேன். அழகு, புத்திசாலித்தனம், படிப்பு எல்லாம் இருந்தும் அவன் உன் வசம் வச்சுக்க முடியல்லேன்னு வாட் டஸ் இட் மீன்?''

அவள் அதிர்ந்து போனாள்.

''அப்பா!''

''ஆமாம். நான் உன்னைத்தான் சொல்வேன். என்கிட்ட வந்து அவன் இன்னொருத்தியோடு குடித்தனம் பண்ணறான் புத்தி சொல்லுங்கோன்னு யாசகம் கேட்காதே. பெண்டாட்டியாலே ஒருத்தனை இந்த மாதிரி விஷயத்திலே சரி செய்ய முடியல்லேன்னா வேற யாராலேயும் முடியாது. வயசு வந்தப்புறம் இந்த வீட்டிலே யாரும் இன்னொருத்தர் விஷயத்திலே தலையிடற வழக்கமில்லே.''

வேதாவும் தேவகியும் மிக ஜாக்கிரதையாகப் பேசினார்கள்.

''நாங்கள் என்னத்தை அவனுக்குச் சொல்வோம்? அவனைத் திருத்தக் கூடியவள் நீதான்'' என்றார்கள்.

நீ.... நீ.... நீ....

எங்கு திரும்பினாலும் ஆள்காட்டிவிரல்கள் அவளைக் குற்றம் சாட்டுகிற மாதிரி இருந்தது. வீடு போய்ச் சேருவதற்குள் பைத்தியம் பிடித்து விடும்போல் இருந்தது.

அன்று காலை குருமூர்த்தி வீட்டுக்கு வந்தான், இரண்டு சிறுவர்களுடன்.

''யார் இந்தக் குழந்தைகள்?'' என்றாள் அவள் சாதாரணமாக.

''என் குழந்தைகள்.''

அவள் திடுக்கிட்டு அவனைப் பார்த்தாள். அவன் குரலில் ஒரு பெருமிதம் தொனித்தது.

''எனக்கும் நிர்மலாவுக்கும் பிறந்த குழந்தைகள்.''

பிள்ளைக் குழந்தைகள் – அவள் ஆசைப் பட்டு எதிர்பார்த்து அவளால் கொடுக்க முடியாமல் போன பிள்ளைக் குழந்தைகள்.

ஆள்காட்டி விரல் விகவ ரூபமாக எழுந்து 'நீ!' என்று சுட்டிக் காட்டிற்று.

(தொடரும்)

# இல்லத்தரசிகளே கொஞ்சம் கவனியுங்கள்

நம்முடைய வாழ்வில் சமையல் ஒரு முக்கிய அம்சம். குடும்பம் ஆரோக்கியமாக வாழ்வது நம்முடைய கையில்தான் இருக்கிறது. இதைப் புரிந்து கொண்டு நீங்களும் பல, சத்துள்ள சுவையான உணவைச் சமைத்து மகிழ்ந்திருப்பீர்கள். அப்படிப்பட்டதை 'மங்கையர் மலர்' வாசகர்களுடனும் பகிர்ந்து கொள்ளலாமே!

சிறந்த சமையல் குறிப்பிற்கு,

முதற் பரிசு ரூ. 25/-   இரண்டாம் பரிசு ரூ. 15/-   மூன்றாம் பரிசு ரூ. 10/-



சீதாலக்ஷ்மி, கன்யாகுமரி

கேள்வி: எனக்கு 35 வயது ஆகிறது. 10 ஆண்டுகளுக்கு முன் எனக்குத் திருமணம் நடந்தது. ஐந்து ஆண்டுகளாக என் கணவர் வேறு ஒருத்தியைத் திருமணம் செய்து கொண்டு வாழ்கிறார். அவர் அவ்வாறு திருமணம் செய்து கொண்டது சரியா? அவர் என்னையும் குழந்தைகளையும் ஆதரிக்கச் செய்ய வழிவகை என்ன?

பதில்: ஓர் இந்து ஆண் ஏற்கனவே ஒரு மனைவி உயிருடன் இருந்தால், மற்றொரு திருமணம் சட்டப்படி செய்துகொள்ள முடியாது. இது இந்து திருமணச் சட்டத்தின் 17வது பிரிவின்படி இரு மணக் குற்றமாகும்.

அதனால் உங்களுடைய கணவரின் இரண்டாவது திருமணமும் சட்டப்படி செல்லாத ஒன்று. ஏனென்றால், ஓர் இந்துத்திருமணம் செய்துகொள்ளும் ஆணுக்கும் பெண்ணுக்கும் திருமணம் செய்துகொள்ளும் வேளையில்,



முன்பே திருமணம் ஆகி வாழ்க்கைத் துணை உயிருடன் இருக்கக் கூடாது' என்று இந்துத் திருமணச் சட்டத்தின் 5வது விதி கூறுகிறது.

மேலும் நம் நாட்டில் ஒரு தப்பான கருத்து நிலவி வருகிறது. முதல் மனைவி வாய்மொழியாகவோ, எழுத்து மூலமாகவோ, கணவரின் இரண்டாவது திருமணத்துக்குச் சம்மதித்து விட்டால், சட்டப்படி இரண்டாவது திருமணம் செல்லும் என்பதுதான் அது. இதற்குச் சட்டத்தில் இடமே இல்லை.

உங்களைப் பொறுத்த வரையில் நீங்கள் உங்கள் கணவரின் இரண்டாவதுதிருமணம் செல்லாது என்று மட்டுமல்லாமல், அவர் உங்களுக்கும் உங்கள் குழந்தைகளுக்கும் ஜீவனாம்சம் தரவேண்டும் என்று கோரி வழக்காடலாம். நீங்கள் சிவில், கிரிமினல் வழக்குகள் மூலம் ஜீவனாம்சம் பெறலாம்.

சட்டப்படி உங்கள் கணவர் உங்களையும் உங்கள் குழந்தைகளையும் காப்பாற்றக் கடமைப் பட்டவர். எனவேநீங்கள் வழக்கு மன்றம் மூலம் நிவாரணம் பெறலாம்.

அன்புரோஜ் அம்மாள், ஈரோடு

கேள்வி: ... வயது 65 ஆகிறது. ...ன் ஆதரிப்பவர்கள் இல்லை. நான் ... முதிர்ந்தோர் பென்ஷன் பெறலாம் என்று சிலர் சொல்கிறார்கள். இது சாத்தியமா? அப்படி யென்றால் நான் என்ன செய்ய வேண்டும்?

பதில்: தமிழக அரசு திக்கற்ற முதியவர்களுக்கும், உடல் ஊனமுற்றவர்களுக்கும் ஓய்வூதியம் வழங்கும் திட்டம் ஒன்றைச் செயல்படுத்தி வருகிறது. இதை உங்களைப் போன்றவர்கள் பயன்படுத்திக் கொள்ளலாம். அதற்கான விவரங்களைக் கீழே தருகிறேன்:




முதியோர் பென்ஷன் பெறத் தகுதிகள்:

1. திக்கற்றவராக இருக்க வேண்டும்.
2. அறுபது வயது நிறைந்தவராக இருக்க வேண்டும்.

ஊனமுற்றோருக்கு:

1. 45 வயது நிறைந்தவராக இருக்க வேண்டும்.
2. அரசாங்க மருத்துவமனை மருத்துவர் ஊனமுற்றவர் என்று சான்றிதழ் வழங்க வேண்டும்.

பொதுவாக வயது முதிர்ந்தவரானாலும், உடல் ஊனமுற்றவராகஇருந்தாலும்எந்தவித வருமானமும் இல்லாதவராக இருக்கவேண்டும்.

எப்படி மனுச் செய்ய வேண்டும்?

(1) ஒவ்வொரு மாவட்ட ஆட்சியாளர் (கலெக்டர்) அலுவலகத்திலும் அல்லது வட்டாட்சியாளர் அலுவலகத்திலும் (தாசில்தார்) ஓய்வூதியம் பெறுவதற்கான மனு தரப்படுகிறது.

(2) அந்த மனுவை வாங்கிப் பூர்த்தி செய்து, பதிவு பெற்ற அதிகாரியிடம், மனுவில் கண்டுள்ளபடி சான்றிதழ் வாங்க வேண்டும்.

(3) பூர்த்தி செய்த படிவத்தை மனுதாரர் வசிக்கும் தாசில்தார் அலுவலகத்தில்கொடுத்து விட வேண்டும்.

(4) அந்த மனுவைப் பரிசீலனை செய்யும் வருவாய்த் துறை அதிகாரி, அதைத் தாசில்தாருக்கு அனுப்புவார். தாசில்தார் தமது பரிந்துரையைக் கலெக்டருக்கு அனுப்பி வைப்பார்.

(5) கலெக்டர் இவற்றைப் பரிசீலனை செய்து தமது அனுமதியைத் தாசில் தாருக்கு ஒரு உத்தரவு மூலமாகவும்,



மனுதாரருக்கு ஓர் உத்தரவு மூலமாகவும் தெரிவிப்பார்.

(6) இதன்படி ஒவ்வொரு மாதமும் மனு செய்த முதியவர் அல்லது ஊனமுற்றவர் மணியார்டர் மூலம் ரூ. 25ம், வாரத்துக்கு ஒரு கிலோ அரிசியும், வருடத்துக்கு இரண்டு புடவைகள் அல்லது வேஷ்டிகள் பெறுவர்.

இது தவிர உங்களுக்கு வேறு ஏதேனும் தகவல்கள் தேவையானால், உங்கள் ஊருக்கு அருகில் இருக்கும் தாசில்தார் அலுவலகத்திலோ, கலெக்டர் அலுவலகத்திலோ பெறலாம்.

## 'இதற்கு என்ன செய்வது?'

பகுதி சட்ட ஆலோசனையும் அதையொட்டிய ஆலோசனையும் சொல்லும் பகுதியாகும். பெண்கள் தங்கள் பிரச்னைகளை இந்தப் பகுதியில் கேட்கலாம். வழக்கறிஞர் டி. ஆர். ரமேஷ் பதில் கூறுகிறார்.

வள்ளியம்மாள், காரைக்குறிச்சி

கேள்வி: என் கணவர் நான்கு மாதங்களுக்கு முன்னர் ஒரு கார் விபத்தில் இறந்து போனார். மனக் கவலையால் வாடும் என்னைப் பொருளாதார நெருக்கடி வேறு இக்கட்டான நிலைக்கு இழுத்துச் சென்றுள்ளது. என் கணவர் விபத்தில் இறந்ததற்கான நஷ்ட ஈடு கிடைக்கும் என்கிறார்கள். அதை எப்படிப் பெறுவது?

பதில்: நீங்கள் வழக்குத் தொடர்ந்தால் நிச்சயமாக ஒரு தொகையைப் பெறலாம். 'மோட்டார் வாகனச் சட்டம்' என்ற சட்டத்தின் கீழ் வழக்குத் தொடர வேண்டும்.

இச்சட்டத்தின்படி ஒரு விபத்தினால், ஒருவர் உயிரை இழந்தாலோ அல்லது உடல் பாதிப்புக்கு உள்ளானாலோ அவரோ அல்லது அவரது வாரிசுதாரர்களோ நஷ்ட ஈடு கோரி மோட்டார் வாகனத்தின் உரிமையாளர் மீதோ அல்லது ஓட்டுநர் மீதோ (அ) அவ்வண்டி இன்ஷூர் செய்திருந்தால் இன்ஷூரன்ஸ் கம்பெனி மீதோ (அ) எல்லோரின் மீதோ வழக்குத் தொடரலாம்.

இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது விபத்து நடந்து ஆறு மாதத்துக்குள் இவ்வழக்கினைப் போட வேண்டும்.

ரூபாய் 5000 வரை நஷ்ட ஈடு கோரி வழக்குத்தொடர்ந்தால்பத்து ரூபாய் கோர்ட்டுக் கட்டணம் கட்ட வேண்டும்.

இவ்வழக்கு மோட்டார் வாகனச் சட்டத்தின் கீழ் மோட்டார் ஆக்ஸிடெண்ட்ஸ் கிளெய்ம் டிரிப்யூனல் என்ற வழக்காடு மன்றங்கள் நியமிக்கப்பட்டுள்ளன. இது ஒவ்வொருமாவட்டத்திலும் இயங்கி வருகிறது.

அப்படிக் கோர்ட்டுக் கட்டணம் கட்ட வசதி இல்லையென்றால், வழக்காடு மன்றம் எளியவர்களுக்கு விதிவிலக்கும் அளிக்கிறது.

மேலும் இவ்வழக்கின் பொருட்டு நீங்கள் உங்கள் மாவட்ட இலவச சட்ட ஆலோசனைக் குழுவையும் அணுகலாம்.

# ஆண்களுக்கு என்ன உரிமை?



"உலகில் பல நாடுகளிலும் ஆண்களுக்குச் சமமாகப் பெண்கள் பல்வேறு துறைகளில் ஈடுபட முடியவில்லை என்பது உண்மைதான்.

சாதாரண இல்லறக் கடமைகளில் ஈடுபட்டு வீட்டை மேம்படுத்தத்தான் பெண்கள் விரும்புகிறார்கள். பெண்களே கூடத் தாங்கள் ஆண்களுக்கு மேலாகச் செல்ல வேண்டும் என்பதை ஒப்புக் கொள்வதில்லை. இதனால் அவர்கள் வீடுகளில் செய்யும் பணிகள் குறைவானது என்று நான் சொல்லவில்லை.

சில பெண்கள் சமுதாயத்திலுள்ள பல துறைகளில் ஆண்களுக்கு நிகராக வர விரும்புகிறார்கள். அவர்களைத் தடுக்க ஆண்களுக்கு என்ன உரிமை? அத்தகைய பெண்களுக்கு முழு உரிமை அளிக்கவேண்டியது அவர்களின் கடமை."

பிரம்ம ஞான சபையின் அனைத்து நாடுகளின் தலைவி திருமதி ராதாபர்னியர்

# "பண்டைய வர்த்தக மரபை பாதுகாத்து வருகின்றோம்"

நூற்றாண்டுகளுக்கு முன்பு தமிழ் நாடு முத்து, பட்டு, வாசனைத் திரவியங்களை ஏற்றுமதி செய்து வந்தது. இன்று ஏற்றுமதியாகும் பொருட்களில் மாற்றம் ஏற்பட்டிருந்தாலும் தமிழகத்தை வளங் கொழிக்கும் சர்வதேச வர்த்தக மையமாக மாற்றிய மக்களின் ஊக்கமும், ஆர்வமும் தொடர்ந்து நிலைத்து இருக்கிறது.

இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் சென்னை, பர்மா, மலேசியா ஆகிய இடங்களில் ஒரே சமயத்தில் அலுவலகங்களைத் திறந்து அனைத்து நாட்டுத் தொடர்புடைய வங்கியாக உதயமானது. இன்று இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் ஹாங்காங், சிங்கப்பூர், சியோல், கொழும்பு போன்ற நாடுகளுக்கும் பரவியுள்ளது. உலக முழுவதுமுள்ள தொடர்பு வங்கிகள் மூலமாகவும் செயல்பட்டு வருகிறது. அனுபவமே திறமைக்கு ஆதாரம். பண்டைய வர்த்தக பாரம்பரியம் எங்கள் சிறப்பான சேவைக்கு வித்தாகிறது.



**இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்**

உங்கள் வளர்ச்சிக்கோர் உத்தம நண்பன்

IOB/85A/80 Tam

ஒரு மாதமாக நடைபெற்று வரும் போராட்டத்தில் என் அமைதி குலைந்து விட்டது. படுக்கையில் படுத்தால் கண் மூடிக்கொள்ளும். மனக் கதவு திறந்துவிடும். அதன் பிறகு அவ்வளவுதான். காதலித்துக் கொண்டிருந்த நாட்களில்.. இரவு நேரங்களில் இனிமையான எண்ணங்களுக்கிடையே கண் அயர்ந்து விடுவேன். காதல் முடிந்தது. கல்யாணமாகவில்லை. முறிந்தது. அவ்வளவுதான். எல்லாமே அஸ்தமித்து விட்டது போன்ற ஒரு வேதனை. முட்டாள்தனமாகக் காதலில் ஈடுபட்டோமே என்ற எரிச்சல். சினிமா நாயகிகளைப் போல அசட்டுத்தனமாக நடந்து கொண்டோமே என்ற வெட்கம். நான்கு பேர்களுக்கு முன் என் காதலை வெளிச்சம் போட்டுக் காட்டினேனே என்று தலை குனிவு. என்னைக் காதலித்த அல்லது காதலித்ததாகப் பறைசாற்றிய திலீப் வேறு ஓர் இடத்தில் — பெரிய இடம் என்று கேள்வி — பெண் பார்க்கிறான் என்ற செய்தியால் ஏற்பட்ட எரிச்சல்.

அமைதி இல்லாமல் தவித்த என்னை என் அம்மா புரிந்து கொண்டாள்.

''ஒரு மாதம் லீவு எடு அனு.''

''எதுக்கு?''

''அத்தை வீட்டுக்குப் போ!''

''போய்?''

''அத்தையுடன் இரு.''

''அத்தைக்கு வயது எழுபது. அவளுடன் நான் பூரா இருக்கச் சொல்கிறாயா?''

''இத. எழுபது வயதில் நாற்பது வயதுக் காரியாக அத்தை பம்பரமாகச் சுற்றுகிறாள்.

''என் பெயர் மிஸ் அனுராதா.. யூ பெட்டர் பிஹேவ் அஸ் அன் ஆபீஸர்...''



# எனக்கு நான்தான்

பி.வி.ஆர்.

பெரிய வீடு. வீட்டைச் சுற்றித் தோட்டம். பத்து தென்னை மரங்கள். இரண்டு மா. இப்பொழுது பழுக்க ஆரம்பித்திருக்கும். அசல் மல்கோவா. போ...''

''என்னம்மா இது.''

''உடம்பைத் தேத்திக் கொள்ளத்தான். ஊட்டி, கோடைன்னு போகணும்னு இல்லே. மனசைத் தேத்திக் கொள்ளவும் சில இடங்களுக்குப் போகலாம். இப்ப உனக்குத் தேவை அமைதி. இன்னிக்கே ஆபீஸில் லீவு கேளு.''

இட மாற்றத்தால் மன மாற்றம் ஏற்பட முடியாது என்று எண்ணின நான், மன அமைதிக்காக என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருந்தேன்.

அன்று காரியாலயத்தில் என் லீவு அப்ளிகேஷன் உள்ளே போனதும் உதவி டைரக்டர் அழைத்தார்.

போன மாதம்வரை திலீப் உதவி டைரக்டர். காதலின் நெஞ்சு முறிவு ஏற்பட்ட பிறகு உதவி டைரக்டரின் பெயர் திலீப். அவர் கூப்பிட்டால் போக முடியாது என்று சொல்லிவிட முடியுமா? ஆபீஸ் முழுதும் தெரியும் போன மாதம் வரை நானும் திலீப்பும் எப்படிப் பழகினோம் என்று. இந்த ஒரு மாதமாக எப்படி விலகி இருக்கிறோம் என்பதையும் ஆபீஸ் அறியும்.

மெல்ல எழுந்து நடந்தேன். உதவி டைரக்டர் அறையினுள் பிரவேசித்தேன். திலீப் ஏதோ ஒரு ஃபைலில் மூழ்கி யிருப்பது போன்ற பாவனையில் இருந்தான். முன் பெல்லாம் என்னுடைய வாசனையை நுகர்ந்த து மே மலர்ந்த முகத்துடன்பார்த்து எழுந்து நிற்பான். உள்ளே யாரும் 'வரக் கூடாது' என்று அறிவிக்கச் சிவப்பு விளக்கை ஏற்றிவிட்டு, என் கைகளைப் பிடித்து விடுவான். இல்லே. நான் சிப்பந்தி இல்லே. ஒரு தடவை நான் சென்றிருந்தபோது காப்பி மேஜை மீது இருந்தது. ஒரு கப் காப்பி. 'குடி' என்றான். 'உங்களுக்கு?' என்றேன். 'ஆளுக்குப் பாதி' என்றான். 'நீங்கள் முதலில்', 'இல்லே நீதான் முதலில்' — ஒரு மகிழ்ச்சிகரமான தொந்த யுத்தத்துக்குப் பிறகு காப்பியைக் குடித்தேன். திடீரென்று 'ஸ்டாப்' என்றான். நிறுத்தினேன். நான் குடித்த பாக்கியைக் கையில் வாங்கிக் கொண்டு, 'உன் உதடு பட்ட இடம் எது?' என்று கேட்டான். சொன்னேன். என் உதடுகளை ஸ்பரிசிக்க முடியாத அவன், கோப்பையில் என் உதடு பட்ட இடத்தை ஸ்பரிசித்தான்.

இந்த மாஜி காதலனுடைய அறையில் பிரவேசித்து நின்றபோது, மேஜை மீது

இருந்த காப்பிக் கோப்பை நினைவுகளை இழுத்து வந்தது.

ஓரிரு நிமிடங்களுக்குப் பிறகு என்னால் அவமானத்தைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. நான் ஆவேசப்பட்டேன்.

''நான் வந்திருக்கிறேன்.''

''வெயிட்.''

''அப்புறமா வருகிறேன்.''

''நோ. ப்ளீஸ் வெயிட்.''

'ப்ளீஸ்' என்னைத் தயங்க வைத்தது. நின்றேன்.

''ஸிட் டௌன்.''

உட்கார்ந்தேன். முன்பெல்லாம் அவன் மடிமேல் உட்காராததுதான் பாக்கி. இப்போது உதவி டைரக்டர் சொல்லுகிறார். உட்காருகிறேன்.

திடீரென்று ஃபைலை மூடிவிட்டு ஏறிட்டுப் பார்த்தான். நான் என் கண்களைத் தாழ்த்திக் கொண்டேன்.

''முப்பது நாள் லீவு போட்டிருக்கிறாய்.''

''ஆமாம்.''

''இது மே மாதம். ஜூன் இருபது நேஷனல் கான்ஃபரன்ஸ் வருகிறது.''

''தெரியும்.''

''ஆயிரம் புள்ளி விவரங்கள் தயார் செய்ய வேண்டும்.''

''எனக்கு லீவ் தேவை.''

''லீவ் தருகிறேன். ஆனால் இப்போது இல்லை.''

''எனக்கு இப்போதுதான் தேவை. அதுவும் ஒரு மாதம்.''

''லீவை மறுக்க எனக்கு அதிகாரம் உண்டு.''

''லீவைக் கேட்க எனக்கு உரிமை உண்டு என நினைக்கிறேன்.''

''தராவிட்டால்?''

''டாக்டர் சர்டிபிகேட். லீவ் அப்ளிகேஷனில் என்ன காரணம் என்று' எழுதியிருக்கிறேன். பார்த்தீர்களா?''

உதவி டைரக்டர் பார்த்தார். ஒரு நிமிடம் மௌனம். பிறகு. ''இது பொய்யான காரணம். உன் உடம்புக்கு ஒன்றும் இல்லை'' என்றார்.

''நீங்கள் ஒரு டாக்டரா?''

''இது...''

''சார், முடியுமானால் இப்ப ஸாங்க்ஷன் கொடுங்கள். இல்லாமல் போனால் இந்த மெட்ராஸில் உள்ள பெரிய டாக்டர்களில் ஒருவரிடமிருந்து சர்டிபிகேட் வாங்கி அனுப்புகிறேன். அப்புறம் என் லீவு தானாக சாங்க்ஷன் ஆகிவிடும். நான் வருகிறேன்.''

எழுந்தேன். நடந்தேன். கதவு பக்கம் போனதும்—

''அனு...''

''என் பெயர் மிஸ். அனுராதா... யூ பெட்டர் பிஹேவ் அஸ் அன் ஆஃபீஸர்.''

''ஓ.கே. யூ கேன் கோ.''

மறுநாள் காலை கோவை எக்ஸ்பிரஸில் ஏறிய ந ன் முதன் முதலாகத் திலீப்பை மன அலமாரியின் அடித்தட்டுக்குத் தள்ளிவிட்டு அத்தையைப் பற்றி நினைத்தேன். அத்தை கண் முன் வந்தாள்.

ஐந்தே முக்கால் அடி உயரம். தும்பைப் பூப்போன்ற தலைக்கு ஏற்ப, தும்பைப் பூ போன்ற வெண்ணிறப் புடவை. நெற்றியில் விபூதிக் கீற்று. கழுத்தில் ஒரு துளசி மாலை. குரல் வெண்கலம். பார்வை ஒரு கத்தி முனை. சிரிப்பு ஒரு மத்தாப்பு. மூன்று வீடுகளிலிருந்து கிட்டத்தட்ட இரண்டாயிரம் வாடகை வருகிறது. பங்களா, கார், டிரைவர், வேலைக்காரி, தோட்டக்காரன் என்று சிப்பந்திகள். வாடகை வசூல் செய்ய, கணக்கு எழுத, முனிசிபல் ஆபீஸ் வருமான வரி அலுவலகம் என்று அலைய, அவ்வப்போது தலை நீட்டும் ஒரு மாஜி சர்க்கார் ஆபீஸ் ஹெட் கிளார்க். வீட்டில் நான்கு சமைப் பகக்கள்.

என் தாத்தா — அத்தையின் அப்பா — பழமையில் ஊறிப் போனவர். அத்தைக்கு ஒன்பது வயது நடக்கையில் பதினாறு வயது முறைப் பிள்ளைக்கே கல்யாணம் செய்து வைத்தார். இருவரும் வெளியே பாண்டி ஆடிக் கொண்டிருக்கையில் உள்ளே பெரியவர்கள் பாக்கு வெற்றிலை மாற்றிக் கொண்டார்கள். முறைப் பிள்ளையின் அப்பா — என் தாத்தாவின் அக்கா புருஷர்— அந்தக் காலத்திலேயே பெரிய புள்ளி! அத்தையின் வீடும் செல்வத்தில் கொழித்தது..

ஆனால் என்ன புண்ணியம்? பத்து வயதில் அத்தை கழுத்தில் தாலியைத் தொங்க விட்டுக் கொண்டு விளையாடிக் கொண்டிருக்கையில் பதினைந்து வயதுக் கணவனுக்குத் தோட்டக் கிணற்றில் நீந்த வேண்டும் என்ற ஓர் ஆசை எழுந்தது. கோவை மாவட்டக் கிணறு நீள அகலத்தை விட ஆழம் பயங்கரமானது. அந்தப் பயங்கரத்தில் அவன் சிக்கிக் கொண்டான்.

அவ்வளவுதான்.

அன்று கட்டிய புடவையின் வெண்மையை அத்தை இன்னும் மாற்றவில்லை. பள்ளிக் கூடம், கல்லூரி, சில ஆண்டு காலம் ஆசிரியர் பதவி, எதுவும் அவளை மாற்றவில்லை. பலர் பரிதாபப்பட்டார்கள். சிலர் அவளுடைய அறிவீனத்தைக் கண்டு சிரித்தார்கள். இன்னும் சிலர் அவளுடைய சௌந்தரியமான யௌவனம் வீணாகிறதே என்று தாபப்பட்டார்கள். தாத்தாகூட ஓரிரு முறைகள் மறு விவாகத்தை நினைவூட்டினார். அத்தை அத்தைதான். நாளுக்கு நாள் அவளுடைய

அவனை இரண்டாவது முறையாகப் பார்த்த போது, அவள் அவனைக் காதலிக்க ஆரம்பித்தாள். முதல்முறை அவளைப் பார்த்தபோது அவளுக்குத் தெரியாது, அவள் பணக்காரி என்று!



நெஞ்சத்தில் இறந்து போனவன் வளர்ந்து கொண்டே வந்திருக்க வேண்டும். வளர்ந்து விட்ட உருவம் ஒரு தெய்வச் சிலையாக உறைந்திருக்க வேண்டும். அந்தத் தெய்வம் இருக்கும் இடத்தில் ஒரு மனிதனை உட்கார வைக்க அவளால் முடியவில்லை. வைக்கவும் நினைக்கவில்லை.

ஏற்கனவே அம்மா டெலிபோன் மூலம் தொடர்பு கொண்டிருந்ததால் அத்தை ரயிலடிக்குக் கார் அனுப்பி இருந்தாள்.

காரில் ஏறினதும் ''அத்தையம்மா எப்படி இருக்காங்க?'' என்று கேட்டேன்.

சுவாரசியமற்ற குரலில் டிரைவர் அளித்த பதில் என் இதயத்தில் ஒரிரு தந்திகளைப் பாதித்தது.

''சொல்லும்படியாக இல்லே.''

''அப்படி யென்றால் என்ன அர்த்தம்?''

''டாக்டர் வந்து போய்க்கிட்டிருக்கார்.''

நான் பங்களா போர்ட்டிகோவில் இறங்கிப் படி ஏறி, ஹாலுக்குள் பிரவேசித்தபோது, அத்தை சாய்வு நாற்காலியில் படுத்திருந்தாள். என்னைக் கண்டதும் எழுந்து விரைந்து வந்தாள் எனக்கு ஒரே வியப்பு!

''வா அனு.''

''அத்தை, உங்க உடம்புக்கு என்ன?''

''ஒண்ணுமில்லே. உட்கார்.''

''என்ன உடம்பு அத்தை? டாக்டர் வர்றாராம்!''

''பணம் கொடுத்தால் டாக்டர்வருவார்... டாக்டர் வந்தா பணம் கொடுப்பேன்... முதல்லே கை கால் கழுவிட்டு வா... சாப்பிடுவோம்.''

சாப்பிட உட்கார்ந்தபோதுதான் ''அத்தை நீ இப்ப வந்தப்போ, என்ன நினைச்சேன், தெரியுமா, அனு?'' என்று ஆரம்பித்தாள்.

''என்ன அத்தை?''

''என் வாரிசு வந்துவிட்டாள்னு..''

நான் சிரித்தேன்.

''என்ன அத்தை சொல்றீங்க? உங்க சொத்தை யெல்லாம் எனக்கு எழுதி வைக்கப் போறீங்களா?''

குழம்பைப் பரிமாறிக் கொண்டே, ''சொத்தை எழுதி வைச்சாத்தான் வாரிசா? உன்னைப் பொறுத்த வரையில் இனிமேல் உனக்குக் கல்யாணம் இல்லேன்னு சொல்லிட்டாயாமே? பத்து நாளிலே மூணு வாட்டி உன் அப்பாவும் அம்மாவும் டெலிபோன்ல புலம்பிட்டா.''

நான் பதில் சொல்லவில்லை.

''அனு!''

''என்ன அத்தை?''

''எனக்கு இப்ப வயசு எழுபது. கேட்கறதில் தப்பு இல்லே. நீயும் அந்த் திலீப்பும் எப்படிப் பழகினீர்கள்?''

''அதான் தெரியுமே உனக்கு? நிச்சயதார்த்தத்துக்கு நான் நிச்சயம் பண்ற அளவுக்கு....''

''நான் எனக்கு ஏற்கனவே தெரிஞ்சதை உன்னிடம் கேட்கவில்லே. எனக்குத் தெரியாததை — உனக்கும் திலீப்புக்கும் மட்டுமே தெரியக் கூடியதை விசாரிக்கிறேன்.''



''அம்மா, ராமு என் பொம்மையை உடைச்சிட்டான்.''
''எப்படிடா?''
''பொம்மையால அவன் தலையில நான் அடிச்சப்போ..:''

''புரியலே. அத்தை...''

''ஒரு தடவையாவது....''

''ஒரு தடவையாவது?''

''நீ மனைவியா...அவன் புருஷனா...''

''இல்லே, அத்தை... இல்லவே இல்லே. அதற்கு நானும் இடம் கொடுக்கல்லே... அவரும் முயற்சி செய்யலே...''

''ஆனா நீ மனசார திலீப்பை நேசிச்சே... விரும்பினே. அவன்தான் புருஷனா வரணும்னு தெய்வத்துக்கிட்ட வேண்டினே.''

''ஆமாம் அத்தை...''

''எனக்குத் தாலி கட்டியவரையும் நான் அப்படித்தான் மனசார நேசிச்சேன் விரும்பினேன். ஆனா அவர் மறைஞ்சப்புறம் பசுமையான உள்ளத்திலே ஆணி போல அவர் பதிஞ்சு போனப்புறம் என் உலகத்தில் என் கண்ணுக்கு யாரும் தென்படவில்லே. அனு... நான் இன்னும் ஒரு கன்னிப் பெண் தெரியுமா, அனு?''

''தெரியும்.''

''என் அப்பா பணக்காரர். அரசியல் செய்தி. செல்வாக்கு உடையவர். நான் என்ன செய்திருந்தாலும் உலகம் வாய் திறவாது.''

''அப்படி இருந்தும்....''

''ஆமாம். அப்படி யிருந்தும் நான் பழைமையை விட்டு அகலவில்லே...''

''ஆனால் இது பழைமை தத்துவம் அத்தை! விதவா விவாகத்தில் என்ன தப்பு?''

''தப்புன்னு நான் சொல்லவில்லையே! மறு கல்யாணம் செய்து கொள்வதும் கொள்ளாததும் அந்தந்த விதவையின் மன உணர்வுகளைப் பொறுத்திருக்கிறது. தாலி வெறும் அடையாளச் சின்னம் என்று நினைக்கிறவர்களுக்கு நான் புத்தி சொல்லவில்லே. ஒரு பெண் ஒருவனை மனசார நேசிச்சிட்டா அப்புறம் அவன் தாலி கட்டினாலும் கட்டாட்டாலும் அவன் அவளுடைய கணவன்தான். மாங்கல்யம் புனிதமானது என்று நான் வாதாடவில்லே. அதைத் தந்தவர்தான் புனிதம்.''

அதே போல மனைவியும் புனிதமானவள் என்று ஆண்பிள்ளை நினைத்துப் பார்க்கவில்லையே....''

''நீ பார்த்த ஆண்பிள்ளைகள் அப்படி இருக்கலாம். ஒருத்தியையே நினைத்துக் கொண்டு பைத்தியமா அலைகிறவர்கள் எத்தனை பேர்?''

''சரி அத்தை.''

''அனு...''

''என்ன?''

''ஒரு விநாடி நேரமாவது திலீப்தான் உன் கணவன்னு மனசிலே வரிச்சிருந்தா, இப்ப அவன் உயிரோட இருந்தாலும், உன்னைக் கைவிட்டாலும் உன் அளவில் அவன் இறந்து போனவனாகி விட்டான்... நீ...நீ..''

''ஒரு விதவை என்கிறீர்களா அத்தை?''

''ஆமாம். ஆனால் நீ கல்யாணம் செய்து கொள்வதில் தப்பில்லை. அது என் நோக்கத்தில் ஒரு விதவையின் மறு விவாகம். சௌகரியத்துக்காக, பாதுகாப்புக்காக, ஏன் செக்ஸ் சுகத்துக்காகச் செய்து கொள்ளுகிற ஒரு ஏற்பாடு.''

''என்னைப் பொறுத்தவரை ஒரு சகாப்தம் முடிந்து விட்டது அத்தை. நான் செக்ஸ் அனாவசியம்னு சொல்லலை. ஆனா அதுதான் முக்கியம்னு சாதிக்கவும் இல்லை. ஆணும் பெண்ணும் மனம் விட்டுப் பழகறபோது, செக்ஸ் இந்தப் பழக்கத்தை மேலும் பரிமளிக்கச் செய்கிறது. அவ்வளவுதான்...''

''அதாவது தெய்வச் சிலைக்கு அலங்காரம் மாதிரி....''

''சிருங்கார அலங்காரம்தானே...?''

ஒரு கணம் யோசித்தேன்.

''அனு'' என்றாள் அத்தை.

''உம்.''

''நீ ஏன் இங்கேயே என்னுடனேயே இருந்துவிடக் கூடாது? என் வைராக்கியம் என்றைக்குக் குலையும் போல இருக்கிறதோ அன்னிக்குப் புறப்பட்டுவிடு...''

''ஆபீஸ்?''

''என் வாரிசாக நீ ஆனப்புறம் எதுக்கு ஆபீஸ்?''

''வந்து...''

''யோசனை செய்... இன்னும் உன் மனசிலே தொட்ட ஆசைகள் விட்ட ஆசைகள் இருக்கலாம்... அதனால உன் மனசு மாறலாம்....''

''என் மனசிலிருந்து திலீப் அவ்வளவு சீக்கிரம் போயிடுவான்னு தோணலை, அத்தை அவன் இங்கே என்னுள் இருக்கிறவரைக்கும் நான் இப்படியேதான் இருப்பேன்..''

''அப்ப இங்கே இருக்க வேண்டியதுதானே.''

டிரைவர் சொன்னது போல அத்தை மோசமான நிலையில் இல்லை. தேறி வந்தாள்.

கணக்கு எழுதும் ஹெட் கிளார்க்குக்குப் பதிலாக அவருடைய பிள்ளை ஒரு நாள் வந்தான். பெயர் மோகன். இருபத்தெட்டு வயது. நல்ல உயரம். சிவப்பு. எம்.காம். ஸ்கூட்டரில் வந்து இறங்கினான். அத்தை பூஜையில் இருந்தாள்.

பேசினேன். பேசினான்.

அதன் பிறகு தொடர்ந்து வரலானான். தொடர்ந்து பேசலானோம். ரொனால்டு ரீகனிலிருந்து ஒருதலை ராகம் வரை பேசினோம்.

ஒரு தடவை கூட அவன் முறை தவறி நடந்து கொள்ளவில்லை. பேசவில்லை. இவ்வளவுக்கும் வாய்ப்புகள் ஏராளம்.

இருபது தினங்களுக்குப் பிறகு ஓர் உண்மையை உணர்ந்தேன். படுக்கையில் படுத்ததும் திலீப் கண் முன் வரவில்லை.

மோகன் வந்தான். சிரித்தான்.

அத்தை அறுபது ஆண்டுகளாக மன உறுதியுடன் இருந்திருக்கிறாள். என்னால் இருபது நாட்கள் முடியவில்லை.

நான் என்ன வாரிசு!

இன்று திலீப் மறைந்து போனது போல் நாளையே மோகனும் மறைந்து போகலாம். இது ஸத்தியமல்ல. என் மனத்தில் சபலங்கள்தான் முக்கியம். பாதையை வகுக்கலாம். ஆனால் பாதை ஓரத்து மலர்கள் பாதையிலிருந்து வழுவவும் நழுவவும் காரணமாகின்றன.

''அத்தை நான் இன்னிக்கு நீலகிரியில் புறப்படுகிறேன்.''

''சரி'' என்றாள் அத்தை. காரணம் கேட்கவில்லை.

''அத்தை யம்மாவைப் பார்த்துக்கொள்ளுங்கள்!'' என்று சிப்பந்திகளிடம் சொல்லிவிட்டுக் காரில் ஏறினேன்.

பிளாட்பாரத்தில் எனக்காகக் காத்திருந்தான் மோகன். கையில் ஒரு பொட்டலம். நீட்டினான். பூ. மல்லிகை. வாங்கிக்கொண்டேன்.

அவன் கண்கள் கனத்தன. நான் அவன் உடல் முழுதும் வியாபித்திருக்கிறேன் என்பதை உணர்ந்தேன்.

''நான் மெட்ராஸ் வந்தால் உன்னைச் சந்திக்கலாமா?''

''ஷ்யூர்!'' என்றேன்.

ரயில் நகர்ந்தது. ரயில் நாளைக் காலையில் சென்னையை அடைந்து விடும். ஆனால் நான் எங்கே போகிறேன், எதற்காகப் போகிறேன்? என்னை நானே அறிந்து உணருவது எப்போது?

ஈரோடு. படுத்தேன்.

கண்ணிதழ்கள் மூடிக் கொண்டன. இதழ்களுக்குள் மல்லிகை மணந்தது. கொடுத்த கை தலையை வருடியது.

ரயிலுடன் ரயிலாக மோகன் ஓடிக் கொண்டே வந்தான். எப்போது நின்றான் என்று தெரியவில்லை.

நான்தான் தூங்கி விட்டேனே?

ஹேங்கரில் துணியை மாட்டினால் நழுவி நழுவி விழுந்து விடுகிறதா? இரண்டு ஓரங்களிலும் 'ரப்பர் பேண்டை' மாட்டி விடுங்கள். பார்க்க அழகாகவும் இருக்கும். சட்டை, பேண்ட் நழுவியும் விழாது.



பாரத் டிவி
பெற்றிருக்கப் பெருமை
பார்த்திருக்க அருமை

APRC 125

**Bharat TV**
Solid State



பாரத் டிவி உங்களுக்கு
ஒரு நல்ல டிவி வாங்கிய
திருப்தியையும்
பணத்தின் மதிப்பினையும்
அளிக்கிறது.

சென்னை - 600 034 தொலைபேசி : 82910
17, தெரு, தி. நகர், சென்னை - 600 017 தொலைபேசி : 445649

# சுந்தரம் பைனான்ஸுடன் உங்கள் உறவு
# நீங்கள் வளமைக்கு அளிக்கும் நல்வரவு

**26,000 டெபாசிட்தாரர்களின் நம்பிக்கை**

ஆம், சுந்தரம் பைனான்ஸ் 26 ஆண்டுகள் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்ட பணியை நினைத்துப் பார்க்கிறது. இப்பணிதான் 2 லட்ச ரூபாய்கள் மூலதனமாகக் கொண்ட இக்கம்பெனியை, செலுத்தப் பட்ட மூலதனம் மற்றும் ரிசர்வுகள் 372 லட்ச ரூபாய் களாகக் கொண்ட ஒரு கம்பெனியாக வளர்த்துத் தந்துள்ளது.

1979 டிசம்பர் 31ம் தேதியில் கம்பெனியின் மொத்த சொத்துக்கள் ரூ. 45 கோடிகளுக்குமேல் வளர்ந்துள்ளன. இன்று 6700க்கு மேலான வாடிக்கையாளர்களையும், 26,000க்கு அதிகமான டெபாசிட்தாரர்களையும் பெற்றுள்ளது.

**நம்பிக்கையின் மறு பெயர் சுந்தரம் பைனான்ஸ்**

ஒவ்வொரு வருடமும் பல புதிய வாடிக்கையாளர்களும், டெபாசிட்தாரர்களும் சுந்தரம் பைனான்ஸிற்கு வந்து கொண்டே இருக்கின்றனர். காரணம், பல்லாண்டுகளாக நாங்கள் நம்பகமான பணி அளிப்பதில் உங்களிடம் பெற்ற நற் பெயர்தான்.

இந்நிறுவனத்தின் மீது வளர்ந்துவரும் நம்பிக்கைக்கு ஒரு சான்று — இக்கம்பெனியின் பங்குகள் பங்கு மார்க்கெட்டில் தொடர்ந்து பெற்றுவரும் அதிக மதிப்பு.

**நீங்கள் அளித்தது இவ்வளமை**

நாங்கள் வளர ஊக்கமளித்தது நீங்கள்; போக்குவரத்துத் தொழிலுக்குப் பணிபுரிய உதவியது நீங்கள்; அத்துடன் உங்களுக்குப் பணிபுரிய எங்களுக்கு ஊக்கம் அளித்ததும் நீங்கள்தான்.

இன்று இந்தியாவிலேயே சுந்தரம் பைனான்ஸ், தவணைமுறைப் பண உதவி நிறுவனங்களில் முதன்மையாகத் திகழ்வதில் வியப்பொன்றும் இல்லை!

sf

**தவணைமுறை**
**பண உதவிக்கு**
**நம்பகமானவர்கள்**
**சுந்தரம் பைனான்ஸ் லிமிடெட்**
180 மவுண்ட் ரோடு சென்னை-600 006

# பெண்களின் எமன்

செல்வி.இரா. சாமுண்டீஸ்வரி



மரணம் என்பது, மன்னுயிர் ஜீவிகளின் நாள் நிச்சயிக்கப்படாத விலங்கு. மரணம் சம்பவிக்க விபத்தும் ஒரு வினையாக இருக்கிறது. இந்த விபத்து பெரும்பாலும் கவனக் குறைவினாலேயே நிகழ்ந்து விடுவது இப்போதெல்லாம் சர்வ சாதாரணமாக இருக்கிறது.

முன்பெல்லாம் பெண்களைப் பற்றிக் குறிப்பிடும்போது சமையல்கட்டுச் சமுதாயம் என்று கூறுவார்கள். தீ ஜ்வாலையுடன் போராடித் தீனி தயாரிக்கும் பொறுப்பு பெண்களைச் சார்ந்தது. எனவே தீயின் நாக்குகள் மாய்ந்து போகும் நிலை பெரும்பாலும் பெண்களுக்குகே நேருகிறது.

இப்படிப்பட்ட சம்பவங்களில் பெரும்பாலும் ஸ்டவ்களே எம ரூபம் எடுக்கின்றன. கணப் பொழுதின் கவனக் குறைவைக் காரணப்படுத்தி எத்தனையோ பெண்களுக்கு இந்த ஸ்டவ்களே மரண தண்டனைகளை விதித்து இருக்கின்றன. ஸ்டவ்களினால் சமையல் செய்யும் சகோதரிகள் முதலில் அவைகளைப் பக்குவமாகப் பயன்படுத்தவும் தெரிந்து கொள்ள வேண்டும்.

திருவல்லிக்கேணி தீயணைப்பு அலுவலர் திரு பட்டீஸ்வரன் அவர்களை அணுகி இது குறித்துக் கேட்டபோது, ''ஒரு நாளைக்கு சராசரியாக ஒன்றேகால் பேர் விதம் ஸ்டவ் வெடித்து மரணம் அடைகிறார்கள்'' என்று வருத்தத்துடன் உரைத்தார். ஸ்டவ்வைப் பற்றவைத்துவிட்டுப் புத்தகம் படித்துக்கொண்டிருக்கிறார் ஒரு பெண்மணி.

ஸ்டவ்வில் தீ நாக்குகள் கோரஸ் நடனம் நடத்துகின்றன. மேலே மின்விசிறி வேகமாகச் சுழல்கிறது. இதற்கு ஏற்பச் சேலை முந்தானையும் ஆடிக் களிக்கிறது. ஆனால் அந்தப் பெண்ணின் கவனமெல்லாம் கதையோட்டத்திற்குள் புதைந்து கிடக்கிறது. எவ்வளவு அஜாக்கிரதை?

காற்றில் ஆடிய சேலைத் தலைப்பும் ஸ்டவ்வின் தீப் பிழம்பும் சந்தித்துக் கொண்டன: தீ உடையில் பரவி உடலில் பரவி — அவ்வளவுதான். உடலே உருக் குலைந்து போய்விட்டது.

அழகிய மாடம். உயர் தளம். காஸ் அடுப்பில் சமையல். பால் காய்ச்சிப் பருகிய பெண் காஸ் வால்வினை மூட மறந்து படுக்கைக்குச் சென்று விடுகிறார்.

கனவுப் பயணத்தை முடித்துக் காலை எழுந்த அவர் சமையல் அறைக்குச் செல்கிறார். தீக்குச்சி பொருத்துகிறார். அவ்வளவுதான். காற்றிலே கலந்து இருந்த காஸில் தீ பற்றுகிறது. கட்டிடமே பிளந்து சிதறுகிறது. சமையல் செய்து முடித்துவிட்டு அடுப்பில் காஸ் வால்வ் மூடாத கவனக் குறைவு தான் அது. விளைவு — அழகிய மாளிகையின் வெடிச் சிதறல்களுக்கு மத்தியில் அழுகிய நிலையில் பெண்ணின் சடலம். இவை யெல்லாம் அடிக்கடி நடக்கும் அசம்பாவிதங்கள். இப்படிப் பட்ட அபாய நிலைகளில் இருந்து மீள மாதர் குலம் தெரிந்து கொள்ள வேண்டியதைக் கவனத்தில் கொள்ளுங்கள்.

ஸ்டவ் எப்போதும் சுத்தமாக இருக்க வேண்டும். அதில், குறைந்தது பாதி அளவுக்கேனும் மண்ணெண்ணெய் நிரம்பி இருக்க வேண்டும். அதற்குக் கீழே இருந்தால் அது -மேலே

போக வழி வகுக்கும். ஆகவே அடிக்கடி எண்ணெய் மட்டத்தை அறிந்து கொள்ள வேண்டும்.

கசடுகள் கலந்த எண்ணெயைத் தான் நாம் பயன்படுத்தி வருகிறோம். இந்தக் கசடுகள் வழிந்து ஸ்டவ்வின் கீழ்ப் பகுதியில் தேங்குகிறது. இதனால் துருப்பிடித்து விடும். துருப்பிடித்த ஸ்டவ்வைப் பயன்படுத்துவதும் ஆபத்து. ஆகவே 3 மாதங்களுக்கு ஒரு முறையேனும் உள் பகுதிகளைச் சுத்தம் செய்துவிட வேண்டும்.

## எரியும்போது...

ஸ்டவ்வில் திரிகள் எரிந்து கொண்டிருக்கும்போது எண்ணெய் ஊற்றக் கூடாது!. ஸ்டவ்வை இழுத்துத் துடைக்கக் கூடாது.

ஸ்டவ்வின் இணைப்புப் பகுதிகள் சரியாகப் பொருந்தி உள்ளனவா என்று பார்த்துக் கொள்ள வேண்டும். இணைப்பில் கோளாறு இருப்பது ஆபத்தானது.

'எண்ணெய் கன்டைனர்' உறுதி மிக்கதாக இருக்க வேண்டும்.

திரிகள் எப்போதும் எண்ணெய்க்குள் மூழ்கி இருக்க வேண்டும். இல்லையேல் திரியைப் பற்ற வைத்துச் சிறிது நேரத்தில் ஸ்டவ் வெடிக்கும் ஆபத்துஉண்டு.

திரிகள் தாழ்வாக இருக்கும்போது பற்றவைத்து அதன் பிறகுதான் உயர்த்த வேண்டும்.

## காஸ் அடுப்பு

இன்டேன் காஸ் பயன்படுத்துகிறவர்கள் மிகவும் எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டும். சமையல் அறையை விட்டு வெளியே போகும் போது காஸ் வால்வு மூடப்பட்டு இருக்கிறதா என்று பார்த்து, சரியாக மூடிவிட்டுச் செல்லவேண்டியது மிகவும் அவசியம்.

படுக்கைக்குச் சென்ற பின்பு காஸ் வால்வு மூடவில்லை என்று தெரிந்தால் மறுநாள் எல்லாக் கதவு, ஜன்னல்களையும் திறந்துவிட வேண்டும். அதன் பின்னர் சிறிது நேரம் கழித்துத்தான் சமையல் அறைக்குள் செல்ல வேண்டும்.

ஸ்டவ் அருகில் தீப்பிடிக்கத் தக்க திட திரவப் பொருட்கள் எதையும் வைக்கக் கூடாது. எண்ணெயை ஊற்றியதும் எண்ணெய் டின்னை அப்புறப்படுத்திவிட்டுத்தான் ஸ்டவ்வைப் பற்ற வைக்க வேண்டும்.

## தீப்பிடிக்கும்போது...

சமைக்கும்போது தீப்பற்றிக்கொண்டால் வழக்கமாகப் பெண்கள் அங்கும் இங்கும் ஓடுவதும், தண்ணீர் எடுத்து ஊற்றிக் கொள்வதும்தான் செய்கின்றனர். இது பெருந் தவறு. உடலில் தீப்பிடித்துக் கொண்டால் கனமான துணியால் உடலைப் போர்த்திக் கொள்ள வேண்டும். கீழே விழுந்து புரள வேண்டும். இதனால் தீ விரைவில் அணைந்துவிடும்.

இந்த விஷயங்களை நாம் கவனிக்காமல் விட்டு இருந்தால் மரணத் தேதியைத் தேடும் படலம்தான் நமது சமையலறையில் நடக்கும்.

---

## துளசியின் மகிமை

1. துளசி மணியைக் கழுத்தில் அணிவதால் சில பயன்கள் உண்டு. விஷப் பூச்சிகள் கடிப்பதில்லை - கடித்தாலும் விஷம் ஏறாது. கெட்ட தேவதைகள் கிட்டே வராது. துளசி மணியோடு குளிப்பதால் அதன் வீரியம் அநேக வியாதிகளை கண்டிக்கிறது.

2. துளசி வேரைக் கையில் கட்டிக் கொள்வதால் இடிவிழும் பயம் இல்லை. வீடு கட்டும் பொழுது வீட்டின் வாசற்படியில் மஞ்சளில் நனைத்த துணியில் துளசியைக் கட்டி வைக்கலாம். இடி தாங்கியைவிட அதிக சக்தி புள்ளது இது.

3. குழந்தைகள் வாந்தி எடுத்தாலும் - வயிற்றுப் போக்கினாலும் அவதிப்பட்டால் துளசி விதையை அரைத்துப் பசும் பாலில் கலந்து கொடுக்கலாம்.

4. காது குத்தலுக்குத் துளசிச் சாற்றில் ஒன்றிரண்டு சொட்டு காதில் விடுவதால் குணமாகும்.



5. துளசியும் ஓமமும் சேர்த்து அரைத்து சாப்பிடுவதால் அம்மையில் சுகம் உண்டாகும்.

6. பூச்சி கடிகளுக்குத் துளசிச் சாறு நல்ல பலன் கொடுக்கும்.

7. ஒவ்வொரு நாளும் காலை மாலை இரு வேளைகளிலும் துளசியைத் தின்று வருவதால் உடல் நல்ல ஆரோக்கியத்துடன் எந்த நோயும் வராமல் தடுக்கலாம்.

8. சனி பிடித்தவர்கள் காலை மாலையும் துளசியும் இஞ்சியும் சாப்பிடுவது மிகவும் நல்லது.

9. துளசிச் செடி 'பூ' விட்டு வளருகையில் கவனமாயிருந்து பூவும் விதையும் முத்திப் போவதற்கு முன் கொத்துக் கொத்தாகப் பூவைக் கொய்து விட வேண்டும். இவ்வாறு செய்வதனால் செடி நீண்ட நாளைக்கும் பட்டு போகாமல் இருக்கும்.

- புரசை சிவம்

# 'சாதல் எனக்காக ஒரு டிக்கெட்ப்ளீஸ்'

லட்சுமிராஜரத்னம்



தூணோரத்தின் மறைவிலிருந்து டிரான்ஸிஸ்டர் ஒலித்தது. அவன் கூடவே சிவகுமாரின் குரலும் ஒலித்தது.

'வஞ்சி அவள் உன்னை எண்ணவில்லை என்று
உனக்கேன் ஆசை மன்மதன் போல — வாசமில்லா'

கண்ணாடியின் முன் நின்று தலையைக் கோதிக்கொண்டிருந்த அரவிந்தா ஒரு கணம் நின்று வரிகளை முணு முணுத்துப் பார்த்தாள். ஒரு கணம் பிடரி முழுதும் வழியும் தலை மயிருடன் கூடிய அந்த இளைஞன் கண்ணாடியில் தெரிவது போல் அவளுக்குப் பிரமை தோன்றியது. மீண்டும் தலையை வாரினாள். அந்த இளைஞன் தன்னைப் பற்றி என்ன நினைப்பான்? தன்னை யறியாமல் சிரித்துவிட்டாள்.

சுவரோரமாய்ச் சாய்ந்து உட்கார்ந்து கொண்டிருந்தாள் அலமேலு. கைகள் வேகமாகச் சோளிகளுக்குப் பட்டன் கட்டிக் கொண்டிருந்தது. அரவிந்தாவின் சிரிப்பு இவளை நிமிர்ந்து பார்க்க வைத்தது. ஆனால் ஏனென்று கேட்கவில்லை. தைத்து முடித்ததும் தையல் இயந்திரத்தில் அமர்ந்து கொண்டு ஓட்டினாள். டகடக வென்று தாளம் தவறாத ஓசை. அந்த ஓசை நாள் முழுதும் கேட்டுக்கொண்டிருக்கும்.

தையல் இயந்திரத்தை ஓட்டி ஓட்டி அலமேலுவே ஓர் இயந்திரமாகிவிட்டாள். வயது முப்பத்தைந்து. தலையில் எள்ளும் அரிசியும் கூடிய நரை. தைத்துத் தைத்துக் கைகள் மென்மையை இழந்து விட்டிருந்தன. தங்கை அரவிந்தாவின் இளம் கனவுகள் அவளுக்குப் பழகிப் போனவை.

தூணை ஒட்டி உட்கார்ந்திருந்தான் சிவகுமார். இரவு, பகல் எல்லாம் ஒன்றுதான் — அவனைப் பொறுத்த வரையில். கறுப்பைத் தவிர வேறு எந்த வண்ணமும் அவனுக்குத் தெரியாது. துணை அந்த ட்ரான்ஸிஸ்டர். ஓய்வு பெற்று சாய்வு நாற்காலியை இருப்பிடமாகக் கொண்டுவிட்ட அப்பா — அப்பளம், வடகம் இட்டுச் சிறு வியாபாரம் செய்யும் அம்மா.

கணவனை இழந்து வீட்டோடு வந்துவிட்ட பெரியக்கா— கணவனோடு சண்டை போட்டுக் கொண்டு வந்திருக்கும் நளினி— கல்யாணத்தைக் கனவென்று எண்ணி வேலைக்குப் போகும் கடைசித் தங்கை அரவிந்தா! நளினிவுக்கும் அரவிந்தாவுக்கும் நடுவே அலமேலு!

காரை பெயர்ந்து வீடு என்ற பெயரில் அவர்களுக்கு அடைக்கலம் தந்து கொண்டிருக்கும் அந்த இடம் நாற்பது ஆண்டுகளாக அவர்கள் கதையைப் பார்த்துக் கொண்டிருக்கிறது.

''அக்கா, பசிக்கிறது!'' பாட்டுக்கும் மேலாகக் குரல் கொடுத்தான் சிவகுமார்.

கண்ணாடியிலிருந்து கவனத்தை இன்னும் அரவிந்தா திருப்பவில்லை. அழகாகப் பொட்டைத் திருத்திக் கொண்டாள்.

''பெரிய ஆபீஸர், டாண்ணு ஒன்பதுக்குச் சாப்பிட்டாக வேண்டுமோ?'' என்று சீறினார் அப்பா.

சட்டென்று வாடிப்போன சிவகுமார், எழுந்தவன் தூணைப் பற்றிக் கொண்டான். தந்தையை முறைத்துப் பார்த்தாள் அரவிந்தா.

''ஏன், ஆபீஸ்களுக்குத்தான் பசிக்க வேண்டுமோ? மற்றவர்கள் சாப்பிடக் கூடாதா?'' என்று வெடுக்கென்று கேட்டவள், தம்பியின் தோளைப் பற்றிக் கொண்டாள்.

''வா சிவு, நீயும் நானும் சாப்பிடலாம்'' என்றாள் இதமான குரலில்.

''எனக்கு ஒண்ணும் வேண்டாம். நீ போய்ச் சாப்பிடு.'' கண்களில் நீர் கசியத் தொப்பென்று உட்கார்ந்தவன், அப்படியே உடம்பைக் குறுக்கிக் கொண்டு படுத்துக் கொண்டான்.

புடவை மடிப்புக் கலையாமல் அவன் அருகில் நாசுக்காகக் குனிந்து, அவனைப் பற்றி எழுப்பினாள். ''என்ன குமார்? நீ சின்னக் குழந்தையா? உஷ், எழுந்திரு. எனக்கு நேரமாகிவிட்டது. விவிதபாரதி முடியப் போகிறது பார்'' என்று கூறியதும் அவன் எழுந்து கொண்டான்.

''ரொம்பப் பசிக்கிறது அக்கா!'' என்று தேம்பினான்.

''வாடா கண்ணு, சாப்பிடலாம். மீனு, குமாருக்கும் சாதம் போடு'' என்று உட்கார வைத்தாள்.

சிவகுமார் அவள் கழுத்தை விடாமல் பிடித்துக்கொண்டான். சாப்பிடும்பொழுதும், டிரான்ஸிஸ்டர் அலறியது. அதைக் கேட்டதும் அப்பா மகாலிங்கத்தின் முகம் எரிச்சலால் சுருங்கியது. அம்மா சீதம்மா அப்பளத்து மாவை முற்றத்தின் ஓரம் கிடந்த அம்மிக் கல்லில் அடித்துப் பிசைந்தாள். இந்த ஆரவாரங்களில் ஒட்டாத தனிப்பட்ட மனம்.

''தாயே, பரதேவதை, இந்தக் குடும்பத்துக்கு என்ன வழி காட்டப் போகிறாய்?'' என்று மனம் இறைஞ்சியது.

''அக்கா, வரப்போ கேக் வாங்கிண்டு வரயா?''

''ஆகட்டும்டா'' என்றபடியே கைப் பையையெடுத்துக்கொண்டு கிளம்பினாள். மீனு டிபன் பாக்ஸைக் கொண்டு வந்து கொடுத்தாள்.

''என்ன டிபன்?''

''வழக்கம் போலத்தான்.''

அரவிந்தாவின் முகம் சுளித்தது. ''என்னை எல்லோரும் தயிர் சாதம்னு கூப்பிடப் போறாப்பா'' என்றாள்.

''கூப்பிடட்டும். இதுகூட இல்லாதவர்களை நினைச்சுப் பார். இது எவ்வளவு ஒசத்தின்னு புரியும்'' என்றாள் மீனு. பிறகு உள்ளே போய்விட்டாள்.

மீனு பேசமாட்டாள். பேசினால் கூர்மையாகக் குத்துவது போல இருக்கும்.

''நாளைக்கு நீ தயிர் சாதம் கொடுத்தால் எடுத்துண்டு போக மாட்டேன்.''

தெரு முனை வந்ததும் பார்வையின் அலசலில் அந்த வாலிபன் தென்பட்டான். அது ஒரு டிபார்ட்மெண்டல் ஸ்டோர்ஸ். அங்குதான் அவனைத் தினமும் பார்க்கிறாள். பார்ப்பதற்கு ஓர் இராஜகுமாரனைப் போல் சிவப்பாக, பிடரியைத் தொடும் முடிக் கற்றைகளுடன், சிவந்த இதழ்கள் பவழமாகத் தெரிய—

இவன் பெயர் என்னவாக இருக்கும்? பல பெயர்கள் நினைவில் நீர்ச் சுனையின் குமிழிகளாகப் பொங்கித் துள்ளின. அவன் கண்களின் கனிவும், இதழ்களில் ஓடிய இளநகையும் — இவன் பெயரைத் தெரிந்து கொண்டு நேரே ஒரு தடவை கூவி அழைக்கத் துடித்தது மனம். அலுவலக வேலைகளின் நடுவே கூட அவன் நினைவு வந்தது.

நீண்ட பெருமூச்சு இதயத்தைப் பிளந்துகொண்டு வந்தது. பெரியக்கா மீனுவின் கல்யாணத்தை அப்பா எவ்வளவு சீரும் சிறப்புமாகச் செய்தார்? சேமிப்பு எல்லாம் அதிலேயே கரைந்தது. கார் விபத்தில் கணவனை இழந்து, கடன் அடைபடும் முன்பு வந்துவிட்டாள். நளினாவுக்குக் கல்யாணம் பண்ணும் எண்ணமே இல்லை. பள்ளிப் படிப்பை முடித்து விட்டுக் கல்லூரிக்குப் போவேன் என்று நின்றாள்.

அப்பா மறுத்து விட்டார் தெருக் கோடியில் உள்ள டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட்டுக்குப் போனாள். மனம் அதில் ஒன்றவில்லை. ஒரு கல்யாணத்தில் வசந்த் அவளைப் பார்த்தான். நளினா நல்ல அழகி. வசந்த் மயங்கியதில் வியப்பு ஒன்றுமில்லை.

''ஸார், உங்க பெண்ணை நான் கல்யாணம் பண்ணிக்கொள்கிறேன்'' என்று வலிய வந்தான்.

மகாலிங்கம் விழித்தார். ''எப்படி? எப்படி? என்னால் ஒன்றும் பண்ண முடியாது. பெரியவள் கல்யாணக் கடனே அடைபடவில்லை. கதையை முடிச்ச கடனையும் சுமந்து கொண்டிருக்கிறேனே?'' என்று உருகினார்.

வசந்த் நளினாவுக்கு ஒரு கோவிலில் வைத்துத் தாலி கட்டினான். ஒரு ஹோட்டலில் விருந்து நடந்தது. அவ்வளவுதான்! நளினாவின் கதை தொடர்ந்தது. வசந்தை நல்லவன் என்றுதான் பாராட்டினார்கள். அப்படிப்பட்ட நல்லவன் நளினாவைக் கைப்பிடிப்பதற்கு முன்பு வேறு ஒரு பெண் கூட குடித்தனம் நடத்தி வந்த கதை தெரிந்தது.

நளினா எவ்வளவோ சண்டை போட்டாள். சண்டையும், சமாதானமுமாக இரண்டு குழந்தைகள் பிறந்துவிட்டார்கள். வசந்த் அந்தப் பெண்ணின் தொடர்பை விடுவதாக இல்லை. பெரிய சண்டை போட்டுக் கொண்டு பிறந்த வீட்டுடன் இரு குழந்தைகளை அழைத்துக் கொண்டு வந்து விட்டாள். மீனுவுக்கும்

கால்பந்து விளையாட்டில் அமெரிக்கா இப்போது முன்னணியில் இருக்கிறது. அதுவும் அங்குள்ள பெண்கள் பலர் அவ்விளையாட்டில் மிகுந்த ஆர்வமாக உள்ளனர். 'விக்கர் செக்ஸ்' முரட்டுத்தனமான கால் பந்து விளையாட்டு, பெண்களுக்கு ஒவ்வாத ஒன்று என்று கூறப்படுவதைப் பொய்ப்பிப்பதற்காகவே பெண்கள் இப்போது பல 'முரட்டுத்தனமான' விளையாட்டுக்களில் பங்கு பெறுகிறார்கள். கால் பந்து விளையாட்டும் அதில் ஒன்று.

- ஹேமா



நளினாவுக்கும் போதுமான படிப்போ, தொழில் செய்யும் திறமையோ இல்லை. இவ்வளவு ஆனபின்பும் நளினா தன் நிலைமையை உணர்ந்தாள் இல்லை.

இந்த வேதனையில் அடுத்தவள் அலமேலுவின் கல்யாணம் பற்றிய பேச்சு வார்த்தைகள் தப்பித் தவறிக்கூட எழவில்லை. அரவிந்தாவையும் சம்பாதிக்கும் ஓர் இயந்திரமாகவே நினைத்தார்கள். இந்த அழகில் அவள் எப்படித் தன் கல்யாணத்தைப் பற்றி நினைக்க முடியும்? கல்யாண ஊர்வலங்கள், விருந்துகள், கேளிக்கைகள் எல்லாம் கனவாக — சினிமாவில் பார்த்து ரசிக்கும் காட்சிகளாகத் தோற்றம் அளித்தன.

கைக்கடிகாரத்தைத் திருப்பிப் பார்த்தாள். நீல டயல் ...ண் சிமிட்டி மூன்று என்றது. காண்டீன் பையன் வழக்கமான ...காப்பியை ஆவி பறக்க வைத்துவிட்டுப் போனான். சுடு தண்ணீர் கூடக் கொஞ்சம் நன்றாக இருக்கும். காலித் தண்ணீர் தம்ளரை வைத்தபொழுதுதான் அந்த போன் வந்தது.

''அரவிந்தா பேசறேன்.''

''வசந்த் பேசுகிறேன்'' — நளினாவின் கணவன்! அவள் திகைத்துத் தடுமாறினாள். அவன் எதற்காகத் தனக்கு போன் செய்கிறான்?

''என்ன வேணும்?'' தன்னையறியாமல் குரல் சிறிது கடுமையாகிறதோ?

''அரவிந்தா!'' அவள் மௌனம் சாதித்தாள்.

''என்ன அரவிந்தா பதிலேயே காணோம்? இன்னிக்கு மாலை மெரீனாவுக்கு வர முடியுமா? உன் கூடக் கொஞ்சம் பேச வேண்டும்.''

தன்னுடன் பேச இவனுக்கு என்ன இருக்கிறது? அதைத் தெரிந்துகொள்ள ஆவல்.

''அரவிந்தா, வரயா?''

''வரேன்.''

''சரியாக ஆறு மணிக்கு மெரீனாவில் கண்ணகி சிலை அருகில் வருகிறாயா?''

''சரியாக ஆறு மணிக்கு அங்கு இருப்பேன்.''

இணைப்பு துண்டிக்கப்பட்டது.

சற்று முன்னதாகவே கிளம்பி விட்டாள் அரவிந்தா. கிளம்பும் முன் கைப் பையைத்திறந்து சிறிது பவுடரைப் பூசிக்கொண்டாள். நெற்றி முடியை ஒதுக்கிக் கொண்டாள். ஒரு மலர்ச்சி பூத்தது. பிறகு பஸ் ஏறிக் கடற் கரையை அடைந்தாள்.

அவளுக்காக வசந்த் காத்துக் கொண்டிருந்தான். சிவப்பு பேண்ட், ஒயிட் ஷர்ட்டில் டிசைன் அழகாக இருந்தது. முன்னை விடச் சற்றுப் பருத்து இருப்பதாகத் தோன்றியது அரவிந்தாவுக்கு. மீசை வளர்ப்பு முறை மாறியிருந்ததாலோ என்னவோ அழகாகத் தென்பட்டான். அக்கா கொடுத்து வைக்கவில்லையே?

அவன் பேச்சை ஆரம்பிக்காமல் சுண்டல், ஐஸ்கிரீம் என்றெல்லாம் வாங்கினான். அவள் அவசரப்பட்டாள். அப்பாவுக்குப் பதில் சொல்ல வேண்டுமே என்ற பயம் நெஞ்சைக் குடைந்தது.

''என்ன பேசவேண்டும் என்று அழைத்தீர்கள்? அதைச் சொல்லுங்கள் முதலில். லேட்டாகிப் போனால் அப்பா திட்டுவார். அத்திம்பேர்.''

அவன் ஐஸ்கிரீம் கோப்பைகளை நீட்டினான்.

''எப்படி ஆரம்பிப்பது என்று புரியவில்லை அரவிந்தா.''

மரத் துடுப்பால் எடுத்துச் சுவைத்த ஐஸ்கிரீம் நாவில் பட்டுக் கரைந்தது.

''நீங்கள் என்ன சொன்னாலும், எப்படிச் சொன்னாலும் என்னால் புரிந்துகொள்ள முடியும் அத்திம்பேர்.''

''அதனால்தான் உன்னிடம் பேச முன்வந்தேன். நடந்ததெல்லாம் உனக்குத் தெரியும். தவறு செய்வது மனித சகஜம். நான் தப்புப் பண்ணினவன்தான். எந்தத் தப்புக்கும் மன்னிப்பு உண்டு. நளினா அவசரப்பட்டு விட்டாள்.''

அரவிந்தாவுக்குச் சிறிது சினம் முகத்தில் கூடியது.

''நீங்கள் சொல்வதை மறுக்கிறேன் அத்திம்பேர். மனைவி என்ற ஒருத்தி தனக்காக மட்டும் இருக்க வேண்டும் — இப்படிக் கணவன் நினைக்கலாம். ஒரு பெண் தப்புச் செய்து விட்டால் விபசாரி என்று இகழலாம். ஆனால் ஒரு பெண் தன் கணவன் தனக்கு மட்டும் சொந்தம் என்று உரிமை கொண்டாடக் கூடாது. இதென்ன எழுதப்படாத சட்டம் அத்திம்பேர்!'' என்று வேகத்துடன் கேட்டாள் அரவிந்தா.

''அடேயப்பா, உனக்கு இவ்வளவு கோபம் ஏன் வருகிறது?''

''நானும் அந்தப் பெண் வர்க்கத்தைச் சேர்ந்தவள். ஏன் கோபித்துக் கொள்ளக் கூடாது? தவறிழைத்த கோவலனைக் கண்ணகி ஏற்றுக் கொண்டாள். பெண்களுக்கே உரிய பெருந்

தன்மை அது. ஆனால் யாரோ ஒரு சலவைத் தொழிலாளி, ராவணன் மாளிகையில் சீதை இருந்ததைப் பற்றிச் சந்தேகித்தாலும். அவள் தூய்மையை நிரூபிக்கத் தீக் கனலில் குளித்துவிட்டு வரச் செய்தாராம் ஸ்ரீராமர். மனைவிகளைப் பற்றிய சந்தேகங்களை உரிமைகளைக் கடவுள்களே விட்டுக் கொடுப்பதில்லை. புரிகிறதா அத்திம்பேர்?'' என்றாள் அரவிந்தா சற்றுக் கடுமையாக.

''நான் இப்பொழுது என்ன சொல்லிவிட்டேன்? எதற்காக இப்படி வரிந்து கட்டிக் கொண்டு சண்டைக்கு வருகிறாய்?''

''சீதை ராவணனின் அன்பிலும் அரச போக வாழ்க்கையிலும் தன்னை இழந்திருந்தால் அங்கேயே தங்கி இருப்பாள். ஏன் ராமனிடம் திரும்பி வருகிறாள்? அசோக வனத்தில் சீதை தங்கிய கோலத்தை அனுமன் சொன்னதை விட சலவைத் தொழிலாளியின் சந்தேகத்தைத் தீர்க்கும் பொறுப்பு அதிகமாகி விட்டது. இல்லையா? இது ஏன் அந்த ராமருக்குத் தெரியவில்லை அத்திம்பேர்?''

வசந்துக்குக் கோபம் வந்துவிட்டது.

''நீ பெண்களின் பிரச்னைகளை நன்கு அலசி ஆராய்ந்திருக்கிறாய். உன்னைப் பாராட்டுகிறேன். நான் என்ன சொல்லப் போகிறேன் என்பதைக் கொஞ்சம் கேட்கிறாயா? நான் கமலாவுடன் வாழவில்லை. உன் அக்கா என்னுடன் வந்து குடித்தனம் பண்ணுகிறாளா என்று கேள்.'' சொல்வதற்குள் அவனுக்கு வியர்த்தது.

அரவிந்தா அவனைப் பார்த்தாள். ''அத்திம்பேர், உங்கள் கூட வாழ்வதற்கு ஒரு பெண் தேவை. அது கமலாவாகவாகவோ, நளினியாகவோ இருக்க வேண்டும் என்ற நிச்சயம் இல்லை. கமலா இல்லாவிட்டால் நளினி! நளினி இல்லாவிட்டால் கமலா அப்படித்தானே?'' என்று சூடாகப் பொரிந்தாள்.

வசந்த் மணலைக் கிளறினான். அவன் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள் அரவிந்தா. இவன் உண்மையைத்தான் கூறுகிறானா இல்லை, பொய் சொல்லுகிறானா? இல்லை, நடிக்கிறானா?

''இதற்குப் பதிலை நான் சொல்ல முடியாது. சொல்ல வேண்டியவள் நளினி. கேட்டுக்கொண்டு வந்து வேண்டுமானால் சொல்லுகிறேன்.''

அரவிந்தா எழுந்து விட்டாள். விளக்குகள் நன்கு ஒளிரத் தொடங்கின. இருள் கவ்விக் கொண்டிருந்தது வானவெளியை. செருப்புக்களைக் கால்களில் நுழைத்துக் கொண்டு புடவை மடிப்புக்களைச் சரிசெய்து கொண்டாள். கீழே வைத்திருந்த அழகுப்பையை எடுத்துக் கொண்டாள்.

அவனும் எழுந்து நின்றான். ''அரவிந்தா'' என்று அழைத்து விட்டுத் தயங்கினான்.

''என்ன அத்திம்பேர், வரட்டுமா? இதற்கே அப்பா ஆயிரம் கேள்விகளைக் கேட்பார்'' என்றாள் அவள்.



''எனக்கு இருநூறு ரூபாய் வேண்டும். இருந்தால் கொடு. அடுத்த மாதம் கண்டிப்பாகத் திருப்பித் தந்துவிடுவேன்.''

அரவிந்தா விரக்தியாகச் சிரித்தாள். ''வீட்டில் நான், அம்மா, அலமேலு என்ற மூவரும் ஓடாகத் தேய்ந்து சம்பாதிக்கிறோம். அப்படியும் இருபது நாட்கள் மாதத்தில் சரியாகச் சாப்பிட முடிகிறதா என்பது சந்தேகம்தான். அதிகம்பேர், கேட்கிறேன், என்று தப்பாக நினைக்க வேண்டாம். நளினுவுடன் தான் சண்டை. குழந்தைகள் என்ன செய்தார்கள் உங்களை? அவர்களைப் போஷிக்கும் கடமை உங்களுக்கும் உண்டு என்று நினைக்கிறேன். வரட்டுமா?'' மண்ணில் கால்கள் புதைய அரவிந்தா நடந்தாள்.

அவள் மனத்தில் கடலின் அலைகளைப் போல எத்தனையோ கேள்விகள் எழும்பி எழும்பித் தணிந்தன. வசந்த் உண்மையில் நளினுவுடன் வாழ ஆசைப்படுகிறானா? இல்லை, பணம் கேட்கத் தன்னை இப்படி அணுகினானா? தீர்மானிக்க முடியவில்லை. மனத்தில் பொங்கும் எண்ணங்கள் உளைச்சலைத் தர மௌனமாக நடந்தாள். தெரு விளக்குகள் பளிச்சிட்டன. வீடு என்னவோ திருவல்லிக்கேணிதான். கடற் கரையிலிருந்து நடக்கும் தூரத்தில் இல்லை. ஏற்கனவே நேரமாகி விட்டது. அப்பா பூசை கொடுக்கப் போகிறார். சம்பாதிக்கும் திமிர் என்று கத்துவார்.

கூட்டம் அதிகம் சேர்ந்து புறப்படும் தறுவாயில் இருந்த பஸ் ஒன்றில் ஏறிக் கொண்டாள். இரண்டு மூன்று நிறுத்தங்கள் போனால் இறங்க வேண்டுமே? அதனால் நுழைவாயிலில் நின்று கொண்டாள். கண்டக்டர் டிக்கட்டுக்காக வந்தபொழுது பின் புறம் அவளைத் தீண்டியது போல ஒரு கரம் நீண்டது. அவள் திரும்பினாள்.

''உங்களுக்கும் சேர்த்து வாங்கி விட்டேன்.''

தினமும் தரிசனம் தரும் அந்த வாலிபன்தான். நெருக்கத்தில் அவளது முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் கண்களைக் கீழே தாழ்த்திக் கொண்டாள். கண்டக்டர் கொடுத்த டிக்கட்டுகளை அவளுக்கும் சேர்த்து வாங்கிக் கொண்டான்.

''நன்றி'' முனகினாள் அவள். நெஞ்சில் சிறு பரபரப்பு ஏற்பட்டு அடங்க நேரமாகியது. ஜன்னல் வழியே வெளியே பார்த்தாள். ஏதாவது பேசுவானா? என்ன பதிலைச் சொல்வது? அவள் இறங்கியபொழுது அவனும் இறங்கிக் கொண்டான். அவளுக்குப் பேசத் துணிவு இல்லை. அதனால் சிறிது ஓட்டமும் நடையுமாக நடையை எட்டிப் போட்டாள்.

ஓரிடத்தில் நின்று திரும்பிப் பார்த்தபொழுது அவன் தன் போக்கில் வந்து கொண்டிருந்தான். அந்தக் கண்ணியம் அவள் மனத்தில் அப்படியே உறைந்து கொண்டது. தானும் அவன் பெயரைக் கேட்டிருக்க வேண்டுமோ? நின்று நன்றி சொல்லி இருக்க வேண்டுமோ? அப்படி எல்லாம் சொல்லாததனால் அவன் மனத்தில் அவள் நிறைந்து விட்டதைப் புரிந்து கொள்ளவில்லை.

அப்பாவுக்கு என்ன பதில் சொல்வது? என்ற பயத்தில் அந்த இளைஞனின் நினைவு பின்தங்கி விட்டது. மெல்லப் பூனை போல் சிற்றடி பெயர்த்து வீட்டில் நுழைந்த சமயம் — அப்பா ஈசிச் சேரில் சாய்ந்து கொண்டு கத்திக் கொண்டு இருக்கவில்லை. நின்று பெருமூச்சை இழுத்து விட்டாள். அலமேலுவிடம் தைக்கக் கொடுத்திருந்த கல்யாண வீட்டுப் பெண்கள் இருவர் துணிகளைப் பெற்றுப் போகக் காத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள்.

அந்தத் துணியின் நேர்த்தி அரவிந்தாவைக் கவர்ந்து விட்டிருந்தது. கடைத் தெருவில் தேட வேண்டும். அந்தத் துணிகளைத் தைத்து முடிக்க அலமேலு மூன்று தினங்களாக எப்படிக் கண் விழித்துத் தைத்திருக்கிறாள் என்பதை அவள் அறிவாள். கணிசமான கூலி கிடைக்கும் என்ற வேகம்! நளினு கூடப் பொறுமையாகப் பட்டன் கட்டிக் கொண்டிருந்தாள்.

அரவிந்தா கைப் பையை வைத்துவிட்டுக் குளியலறையில் நுழைந்து, முகம், கை கால்களைக் கழுவிக் கொண்டு வந்தாள். துண்டை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டபொழுது சமையல் அறையிலிருந்து சமையல் மணம் மூக்கைத் துளைத்தது. இதென்ன அதிசயம்! மெல்ல எட்டிப் பார்த்தாள் சமையலறையின் பக்கம்.

''அக்கா, என்ன விசேஷம் இன்னிக்கு?''

அப்பளத்தைப் பொரித்துச் சம்படத்தில் அடுக்கிக் கொண்டிருந்த மீனு திரும்பிப் பார்த்தாள். சமையல் செய்து இவளுக்குத்தான் அலுத்துப் போகாதோ? என்று எண்ணியபடி சமையலறையினுள் நுழைந்து நின்றாள் அரவிந்தா. மீனுவின் இதழ்களில் வழக்கத்துக்கு மாறாக விஷமப் புன்னகை நெளிந்தது.

''உன் அருமை அத்தான் டெல்லியிலிருந்து வந்திருக்கிறான்.''

அரவிந்தாவின் புருவங்கள் வளைந்தன. ''ஓகோ!'' அதற்கு மேல் என்ன முக்கியத்துவம் தருவதென்றும் புரியவில்லை.

# கவிதை பாடும் கண்களுக்கு...

# ஐடெக்ஸ்

பெண்மை பளிச்சிட, இளமை எழில்
கொஞ்சிட, வனிதையர் வதனம்
கவர்ச்சி மிளிர்ந்து கண்கள்
கவிநடம்புரிய ஐடெக்ஸ் கண்மை
சாஸ்திரீய முறையில் தயாராகும்
ஐடெக்ஸ் மை கண்களுக்கு
குளுமையூட்டி பாதுகாக்கிறது
எவ்வித தீங்கும் விளைவிக்காது

விழிகள் மொழிபேச ஐடெக்ஸ்

ஐடெக்ஸ் 38 ஆண்டுகளாக உங்கள்
நம்பிக்கையின் மகத்தான சின்னம்






அரவிந்த் லாபரடரீஸ் சென்னை 600033

Imageads-AL-1304 Tam

கல்கி ஸ்தாபனத்திலிருந்து வெளிவர இருக்கும் பெண்ணுலகின் தனி சிறப்பான பத்திரிகை "மங்கையர் மலருக்கு" சென்னை நகர விற்பனையாளராக நியமிக்கப் பட்டிருக்கிறோம் என்பதை வாசக அன்பர்களுக்கு பெரு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

# ஸ்ரீ மீனாக்ஷி டிரஸ்ட்

(Regd.)

(கல்கி, மங்கையர் மலர் சென்னை நகர விநியோகஸ்தர்கள்)

3, மங்கேஷ் தெரு, தியாகராயநகர்,
சென்னை - 600 017

தொலைபேசி PBX 442927

எங்களது இதர நிறுவனங்கள்:

★ எஸ். அப்பாஸ்வாமி ரியல் எஸ்டேட்

★ ஸ்ரீனிவாசா ரியல் எஸ்டேட்

★ ஸ்ரீ சக்தி ஃபைனான்ஸ்

★ ஸ்ரீ மீனாக்ஷி ஃபைனான்ஸ்

★ ஸப்தகிரி புக் ஷாப்

★ ரவி ஐஸ் கிரீம்ஸ்

அருமை அத்தான் டெல்லியிலிருந்து வந்திருக்கிறான். அவனைப் பார்த்து ஏழெட்டு வருடங்கள் இருக்கும். அதுவும் ஒரே ஒரு நாள் திருவையாறு போய்விட்டுக் காலையில் வந்து இரவு வண்டிக்கு ஓடிவிட்டான். அரவிந்தா அந்தப் பகலில் பள்ளிக்கூடம் போய் விட்டிருந்தாள்.

ஒல்லியாக, மீசை அரும்ப, கூர்மையாகப் பார்க்கும் அவன் இப்பொழுது எப்படி இருப்பான்?

''என்ன திகைக்கப் போயிட்டே? காப்பி தரட்டுமா?''

''ம்... அப்பா எங்கே?''

காப்பியைக் கலந்து மேடை மேல் வைத்தவள், காஸை அணைத்துவிட்டு அவள் அருகில் வந்து நின்றாள்

''காப்பியைக் குடி'' குரல் தாழ்ந்தது.

ஏதோ சொல்லப் போகிறாள். என்ன அது?

''சாயங்காலம் தரகர் முத்துசாமி வந்திருந்தார். அல மேலுவுக்காக ஏதோ வரன் சொன்னார். அதைப் பார்த்து முடிக்க அப்பா போயிருக்கிறார்.''

அரவிந்தாவுக்கு ஏதோ ஒன்று நெஞ்சை வந்து அடைத்தது. இவ்வளவு வயதுக்குப் பிறகு கல்யாணம் பண்ணிக்கொண்டு குழந்தைகளைப் பெற்று வளர்த்து, அவர்களின் முழு வளர்ச்சியின் பொழுது பெற்றவர்களே தாத்தா பாட்டி போல் தோன்றி — தலையைச் சுற்றியது அவளுக்கு.

''பையன் என்ன பண்ணுகிறான்?''

மீனா தன் தங்கையைப் பார்த்தாள். இவளிடம் சொன்னால் புரிந்து கொள்வாளா? இவளது சம்பளத்தில் குடும்பத்தின் பெரிய செலவுகள் ஓடுகின்றன. குடும்பத்தின் ஓர் அங்கமெனத் திகழ் பவளிடம் சொல்லாமல் இருக்கலாமா?

''பையன் இல்லை. நம்ம அப்பாவை விட நாலு வயது சின்னவர். இன்னும் இரண்டொரு வருடங்களில் ஒய்வு பெறப் போகிறார்.''

இதைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போனாள் அவள். இந்தத் தையல் மிஷின் அந்த வீட்டிலும் போய் ஓடப் போகிறதா? எதற்காக இந்தக் கல்யாணம் நடைபெற வேண்டும்? முகத்தை மறைத்துக்கொள்ளச் சமையல் பாத்திரங்களைத் திறந்து பார்த்தாள். வெங்காய சாம்பார், உருளைக்கிழங்கு பொரியல், தக்காளி ரசம், சேமியா பாயசம் — இதெல்லாம் இன்று தன் தொண்டைக்குள் இறங்குமா?

தங்கையின் குழப்பம் மீனாவுக்குப் புரிந்தது.

''அவருக்கு ஒரு பையனும், பெண்ணும் இருக்கிறார்களாம். தலையைக் காலை வலிச்சால் பெண் துணை என்று ஒன்று வேண்டாமா?'' என்றாள் மீனா சமாதானமாக.

''நான் எதற்கு என்று உன்னிடம் கேட்டேனா? தாலி கட்டிய வேலைக்காரி என்று சொல்லி விட்டுப் போயேன்'' என்று கூறிச் சிரித்தாள் அரவிந்தா.

ஆனால் மீனா சிரிக்கவில்லை. அவளுடைய உலக அனுபவம் தனி இல்லையா? இப்படி ஏளனமாகச் சிரித்து விட்டால் அவளுக்கும் அரவிந்தாவுக்கும் என்ன வித்தியாசம் இருக்க முடியும்? அதனால் நிதானமாக நின்று தங்கைக்குப் புரிய வைக்க முயன்றாள்.

---



யோசனை

காப்பி கலக்கும்போது தண்ணீரை டிகாக்ஷனில் ஊற்றாதீர்கள்; பாலுடன் தேவையான நீரைச் சேர்த்துக் காய்ச்சி விட்டு, பிறகு டிகாக்ஷனைக் கலந்து கொள்ளுங்கள். மிகவும் சுவையாக இருக்கும்.

''அரவிந்தா, அவருக்கு வீடு, சொத்து, நிலம் என்று இருக்கிறது. அங்கேயும் போய் இப்படி மிஷின் அடிக்க வேண்டும் என்று நினைக்காதே. கன்னி கழியாமல் மிஷினில் தைத்துத் தேய்வதை விட அவள் காலம் வரை சுகமாக இருக்கலாம். இல்லையா?'' என்று மீனா கேட்டாள்.

ஓ...எல்லோருக்கும் இதில் சம்மதம் இருக்க வேண்டும். அவள் இல்லாத சமயம் வரனைப் பற்றி தீவிரமாக நடுக்கூடத்தில் ஆராய்ச்சி நடத்தி முடிவு செய்திருப்பார்கள் என்பதைப் புரிந்து கொண்டாள். நெஞ்சு விரக்தியில் கொதித்தது.

சம்புடத்தைத் திறந்து பொரித்த அப்பளம் ஒன்றை எடுத்துத் தின்றாள். கையில் ஒட்டிய எண்ணெய்ப் பிசுக்கை நுனிக்கால் புடவையை விலக்கி விட்டுத் தேய்த்துக் கொண்டாள். மீனா மற்ற வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

''அலமேலுவுக்கு இதில் சம்மதமா?'' என்று மெல்லிய குரலில் கேட்டாள்.

''அவள் சம்மதம் இல்லாவிட்டால் விஷயத்தை மேலே தொடர முடியுமா?'' என்று கேட்ட மீனா சமையலறையைப் பெருக்கத் தொடங்கினாள்.

சமையல் அறையை விட்டு வெளியே வந்தாள் அரவிந்தா. நடை சப்தத்தைப் புரிந்துகொண்ட சிவகுமார், ''அக்கா, கேக் வாங்கிண்டு வந்தியா?'' என்று கேட்டான்.

''பார்த்தியா, மறந்து போனேன்'' என்றவள் கைப் பையிலிருந்து கேக்கை எடுத்து ஒன்றைச் சிவகுமாரிடம் நீட்டினாள். மற்ற இரண்டும் நளினாவின் குழந்தைகள் மோகனுக்கும், ஆனந்திக்கும் என்று வைத்தாள்.

''நளினா, குழந்தைகள் எங்கே?''

''எதிர் வீட்டில் விளையாடிக் கொண்டிருந்தார்கள்'' என்று பதிலளித்தாள் நளினா. அவள் சொல்லி முடிப்பதற்குள் மோகனின் அழுகை ஓலம் பெரிதாகக் கேட்க, ஆனந்தி பின்தொடர ஓடி வந்தான் மோகன். நளினா தைத்துக் கொண்டிருந்த துணியைப் போட்டுவிட்டு எழுந்து ஓடி வந்தாள்.

''எதுக்குடி ஆனந்த் அழுகிறான்?''

மோகன் 'அப்பா, அப்பா' என்று கேவினான். ''எதிர் வீட்டு ரவி, 'உனக்குத்தான் அப்பா இல்லடானு சொல்லி அழ விட்டுட்டான்' என்று கூறினாள் ஆனந்தி.

நளினாவின் முகம் இறுகியது. 'அம்மா, எனக்கு அப்பா வேணும்' என்று புடவைத் தலைப்பைப் பிடித்து இழுத்தான் மோகன்.

நளினாவின் உடலில் எங்கிருந்துதான் இப்படி ஒரு வெறி வந்ததோ? ''அப்பாவா வேணும்? இனிமே கேட்பியா?'' என்று பளார் பளார் என்று சாத்தத் தொடங்கினாள்.

அரவிந்தாதான் அவர்களை விலக்கி விட்டாள். கையை ஓங்கிக் கொண்டு காளி போல் நின்றாள் நளினா. அம்மாவும் வீட்டில் இல்லை. கேக்கைக் கொடுத்துக் குழந்தைகளைத் தனியே அழைத்துப் போய் சமாதானம் செய்து கூட்டிக் கொண்டு வந்தாள். நளினா முற்றத்துத் தூணில் சாய்ந்து சிலை போல் உட்கார்ந்திருந்தாள்.

''மீனா, குழந்தைகளுக்குச் சாதம் போடு'' என்று குழந்தைகளை அவளிடம் விட்டு விட்டு வந்தாள் அரவிந்தா.

தோளில் விழுந்த கரத்தினால் நிமிர்ந்து பார்த்தாள் நளினா. ''என் கூட வா'' என்று மெல்லக் கூறிய அரவிந்தாவைத் தொடர்ந்து மொட்டை மாடிக்குப் போனாள் நளினா.

அவள் மத்தில் பல்வேறு உணர்ச்சிகள் கொந்தளித்துக் கொண்டிருந்தது. எத்தனை அரக்கத்தனமாகக் குழந்தைகளை அடித்து விட்டாள்? நினைக்க நினைக்க வெறுப்பு தன்மீதே மூண்டது. அஞ்சும் இரண்டும் தெரியாத பிஞ்சை எப்படி அடித்து நொறுக்கி விட்டேன்? கண்ணீர் பொங்கியது. நெஞ்சைப் பிளக்கும் விம்மல்களை அடக்க இதழ்களைக் கடித்துக்கொண்டாள்.

சன்ன நிலவொளியில் சுற்றுச் சுவர்ப் பக்கம் மரங்கள் நிழல்களைப் பரப்பி ஆடிக் கொண்டிருந்தது.

''உட்கார் நளினா.''

நளினாவுக்கும் அமைதி தேவையாக இருந்தது. பேசாமல் உட்கார்ந்தாள். மாமரத்துக் கிளைகள் படர்ந்த சுற்றுச் சுவரில் ஒரு காலைத் தரையில் ஊன்றிக் கொண்டு அரவிந்தா அமர்ந்தாள்.

''நளினா, உன் மனத்தில் கிளரும் ராட்சதத் தனமான கோபத்தின் காரணம் எனக்குப் புரிகிறது'' என்றாள் அரவிந்தா.

நளினா பதில் சொல்லவில்லை. ''குழந்தையை அடித்துத் துவைத்து விட்டாய். போகட்டும். உன் கோபத்துக்கு, ஏக்கத்துக்கு அவர்கள் வடிகாலாக இருந்தார்கள். அவர்களுக்கு உரிய பதிலை உன்னால் தர முடியவில்லையே?''

நளினா சீறினாள். ''இதைக் கிண்டிக் கேட்கவா என்னை இங்க கூட்டிக் கொண்டு வந்தாய்?''

''இல்லே, இது ஏதாவது புது விஷயமா, உன்னைக் கிண்டிக் கூறு போட? இன்று அத்திம்பேர் எனக்கு போன் பண்ணிவிட்டு மெரீனுவில் வந்து சந்தித்தார்.''

குபீரென்று எழுந்த வெம்மையைக் காற்றினுல் தணிக்க முடியவில்லே. காது மடல்கள் வரை சிவந்து, மூக்கு விடைத்து நின்றது. இன்னும் புதிதாக வரப் போகிறதோ? அந்த வெம்மை பேச்சில் கலந்தது.

''உன்னே எதற்காக வந்து பார்த்தார்?''

''பதட்டப்படாதே. சொல்லத்தானே வந்திருக்கிறேன்? உனக்குத் தெரியாமல் அவருடன் இருந்த அந்த மனேவிக்கும் அவருக்கும் சரிப்படவில்லேயாம். அதனுல்தான் என்னே உன்னிடம் தூது அனுப்பினுர். நீ அவர் கூடச் சேர்ந்து வாழணுமாம். நீ என்ன சொல்லப் போகிருய்?''

இதை அரவிந்தா நிதானமாகக் கூறினுள். ஆனுல் அரவிந்தா கூறியதை அவளால் ஜீரணிக்க இயலவில்லே. சற்று முன் தணிந்த அகங்காரம் பொங்கி ஜ்வாலேயாகக் கண்களில் வீசியது. அந்த மனிதனுக்கு எத்தனே துணிவு இருக்க வேண்டும்?

''எந்த யோக்கியதையை வைத்து அப்படிக் கேட்டார் அரவிந்தா? பொய் சொல்லி — ஏற்கனவே வேறு ஒரு பெண் கூடத் தொடர்பு இருப்பதை மறைத்து என்னே ஏமாற்றி வேஷம் போட்டாரே? என்னுல் முடியாது. நான் அவருடன் போய்க் குடித்தனம் பண்ண முடியாது. இதை நீயே அவரிடம் போய்ச் சொல்லு'' என்று படபடத்தாள்.

''நீ சொல்வதை அப்படியே போய் சொல்கிறேன். ஆனுல் அந்தப் பெண் அவருடன் கூட இல்லே என்பதைப் புரிந்து கொண்டாயா?''

''என்னேப் பொறுத்தவரையில் 'இருந்தாள்' என்ற இறந்த காலமே போதுமானது.''

''சரி; உன்னேப் பொறுத்தவரையில் நீ முடிவு செய்து விட்டாய். உன் குழந்தைகள் ஆனந்தி, மோகன் இவர்களேப் பற்றி நீ நினேத்துப் பார்த்தாயா? சற்று முன் மோகன் ஏன் அழுதான்? உனக்குக் கணவன் தேவையில்லாமல் போகலாம். அவர்களுக்கு ஒரு தந்தை தேவையில்லாமல் போகவில்லேயே? குழந்தைகள் தன் தந்தையை மறந்துவிடவில்லேயே நளினு''

நளினு அப்படியே உறைந்து போனுள். சற்று முன் மோகன் அழுத அழுகை நெஞ்சில் வந்து உறைந்தது. தந்தை என்ற ஒருத்தருக்காகக் குழந்தைகள் எப்படி ஏங்குகிருர்கள் என்பதை அவள் அறியாதவள் இல்லேயே? ஆனுல் அதற்காக அவள் தன் கணவனின் போக்கை அனுசரிப்பதா? நெஞ்சு குமுறியது.

முன்னிரவின் அமைதியும், அரவிந்தாவின் பேச்சும் அவளேக் குலேத்து விட்டன. எழுந்தவள், தரையில் உட்கார்ந்தாள். முழங்காலில் முகத்தைப் பதித்துக் கொண்டாள். உடல் குலுங்கியது. அரவிந்தாவுக்கு அவளேப் பார்க்கப் பரி



தாபமாக இருந்தது. மெல்ல அவள் அருகில் அமர்ந்து தோளில் கரத்தை வைத்தாள்.

''பிரச்னைகளைத் தீர்க்க வேண்டும் நளினு. அதிகமாக்கக் கூடாது. உன் எதிர் காலத்தைப் பற்றி நீ நினைத்துப் பார்த்தாயா? உன் இரண்டு குழந்தைகளின் எதிர்காலம் அவற்றில் பின்னிக் கிடக்கிறது. உனக்கோ வேலை கிடையாது. எந்தப் பிடிவாதத்தில் எந்த ஸ்திரமான நம்பிக்கையில் நீ குழந்தைகளை வளர்ப்பாய்?''

நளினுவை இந்த உண்மைகள் பயமுறுத்தின.

''குழந்தை மோகன் அப்பாவைப் பார்க்க வேண்டும் என்று தானே அழுதான்? அவர்களுக்கு ஓர் அப்பாவை உன்னுல் தர முடியுமா? அந்த ஒரு பெண்ணுடன் வாழ்வது போல உன்னுல் ஓர் ஆணுடன் போய் வாழ முடியுமா? அதை இந்தச் சமூகம் அங்கீகரிக்குமா? காரணம், நீ ஒரு பெண். அவளை வாழவும் விடாது; சாகவும் விடாது.''

நளினு முகத்தைத் துடைத்துக் கொண்டாள்.

''அலமேலுவுக்குக் கல்யாணம் நடக்கப் போகிறது.''

''மீனு சொன்னுள். மீனு கூட அவள் மைத்துனர் கூப்பிட்டார் என்று டெல்லி போகப் போகிருள்.''

''உனக்கு எப்படித் தெரியும்?''

''மீனு சொன்னுள். உனக்கு ஒரு வேலை இருந்து சம்பாதித்தால் நீ துணிவாய் அத்திம்பேரை எதிர்த்துக்கொள்ளலாம். உனக்கு வளமான பிறந்த வீடும் இல்லை நளினு.''

இந்த உண்மை அவளைச் சுரீர் என்று குத்தியது.

''அதற்காக?''

அரவிந்தாவின் இதழ்களில் வெற்றிப் புன்னகை ஓடியது. ''நீ அத்திம்பேருடன் போய் வாழ்வதுதான் சரி. குழந்தைகளின் நலனை நினைத்துப் பார்த்து முடிவெடு'' என்று கூறிய அரவிந்தாவின் முன்பு சீறிக்கொண்டு எழுந்தாள் நளினு.

''குழந்தைகளுக்கு அப்பா தேவை என்பதால் நான் சுய கௌரவத்தை விட்டுவிட வேண்டுமா? முடியாது. அரவிந்தா. என் குழந்தைகளைப் பிச்சை எடுத்தாவது என்னுல் வளர்க்க முடியும். நீ சொல்ல நினைப்பது எனக்குப் புரிகிறது. உன் சம்பாத்தியத்தில் நானும் குழந்தைகளும் வாழ்கிருேம் என்று சொல்லிக் காட்டுகிறுய். வேண்டாமடி தாயே. இந்த உலகம் பரந்தது. நான் என் குழந்தைகளும் எங்கேயாவது போய்ப் பிழைத்துக் கொள்கிருேம்'' என்று அழுது கொண்டே கூறினுள் நளினு.

இப்படி ஒரு திருப்பத்தை எதிர்பார்க்கவில்லை அரவிந்தா. அதிர்ந்து போனுள்.

''நளினு, நீ தப்பா என்னைப் புரிஞ்சுகண்டு பேசுகிறுய்'' என்ருள்.

நளினு விழித்துப் பார்த்தாள். தான் சொன்னதெல்லாம் இப்படிப்பட்ட பொருளாகத்தான் நளினுவால் முடிந்ததா? மெல்ல அவள் கரத்தைப் பற்றிக் கொண்டாள்.

''நம் குடும்பத்தைப் பற்றி நினைத்துப் பார். உனக்குப் புரியும். அலமேலுவுக்கு அப்பா கல்யாணம் பண்ணப் போகிருர். மீனு டெல்லி போய்விடுவாள். அவள் மைத்துனர், ஒரகத்தி இருவரும் மூன்று வருட ஒப்பந்தத்தில் அமெரிக்கா போகப் போகிருர்களாம். அதனுல் மீனு அவர்கள் குழந்தைகளைப் பார்த்துக்கொள்ளப் போகிருள். நானும் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகிறேன்.''

இதைச் சொல்லும்போது பஸ்ஸில் டிக்கெட் வாங்கிய வாலிபன் நினைவில் வந்து போனுன். குப்பென்று பூத்தன ஆசைகள்! எத்தனை கனவுகளைத் தோற்றுவிக்கின்றன!

''அப்பா, அம்மா, சிவகுமார் — இவர்களை யார் காப்பாற்றுவார்கள் நளினு? நம்மில் யார் இவர்களுக்கு உதவ முடியும்? உன் குடும்பத்தைப் பற்றி நினைத்துப் பார்.''

நினைக்கவே கசந்தது நளினுவுக்கு. ''எனக்கு உதவ முடியாதுன்னு மறைவாச் சொல்றே. நானும் குழந்தைகளும் உனக்குப் பாரமாக இருக்க மாட்டோம்'' என்று கடுகடுத்த குரலில் கூறினுள் நளினு.

''நான் சொல்வதைப் புரிந்து கொள்ள மாட்டேன் என்கிருயே நளினு'' என்று வேதனைக் குரலில் கூறினுள் அரவிந்தா.

''இனிமேலும் புரிஞ்சுக்க என்ன இருக்கிறது? அதான் தெள்ளத் தெளிவாச் சொல்லிட்டியே. நான் ஒன்றும் முட்டாள் இல்லை'' என்று சீறிய நளினு வேகமாகக் கீழே இறங்கி ஓடினுள்.

மனத்தில் வேதனை கசிய அரவிந்தா மெல்லப் படிகளில் இறங்கினுள். இந்த நளினு ஏன் இப்படி இருக்கிருள்? படிகளில் இறங்கி வரும்போது ஈசிச் சேரில் அமர்ந்திருந்த அப்பா தென்பட்டார். தரகரிடம் போய்ப் பேசிவிட்டுக் கல்யாணத்தை முடித்துக் கொண்டு வந்திருப்பாரோ? பார்வையின் துழாவலில் அவர் அருகே நாற்காலியில் அமர்ந்திருந்த இளைஞன் — அவன்

இதயம் நின்று இயங்கியது. அவனும் அவள் இறங்குவதையே பார்த்துக் கொண்டிருந்தான்.

கருத்த கலர் லுங்கி, வெள்ளை வெளேர் என்ற உடம்புடன் போட்டியிட முயன்று தோற்ற வெள்ளை பனியன்—அவன் தன்னையே பார்ப்பதை உணர்ந்து அவன் இளநகை புரிந்தான். இவன்தானா ரமேஷ்? இதென்ன இப்படி ஒரு செழுமை? கன்னங்கள் வின்டர் ஆப்பிளாகக் கனிந்து பருத்துக் கிள்ள வேண்டும் போல ஒரு துறுதுறுப்பு கைகளில்—

அவள் கடைசிப் படிகளில் இறங்கினாள்: அப்பொழுது தான் அப்பா அவளைப் பார்த்தார்.

''அரவிந்தா, இங்கே வாம்மா. நீ இன்னும் நம்ம ரமேஷைப் பார்க்கவில்லையே?'' என்ற அப்பா, வெற்றிலை சீவலைப் போட்டுக் கொண்டார்.

விர்ரென்று அம்பு போல் சினத்துடன் பாய்ந்து சென்ற நளினாவை இப்பொழுது அரவிந்தா மறந்துவிட்டாள். குளு குளுவென்ற குற்றாலச் சாரல்தான் அவள் மீது வீசியது. மெல்ல அப்பாவின் எதிரே வந்து நின்றாள்.

''ரமேஷ், இவள்தான் அரவிந்தா.''

''வணக்கம்.''

அவனுடைய கண்கள் சிரித்தன.

சம்பிரதாயமான கேள்விகள்.. பதில்கள்... அவன் இன்னும் பதினைந்து தினங்கள் சென்னையில் தங்கப் போகிறான் என்று அறிந்ததும் அவள் மனத்தில்தான் எத்தனை ஆனந்தம்!

''மீனா, இலையைப் போடு'' என்றாள் அம்மா.

''நாங்க இங்கே இருக்கும்போது நீ போய் ஹோட்டல்லே தங்கறதா? அதெல்லாம் கூடாது. வந்து போனாத்தானே உறவு முறை தொடரும்? நான் உங்க அம்மாவுக்குச் சொந்த அண்ணடா ரமேஷ்!'' என்ற மகாலிங்கம் எழுந்து போய் முற்றத்தில் இறங்கி வாயைக் கொப்பளித்தார்.

ரமேஷின் அப்பாவுக்கு மூப்போக விளைச்சல் தஞ்சை ஜில்லாவில். அண்ணன் உறவு கொண்டாடினால் எங்கே வறுமையின் உறவு பிடித்துக் கொள்ளுமோ என்று அஞ்சியது போல் ஒதுங்குவாள் அபிராமி அம்மாள். சென்ற தடவை வந்தபோது அரவிந்தாவின் அழகு அவளைப் பிரமிக்க வைத்தது. இவளை மருமகளாக ஆக்கிக் கொண்டால் என்ன? என்ற சிறு ஆசை.

மகன் வேலை விஷயமாகச் சென்னைக்கு வரப் போகிறான் என்றதால் உடனே மாமாவின் வீட்டுக்குப் போகச் சொன்னாள். ரமேஷின் மனத்தில் கட்டம் பெயர்ந்த தரையும், காரை பெயர்ந்த சுவரும் உள்ள அந்த வீடு பிடிக்கத்தான் இல்லை. போக வேண்டுமா என்று எண்ணினான். முதலில் போய் இறங்கி விட்டுப் பிறகு நல்ல ஹோட்டலாகப் பார்த்துக்கொள்ளலாம் என்று தீர்மானித்தான்.

ஆனால் அந்த வீட்டுக்கே அழகு தீபமாக விளங்கிய அரவிந்தாவைக் கண்டதும்—

''நீங்க சொன்னாத் தட்ட முடியுமா? அம்மா உங்களைப் பற்றித்தான் எப்பவும் பேசுவாள். டில்லிக்கு வந்துவிடம்மான்னு கெஞ்சறேன். நிலத்தை விட்டுட்டு வர முடியாதாம். உங்க அன்பை எல்லாம் பார்க்கிறபோது இத்தனை காலமா வரலை

---

'தீமை செய்யாத தென்னை'

என் வீட்டிற்கு என் நண்பன் ஒருவன் வந்து பேசிக் கொண்டிருந்த போது கூறினான்,

''நானும் எனது மூன்று நண்பர்களும் எங்கள் தோட்டத்து தென்னை மரத்தின் கீழ் நின்று பேசிக் கொண்டிருந்தோம். அப்போது தென்னை மட்டை ஒன்று கீழே விழுந்தது. ஆனால் என்ன ஆச்சரியம்! அது யார் மீதும் விழாமல் குறுக்காக விழுந்தது. நாங்கள் அன்று தப்பியது கடவுள் புண்ணியத்தில் தான்'' என்றான்.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த என் பாட்டி, ''தென்னை மரம் மற்றவர்க்கு என்றுமே தீங்கு நினைக்காது. தென்னை மட்டையோ, தேங்காயோ, யார் மீதும் விழாது'' என்றார். இது உண்மையா? இது வரையில் யார் மீதாவது தென்னை மட்டை விழுந்திருக்கிறதா?

-அ. வா. தேவன்

யேன்னு ஏக்கமா இருக்கு மாமா'' என்று சிறிது தளைந்திருந்த உறவைச் சொற்களால் ஒட்ட வைத்தான்.

சாப்பிடும் சமயம் நிறையப் பேசினுன். டெல்லி வாழ்க்கையைப் பற்றிச் சொன்னுன். எதற்கெடுத்தாலும் 'அச்சா!' என்று சொன்னுன். இந்தச் சொற்கள் எல்லாம் அந்தக் குடும்பத்துக்குப் புதுமையாகவும், பொழுது போக்காகவும் இருந்தது.

இரவு மகாலிங்கமும் ரமேஷும் படுத்துக்கொள்ள மாடிக்குப் போனுர்கள். மீனு முற்றத்து ஓரம் படுத்துக்கொள்வாள். தனக்கும் சிவகுமாருக்கும் கூடத்தில் படுக்கையை விரித்தாள் அரவிந்தா. நளினு உள்ளறையில் படுத்துக் கொண்டிருக்கிறுள் என்று புரிந்து கொண்டாள். அம்மாவிடம் அவள் சொல்லி அழுது கொண்டிருப்பாள் என்று இளம் தேம்பலிலிருந்து தெரிந்து கொண்டாள்.

அதையும் மீறி ரமேஷின் முகம் மேலே வந்தது. நளினுவின் கண்ணீர் கலந்த விசும்பலும், அம்மாவின் ஆறுதலும் சன்னமாகக் கேட்டது. சீ, இரண்டு குழந்தைகளுக்குத் தாயான பின்பும் எது நல்லது, எது கெட்டதுன்னு இவளுக்குத் தெரியவில்லையே? என்று தனக்குள் அலுத்துக் கொண்டாள் அரவிந்தா.

ரமேஷின் கேலிப் பேச்சுக்கள், சிரிப்புக்கள், அவன் மாடியில் தங்கியிருக்கிறுன் என்ற நினைவு — அவளால் தூங்கவே முடியாமல் செய்தன. மெல்ல மெல்ல அந்தச் சுவையான கலவையிலிருந்து விடுபட்டுத் தூங்கிப் போனுள் அரவிந்தா. இதழ்களில் மெல்லிய சிரிப்புப் படிந்து கிடந்தது.

ஒரே வாரத்தில் அலமேலுவின் கல்யாணம் நிச்சயமாகி விட்டது. அரவிந்தா தனது அலுவலக சேமிப்பிலிருந்து பணத்தை எடுத்துக் கொடுத்தாள். திருமணம் திருநீர்மலையில். கல்யாணத்தை முன்னிட்டு ரமேஷ் ஒரு பதினைந்து தினங்கள் லீவ் போட்டான். அரவிந்தாவுடன் தங்கலாமே என்ற ஆசை. மாப்பிள்ளை வீட்டுக்குப் போக வர என்று அரவிந்தாவுடன் அலைந்தான்.

மாப்பிள்ளையே திருமணத்தை நடத்த — புடவை வாங்க என்று மூவாயிரம் ரூபாய் கொடுத்தார். முதல் தடவை அரவிந்தாவும் ரமேஷும் அவர்கள் வீட்டுக்குப் போனபோது அலமேலுவுக்குத் தரச் சொல்லி ஒரு சங்கிலியும் ஒரு ஜதை வளையலையும் கொடுத்தார். இவரை எப்படி அழைப்பது? தடுமாறினுள் அரவிந்தா.

பெஸண்ட் நகரில் அம்சமாகக் கட்டப்பட்டிருந்த வீட்டையும், பின்னுல் உள்ள சிறு தோட்டத்தையும் பார்த்தாள்.

''என்னம்மா பார்க்கிறுய்? இது உன் அக்காவுக்குத்தான். அவளுக்குப் பிறகுதான் என் பையனையும் பெண்ணையும் சேரும்.'' என்றுர் அந்தப் புது மாப்பிள்ளை.

அவருடைய பையனும், பெண்ணும் வராமல் கல்யாணம் ஜாம் ஜாமென்று நடந்தது. ரமேஷ் ஓடியாடி வேலை செய்தான்..

''நம்ம லைன் க்ளியர் இல்லையா அரு'' என்று அவன் காதுகளில் கிசுகிசுத்தவாறு முகூர்த்த பானம் வழங்கினுன்.

மணவறையில் நின்ற அலமேலுவைப் பார்த்தாள் அரவிந்தா. முதுகு வளைந்து, கன்னங்கள்கூட வற்றி, சிறு நரை கண்டு, ஓ! இவளும் தன் இளமையை இழந்து கொண்டுதான் வருகிறுள். இவளுடைய இரண்டு வேளைச் சாப்பாட்டுக்கும், உடுத்திக் கொள்ளும் துணிக்கும் இனிப் பஞ்சமில்லை. இப்படிப்பட்ட குடும்பங்களில் பிறந்தவர்கள் இதற்கு மேல் ஆசைப்படக் கூடாது என்று நினைத்துக் கொண்டாள் அரவிந்தா.

கல்யாணம் என்று நாள் குறித்தபொழுது அலமேலுவுக்கு இந்த வரன் திருப்தி அளிக்கிறதா என்று அறிந்துகொள்ள முயன்றபோது அலமேலு வாயே திறக்கவில்லை.

கல்யாணம் முடிந்து அவர்கள் அலுப்புடன் வீடு திரும்பி, போட்டது போட்டபடி படுத்துக் கிடந்தார்கள். தனிமையை நாடி அரவிந்தா மொட்டை மாடியில் நின்றபொழுது ரமேஷ் மேலே வந்தான்.

''நான் யாருக்காக லீவை எடுத்திருக்கிறேன் சொல்லு பார்க்கலாம்!'' என்றுன்.

''கல்யாணத்துக்காக'' என்றுள் அவள் குறும்புடன்.

''கல்யாணம் செய்துகொள்ளத் தயாராக ஒரு பெண் நிற்கிறுளே, அவளுக்காகத்தான்'' என்றுன் ரமேஷ்.

அவள் கன்னங்கள் பூத்தன.

''வரயா, சினிமா போய் வரலாம். போர் அடிக்கிறது.''

கீழே வந்து அம்மாவிடம் சொல்லிவிட்டுக் கிளம்பினுள். நளினு இப்பொழுதெல்லாம் அவளிடம் முகம் கொடுத்துப் பேசுவதில்லை. குழந்தை மோகன் வந்து காலைக் கட்டிக்கொண்டான்.

''என்ன வாங்கிண்டு வரே சித்தி?'' என்று கேட்டான்.

''பால் சாக்லேட் வாங்கிண்டு வரேன்'' என்றதும்தான் பிடியை விட்டான் குழந்தை.





# Ambi's

ஊறுகாய்கள்

அம்பீஸ் சுவை,
ஒரு தாயின் கை தேர்ந்த
சுவை போல் ஆவலைத்
தூண்டும் சுவை.

*16க்கும் மேற்பட்ட சுவை ரகங்களில் கிடைக்கிறது.*

தயாரிப்போர்:
அம்பீஸ் பிக்கிள்ஸ் அண்ட்
காண்டிமெண்ட்ஸ் ஆப் இந்தியா

ஏற்றுமதி செய்வோர்:
வெஸ்டர்ன் எக்ஸ்போர்ட்ஸ் (இந்தியா) பிரைவேட் லிட்
19, நீலகண்ட மேத்தா தெரு, தி. நகர்
சென்னை–17 தொலைபேசி: 447355

3869




APRC 109

# The Mettur Chemical & Industrial Corporation Ltd.,

(Regd. Office: **METTUR DAM-636 402**)

Salem District, Tamil Nadu



**LARGE SCALE MANUFACTURERS OF:**

- ☐ CAUSTIC SODA-SOLID
- ☐ CAUSTIC SODA-FLAKES
- ☐ CAUSTIC SODA-LYE

*(Rayon and Commercial grades)*

- ☐ LIQUID CHLORINE
- ☐ STABLE BLEACHING POWDER
- ☐ CALCIUM CHLORIDE
- ☐ BLEACH LIQUOR
- ☐ HYDROCHLORIC ACID
- ☐ POTASSIUM CHLORATE
- ☐ CHEMICAL GRADE LIME
- ☐ SULPHATE OF ALUMINA
- ☐ METHYL CHLORIDE
- ☐ METHYLENE CHLORIDE
- ☐ CHLOROFORM
- ☐ CARBON TETRACHLORIDE
- ☐ SILICON TETRACHLORIDE
- ☐ ETHYL SILICATE
- ☐ CHLORINATED PARAFFIN WAX

''வீடு கொள்ளாமல் பட்சணம் இறைபடுகிறது. உனக்கு இன்னும் கடையிலிருந்து வேறே வாங்கித் திங்கணுமா? உதை தடியா'' என்றபடி மீனு குழந்தையை எடுத்துக் கொண்டு போனுள்.

அவர்கள் போன பிறகு அப்பாவின் ஈசிச் சேருக்குக் கீழே அம்மா வந்து உட்கார்ந்தாள். அவர் வெற்றிலைப் பெட்டியை எடுத்தபொழுது, ''அப்பா, பட்சணம் தரேன். அப்புறம் வெற்றிலை போட்டுக்கோ'' என்ற மீனு தட்டு நிறையப் பட்சணத்தை வைத்துவிட்டுப் போனுள்.

அம்மா தொண்டையைக் கனைத்துக் கொண்டாள். ''ரமேஷும் அரவிந்தாவும் சினிமா போய் விட்டார்கள். அந்தப் பையன் இவளையே சுத்தருன். இதை வச்சிண்டு கல்யாணத்தை முடிச்சிடுங்கோ'' என்ருள் அம்மா தாழ்ந்த குரலில்.

ரமேஷின் அப்பா அம்மா தஞ்சாவூரில் இருந்தார்கள் ரமேஷ் ஒரே பிள்ளை. * பணப் பெருமை பேசும் தங்கையை மகாலிங்கம் என்றுமே லட்சியம் செய்வதில்லை. தன் நிலைமை தெரியும். வசதியோடு இருப்பவள் தன் குடும்பத்தைக் கொஞ்சம் கவனிக்கக் கூடாதா என்ற மனத்தாங்கல். ஆதி நாளில் அவள் கல்யாணத்தை முடிக்க அப்பா நிலத்தை விற்றுவிட்டபொழுது மகாலிங்கம் வாயைத் திறந்தாரா?

''என்ன, பேசாமல் இருந்தா எப்படி?'' என்ருள் அம்மா.

''இருக்கட்டும்; ரமேஷ் கிட்ட ஒண்ணும் கேட்காதே. அபிராமி ஒத்துக்கணும். கேட்டுப் பார்க்கிறேன். இந்தக் கல்யாணத்துக்கும் அவ வரவில்லை. தினப்படி செலவுக்கு அலமேலுவின் வருமானம் வந்தது. இனிமே அதுவும் இல்லை. கையோட அரவிந்தாவைக் கட்டிக் கொடுத்தா நாம் சோத்துக்கு என்ன பண்ணுவதாம்? நமக்கே இழுபறியா உள்ள நிலையிலே உன் ரெண்டாம் பொண் இரண்டு குழந்தைகளோட பாரமா வந்து உட்கார்ந்திருக்கா'' என்று கொட்டினுர் மகாலிங்கம்.

அம்மா திகிலுடன் சுற்று முற்றும் பார்த்தாள்.

''ஐயோ, பலமாச் சொல்லாதிங்கோ. அரவிந்தா அவனை வசந்த் கூப்பிடுகிறுன், போய்க் குடித்தனம் பண்ணுன்னு சொல்லிட்டா. நளினு குதியாக் குதிக்கிரு. வேலை தேடிண்டு அலையரு'' என்று அம்மா கூறியதும் அவருக்குக் கோபம் வந்தது.

''இந்தக் கழுதைக்கு எவன் வேலை தருவான்? புருஷனைக் கையிலே போட்டு வைச்சுக்கத் துப்பில்லை. அவன் கல்யாணத்துக்கு வந்தானே பார்த்தியா? இவ பேசுவான்னு மூஞ்சியை மூஞ்சியைப் பார்த்தானே? குழந்தைகள் எப்படி ஒட்டிண்டு இரிஞ்சுதுகள்! சரிடி, தப்புப் பண்ணிட்டான். தப்புப் பண்ணிட்டேன்னு கால்லே வந்து விழருன். ஒரு சான்ஸ் கொடுத்துப் பார்க்கலாம் இல்லையா?'' என்ருர்.

ரமேஷ் மறுநாள் ஊருக்குக் கிளம்புகிறுன். அன்று மாலை கடற் கரையில் அமர்ந்திருந்தார்கள். திரும்பும்பொழுது அவன் துணிக் கடை ஒன்றில் நுழைந்து விலை உயர்ந்த புடவை ஒன்றை வாங்கினுன். அதன் வண்ணமும், நெசவும் மிகவும் நேர்த்தியாக இருந்தது

''உனக்குப் பிடிச்சிருக்கா அரு?''

## யோசனை

கொசு மருந்து அடிக்கும்போது கொஞ்சம் உப்பு கலந்த தண்ணீரையும் அதனுடன் கலந்து கொள்ளுங்கள். விளைவு மிகவும் பயனுடையதாக இருக்கும்.



அவள் கண்கள் மின்னின. ''எனக்கு எதுக்குப் புடவை? என்கிட்ட நிறைய இருக்கே?''

அவன் அவள் தோளில் தட்டினான். ''என்னுடைய அடையாளமாக ஏதாவது தர ஆசைப்படுகிறேன். அது இந்தப் புடவையாக இருக்கக் கூடாதா? இந்தக் கணத்தில் என்ன ஆசைப்படுகிறேன் தெரியுமா?''

''என்னவாம்?''

''இந்த புடவையா மாறி உன்னைத் தழுவக் கூடாதான்னு ஆசைப்படுகிறேன்.''

அவன் கண்களில் காந்தச் சுடா தெரிந்தது: அதில் மயங்கிப் போனாள் அரவிந்தா.

''உங்க அன்புக்கு அடையாளம்னு ஒண்ணு தேவையா ரமேஷ்?''

மறுநாள் அவன் ரயிலேறிப் போனதும்தான் அவனது பிரிவை அதிகம் உணர்ந்தாள் அரவிந்தா. அந்த வெறுமை நெஞ்சைத் தகிக்க அப்படியே ரயிலோட ஓடமாட்டோமா என்று துடித்தாள்.

நளினா மும்முரமாகப் பேப்பர்களை அலசினாள். தன் படிப்புக்கும் தகுதிக்கும் ஏற்ற மாதிரி ஏதாவது வேலை கிடைக்காதா என்ற நப்பாசை. அரவிந்தாவுடன் அன்று மொட்டை மாடியில் நின்று பேசியதுதான் கடைசியாகப் பேசிய பேச்சுக்கள். விற்பனை பெண்ணாக வேலை செய்யலாம் என்று பல இடங்களில் அலைந்து பார்த்தாள்.

ஒரு கம்பெனியின் வரவேற்பு அறையில் காத்துக்கொண்டிருந்தாள். பொறுமை இன்றி பேப்பரைப் புரட்டியபொழுது அந்தத் 'தேவை' விளம்பரம் கண்களில் பட்டது. வசதி படைத்த ஒருவரின் வீட்டில் குழந்தைகளைக் கவனித்துக்கொள்ள ஆள் தேவை என்று விளம்பரம் கொடுத்திருந்தார்கள். அவ்வளவுதான். அவள் அப்படியே கிளம்பி அந்த விலாசத்தைக் கண்டு பிடித்தாள்.

அவளுடைய அழகான தோற்றம் அந்த வீட்டாருக்குப் பிடித்துவிட்டது. குடைந்து குடைந்து ஏதேதோ கேட்டார்கள். எல்லாவற்றையும் ஒப்பனைக் கூறினாள் நளினா. தனக்கு இந்த வேலை எவ்வளவு அவசியம் என்பதை வற்புறுத்திக் கேட்டுக் கொண்டாள். அவளுக்கு அதே வேலை கிடைத்து விட்டது. தன்னுடைய பேச்சினால்தான் கிடைத்ததாக நினைத்தாள் நளினா. ஆள் வராத சிரமம் வீட்டுக்காரர்களுக்குத்தானே தெரியும்!

சில தினங்கள் வேலைக்குப் போய் வந்தாள். அவள் போக்கு அவர்களுக்குத் திருப்தியைக் கொடுத்ததாகத் தெரிந்த சமயம் சிறு தொகையை அட்வான்ஸாகப் பெற்றுக் கொண்டாள். ஒரு சிறு வீட்டையும் அவர்கள் பங்களாவுக்குப் பக்கத்தில் வாடகைக்குப் பிடித்து விட்டாள்.

அவள் சாமான்களுடன் குழந்தைகளைக் கையில் பிடித்துக் கொண்டு கிளம்பியபொழுது அரவிந்தா மட்டுமில்லை. வீடே திகைத்தது.

''என்னடி நளினா, இந்த ரெண்டுங் கெட்டானுடன் போட்டி? லட்சணமா இருக்கிற பெண் தனியா வாழ முடியாதம்மா. ரெண்டு குழந்தைகள் கூடத் தனியாப் போய் இருக்க உனக்கு எத்தனை துணிச்சல் இருக்கணும்?'' என்று அம்மா அரற்றினாள்.

அரவிந்தா விடவில்லை. ''அம்மா, நான் இப்போ சொல்றேன். இவள் சம்பாத்தியத்தில் உங்களைக் காப்பாற்ற வேண்டுமே என்கிற பயத்தில் போகிறாள்'' என்றாள் குத்தலாக.

நளினா நிமிர்ந்து நின்றாள். ''எனக்குப் படிப்பும் இல்லே, தொழிலும் இல்லேன்னு ஏசினியே? இது மட்டுமில்லே. வாழ்ந்து காட்டப் போகிறேன் அரவிந்தா. என் கணவர் கிட்டேயிருந்து விவாகரத்து வாங்கிக்கப் போறேன்'' என்றாள் நளினா அகங்காரத்துடன்.

''என்னடி, என்ன சொன்னே?'' என்று அம்மா கத்திக் கொண்டு வந்தாள். எதையும் லட்சியம் செய்யாத நளினா கிளம்பி விட்டாள்.

அன்று அதிகாலையில் எழுந்துவிட்டாள் அரவிந்தா. அலுவலகத் தோழியின் அம்மாவை மருத்துவ மனையில் சேர்த்திருந்தார்கள். போய்ப் பார்த்துவிட்டு அப்படியே அலுவலகம் போய்விட நினைத்தாள். அதனால் வெகு சீக்கிரம் கிளம்பிவிட்டாள். மீனாவின் மடி, ஆசாரத்தில் டிபனை எதிர்பார்த்துப் பயனில்லை. ரமேஷிடமிருந்து டெல்லி விண்டரைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்த அரவிந்தா மீனாவைக் கேலி செய்வாள்.

''மீனா, டெல்லியில் ரொம்பக் குளிருமாம். நீ எப்படித்தான் உன் மடி ஆசாரத்தை எல்லாம் காப்பாற்றப் போகிறாயோ? உன் மைத்துனருக்கோ நான்கைந்து குழந்தைகள். எல்லாம் காலையில் எட்டு மணிக்குள் கிளம்ப வேண்டுமாம்'' என்றாள் அரவிந்தா.



## இவர்கள்

### ப்ரீதா

பிளஸ் டு படித்துக் கொண்டிருந்த போதே நடிகையாவதற்குரிய வாய்ப்பு கிடைத்தது. ருத்ர(?) படத்தில் ஒப்பந்தமாகி இப்போது ஐந்தாறு படங்களில் நடித்துக் கொண்டிருக்கிறார். நடிப்பின் நுணுக்கங்களைச் சரியாகப் புரிந்துகொண்டு நடிக்கிறேன் என்று சொல்லும் ப்ரீதா சினிமாவைப் பற்றிய அடிப்படை புத்தகங்களை படித்துக்கொண்டு வருகிறார். சத்ய ஜித்ரே, மிருணாள் சென், ஷியாம் பெனகல் படங்கள் எங்காவது போடுகிறார்கள் என்றால் அங்கே ப்ரீதாவைப் பார்க்கலாம். ப்ரீதாவின் பொழுதுபோக்கு அம்சம் சதா படிப்புதான்.

''ஒருவருக்காகவோ, சூழ்நிலைக்காகவோ நம் கொள்கையை விட்டுவிட முடியுமா அரு? மடி, ஆசாரம் என்பது அவரவர் மனத்தைப் பொறுத்தது. அவ்வளவு அவசரம் என்றால் முதலில் அவர்கள் வேலையைக் கவனிப்பேன். பிறகு என்னைக் கவனித்துக் கொள்ளலாம் அல்லவா? டெல்லியில் எத்தனையோ தமிழ் ஜனங்கள் இருக்கிறார்களாம். திருப்புகழ் வகுப்புக்கள் நடக்கின்றனவாம். முருகன் கோயில்கூடக் கட்டி இருக்கிறார்களாம்'' என்று மீனு பொரிந்து தள்ளி விட்டாள்.

மீனுவின் பிடிவாதம் தெரியாதா என்ன? இந்த அதிகாலைப் பொழுதில் ரமேஷின் நினைவும் மெல்ல எழுந்தது. பஸ்ஸிலிருந்து இறங்கி மருத்துவ மனையை நோக்கி நடந்தாள். ரமேஷ் அழகானவன், கைநிறையச் சம்பாதிக்கிறான். சற்று முரட்டுக் குணங்கள் இருக்கின்றன. தான் சொன்னபடி அவள் கேட்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு அவனிடம் அதிகம் இருக்கிறது! நெருங்கிப் பழகுகிறான். மனத்தைக் கவரும் ஜொலிப்புப்பேச்சுக்கள்!

நீண்டபெருமூச்சு இதயத்தைக் கீறியது. அப்பாதான் அவள் திருமணத்தைப் பற்றிப் பேசவே யில்லையே! இள வயதுக்குரிய ஆசைகளை, சிந்தனைகளைப் பற்றி அசை போட்டு என்ன செய்ய முடியும்? ஒருவேளை அத்தை ரமேஷுக்கு அதிகம் எதிர்பார்ப்பாளோ? இந்த ஏழை அண்ணனை மதித்துக் கைநனைக்க வந்தவள் இல்லையே!

வார்டின் கடைசியில் சுவரோரம் கட்டிலில் கிடந்த சாந்தாவின் அம்மாவைக் கண்டு பிடித்து விட்டாள் அரவிந்தா. அம்மாவின் அருகில் சாந்தாவே அமர்ந்திருந்தாள். சாந்தா எழுந்து வந்து அரவிந்தாவின் கரத்தைப் பற்றிக் கொண்டாள்.

''அம்மாவுக்கு எப்படி இருக்கு சாந்தா?'' என்று கேட்டாள் அரவிந்தா. முதல் நாளே வாங்கி வைத்திருந்த சாத்துக்குடிப் பழங்கள் அடங்கிய பிளாஸ்டிக் பையைச் சாந்தாவிடம் கொடுத்தாள்.

''அரு'' என்று அழைத்து இதழ்களைக் கடித்துக்கொண்ட சாந்தா தன்னை அடக்கிக் கொண்டாள்.

''அம்மாவுக்குக் கான்ஸராக இருக்குமோன்னு சந்தேகம் அரு'' சொன்னதும் கண்ணீர் துளும்பியது.

அரவிந்தா திடுக்கிட்டுப் போனாள். அம்மா என்பவர்கள் எப்படிப்பட்டவர்கள், அந்தத் திருவுருவம் மறைந்த பின்பு உயிர் வாழ முடியுமா? தானே பேசிக் கொண்டு, அப்பளத்து உருண்டையை உருட்டி, இட்டு, விற்றுக் காசை எண்ணும் அம்மாவின் முகம் அவள் மனக் கண்ணில் வந்தது. அவளுக்கும் கண்ணீர் முட்டிக் கொண்டு கன்னத்தில் இறங்கியது.

சற்று நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டுக் கிளம்பினாள் அரவிந்தா.

''டாக்டர்கள் என்ன சொல்கிறார்கள் என்று எனக்கு போன் பண்ணிச் சொல்லு சாந்தி. எந்த உதவி தேவை என்றாலும் கேட்கத் தயங்காதே. உனக்கு உதவச் சித்தமாக இருக்கிறேன்'' என்றபடி விடை பெற்றுக் கொண்டாள்.

அப்பப்பா! மனிதர்களுக்கு நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்று எண்ணிக் கொண்டு பிளாட்பாரத்தில்

வந்து நின்றாள். அலுவலகம் போக இன்னும் சிறிது நேரம் இருந்தது. மெல்ல நடந்தாள். வயிறு தான் இருப்பதை நினைவு படுத்தியது. மெல்ல ரோட்டைக் கடந்தாள். எதிர் வரிசையில் உள்ள உணவு விடுதியை அடைந்து உள்ளே போனாள்.

காலை நேரத்து அவசரங்கள் உணவு விடுதியை நிறைத்து விட்டிருந்தன. காலியான ஒரு மேசையை அவள் விரைவாகப் போய்ப் பற்றிக் கொண்டாள். அவள் விரைவைப் பார்த்துச் சிரித்துக்கொண்டிருந்தான் எதிரே அமர்ந்திருந்த அந்த இளைஞன்.

அவள் உட்கார்ந்து கொண்டு கைப் பையை மடிமீது வைத்துக்கொண்டாள். பார்வை எதிரே பதிந்து விட்டபொழுது அந்த இளைஞன், ''ஹல்லோ, எப்படி இருக்கீங்க?'' என்றான்.

அவள் அவனை அங்கு எதிர்பார்க்கவில்லை என்பது அதிர்ந்து போன பார்வையில் தெரிந்தது. சமாளித்துக் கொண்டு ''ஹலோ'' என்றாள்.

அவன்தான் அன்று பஸ்ஸில் டிக்கெட் வாங்கியவன். சில தினங்களாக அவள் அவனைப் பார்க்கவில்லை. ஏன் நினைக்கக் கூட இல்லை. அந்த அளவுக்கு ரமேஷ் அவள் நினைவை நிறைத்துக்கொண்டிருந்தான். அலமேலுவின் கல்யாண மும்முரத்தில் மூழ்கிக் கிடந்ததாலும், இருக்கலாம். இன்று எதிரே பார்த்ததும் என்ன பேசுவது என்று புரியாமல் தயக்கம். திடீர் என்று பூத்தது ஒரு மலர்ச்சி.

இதுவரை அவனிடம் பேசியது இல்லை. அதனால் தயக்கமாகவும் இருந்தது. அவன் பார்வையிலோ சகஜ உணர்ச்சிகள் மிளிர்ந்தன. எதிரே சர்வர் வந்து நின்றான். அவன் இயல்பாக அவளது தயக்கத்தைப் பற்றிக் கவலைப்படாதவனாக ஆர்டர் கொடுத்தான்.

''வெறும் காப்பி போதும்'' என்று சன்னக் குரலில் தடுத்தாள். சர்வர் புரியாமல் நின்றான்.

''நீ போய்க் கொண்டு வாப்பா'' என்றதும் சர்வர் போய் விட்டான். போன வேகத்தில் சர்வர் இனிப்புடன் வந்தான்.

''வேறே என்னப்பா இருக்கு? என்ன சாப்பிடறீங்க?''

கேள்வி தனக்குத்தான் என்பதைப் புரிந்து கொண்டாலும், ஓர் ஆடவனின் எதிரே அமர்ந்து சகஜமாகச் சாப்பிடத் தயக்கமாக இருந்தது.

''என்ன கொண்டு வந்தாலும் சரி.''

அவன் எதையெல்லாமோ கொண்டு வரச் சொன்னான்.

''உங்களைப் பார்த்து ரொம்ப நாளாகி விட்டது. எனக்கு வேலை கிடைத்து விட்டது.''

வெடுக்கென்று நிமிர்ந்து பார்த்தாள். ''அந்தக் கடை உங்க சொந்தக் கடையா அல்லது வேலைக்கு இருக்கீங்களா?''

''என் அண்ணன் கடை. எம். எஸ்.ஸி. படிச்சிருக்கேன். கிடைச்ச வேலையை ஏன் விடணும்?''

மனத்தில் சிறு நிரடல்.

''உங்க பெயரைத் தெரிந்து கொள்ளலாமா?'' என்றுகேட்டான் அவன்.

''தாராளமாக. என் பெயர் அரவிந்தா.''

''புது மாதிரியான பெயராக இருக்கிறது. உங்க பெயரை நான் தெரிஞ்சிட்ட மாதிரி என் பெயரைத் தெரிந்துகொள்ள வேண்டாமா? என் பெயர் சாகுல் ஹமீது.''

அவள் கண்களில் மின்னல் தோன்றியது.

'ஓ...இவன் இஸ்லாமிய மதத்தைச் சேர்ந்தவன்' மனத்தில் ஏனோ ஒரு வெறுமை சட்டென்று சூழ்ந்தது. அவனிடம் அவள் என்ன எதிர்பார்த்தாள்? அவன் அவளை அலுவலகம் வரை வந்து கொண்டு விட்டு விட்டுத்தான் போனான்.

அலுவலகம் வந்த பின்பும் கூட மனத்தில் சாகுல்ஹமீதே சிவந்த நிறம், ஸ்டெப் கட்டிங், குருதா, பளீரென்ற பல் வரிசை, படிப்பு — இந்துவுக்கும் முஸ்லிமுக்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது? எல்லோரும் இந்தியாவில் பிறந்துவிட்ட பின்பு 'இந்தியன்' என்ற ஒன்றே போதாதா? எல்லோர் உடம்பிலும் ஒரே சிவப்பு இரத்தம்தானே ஓடுகிறது? மனத்தில் தீர்மானம் காண முடியாத எண்ண ஓட்டங்கள். அவள் அதைத் துரத்திப் பிடித்து நிறுத்த முயன்று தோற்றுப் போனாள்.

மீனாவை அழைத்துப் போக அவளுடைய மைத்துனர் வந்து விட்டார். மீனாவும் டெல்லி போய் விட்டாள். சமையலறையை வரக்குவரக்கு என்று தேய்க்கும் சப்தமும் நின்று விட்டது. சமையல் வேலை அரவிந்தாவைப் பிடித்துக் கொண்டு விட்டது. அம்மாவால் சின்னஒத்தாசைகளைத்தான் செய்ய முடிந்தது. இதனால் அரவிந்தாவுக்கு நேரமே இல்லை.

திடீரென்று ரமேஷிடமிருந்து அவளுக்கு ஒரு கடிதம் வந்தது. அவளைப் பற்றி ஒரு கவிஞனைப் போல் வர்ணித்திருந்தான்.

'எப்படி ஒரு கவிஞனாக மாறினீர்கள்?' என்று கேட்டுவிட்டு மீனு அங்கு வந்திருப்பதைப் பற்றி எழுதினாள். விநோதமான மலரின் மணத்தை நுகர்ந்த நூதன உணர்ச்சியை அவள் அக்கடிதத்தினால் அடைந்திருந்தாள்.

இப்பொழுதெல்லாம் சாகுல் ஹமீதை அடிக்கடி சந்தித்தாள். சேர்ந்து டிபன் சாப்பிட்டார்கள். ஒவ்வொரு தடவையும் அவன் அவள் எண்ணத்தில் உயர்ந்தே நின்றான். பேச்சுக்களில், பார்வையில், செயல்களில் பண்பாடான கண்ணியம் நிறைந்திருந்தது. அமைதி இல்லாத வீட்டுச் சூழ்நிலையில் சாகுலின் நட்பு அமைதியைத் தந்தது எனலாம். மனம் கசிந்து நெகிழ்ந்த சமயங்களில் அவள் தன் வீட்டுப் பிரச்னைகளைப் பற்றி அவனிடம் கூறுவாள். பொங்கிக் குமைந்த எண்ணங்களுக்கு அவன் வடிகாலாக இருந்தான்.

அரவிந்தாவால் குழந்தைகளைப் பார்க்காமல் இருக்க இயலவில்லை. முதல் தடவையாகக் கையில் பூ, பிஸ்கட்டுகளுடன் நளினாவைத் தேடிப் போனபோது, நளினா திடுக்கிட்டுப் போனாள்.

''வாடீ'' என்று இரைந்து கூவினாள். குழந்தைகள் ஓடிவந்து கத்தின. சற்று நேரம் மகிழ்ச்சியும் ஆரவாரமும் வீட்டைக் கலகலக்க வைத்தன.

''தனியா வந்தால்தான் என்ன நளினா? அம்மாவை வந்து பார்க்கக் கூடாது?'' என்று கேட்டாள் அரவிந்தா.

தலையைக் குனிந்து கொண்டாள் நளினா.

''மன உறுதியோட தனியாக நன்றாக வாழ்ந்து காட்டினால் அதைப் பார்த்துச் சந்தோஷப்பட என்னைவிட வேறு யாரும் இருந்துவிட முடியாது நளினா'' என்றாள் அரவிந்தா.

''ஸாரி அரவிந்தா. சின்னக் குழந்தையைப் போல சண்டை போட்டு விட்டேன். இப்ப நினைச்சால் வெட்கமாக வேதனையாக இருக்கிறது'' என்றாள், நளினா.

தங்கையைப் பார்த்த மகிழ்ச்சியைக் கொண்டாட ஒரு கேசரியையும், உப்புமாவையும் பண்ணி உபசாரம் பண்ணினாள். அரவிந்தா ரெண்டு குழந்தைகளையும் உட்கார வைத்துக் கொண்டு ஊர்க்கதை பேசினாள். குழந்தைகள் பள்ளிக்கூடச் சமாசாரங்களைக் கூட்டிக் குறைத்துச் சொன்னார்கள்.

அந்த மகிழ்ச்சியான மாலை அரவிந்தாவை மகிழ வைத்தது.

புத்தகக் கண்காட்சியிலிருந்து வெளியே வந்த அரவிந்தாவைப் பார்த்துவிட்ட சாகுல் ஹமீது ஓடிவந்தான். அவர்களிடையே ஒரு சௌஜன்ய பாவம் தோன்றியிருந்தது. அவன் அரவிந்தாவை 'நீ' என்று அழைத்து வந்தான்.

''நீ ஒரு நாள் என் வீட்டுக்கு வர வேண்டும் அரவிந்தா. என் அம்மா, அண்ணிகள், அக்காக்கள், உன்னைப் பார்க்க விரும்புகிறார்கள்.'' என்றான் ஹமீது.

''தாராளமாக வருகிறேன்'' என்று ஒப்புக்கொண்டாள்.

''என்று வருகிறாய்?''

''இந்த ஞாயிற்றுக் கிழமை. உங்கள் கடை வாசலில் வந்து நில்லுங்கள். சரியாக மூன்று மணிக்கு வருகிறேன்.''

வழக்கம் போல் ஹோட்டலில் நுழைந்து காப்பி குடித்து விட்டுப் பிரிந்தார்கள்.

அன்று அலுவலகத்திலிருந்து அவள் வீடு திரும்பியபோது அம்மா கவரில் சாய்ந்து அமைதியற்றுப் போய் உட்கார்ந்திருந்தாள்.

# இவர்கள்



**மஞ்சுளா**

மஞ்சுளாவின் குடும்பமே கலைக்குடும்பம் தான். அக்கா வயலின் கற்றுக் கொள்கிறார். அப்பா திரைப்படத் துறையிலிருக்கிறார். அண்ணா கவிஞர். மஞ்சுளா போட்டோகிராபி கற்றுக் கொள்கிறார். ''பொழுது போகவேண்டுமே என்று படிக்கப்போனா, எனக்கு போட்டோ ரொம்பவும் பிடித்தமானதாய் விட்டது. பெண்கள் அதிகம் இல்லாத இந்தத் தொழிலில் நான் முதலில் நுழைந்துள்ளேன். நண்பர்களின் விசேஷ நிகழ்ச்சிகளுக்கும், தெரிந்தவர்களின் திருமண நிகழ்ச்சிகளுக்கும் சென்று போட்டோ எடுக்கிறேன். நல்ல மரியாதை கிடைக்கும் இந்தத் தொழிலில் தீவிர கவனம் செலுத்துவதே இனி என் உத்தேசம்''

நிலைத்துவிட்ட காற்றைப் போல அப்பா கூடப் பேச மறந்திருந்தார். இறுக்கமான சூழ்நிலை. சிவகுமாரின் டிரான்ஸிஸ்டர்கூட மௌன விரதம் அனுஷ்டித்தது. அம்மா எப்படி வடாம், அப்பளம் இட மறந்து போனாள்? இவர்களுக்கு என்ன நேர்ந்தது?

''என்னம்மா, என்ன விஷயம்?'' என்று கேட்டஅரவிந்தா, அம்மாவின் அருகில் வந்து அமர்ந்து கொண்டாள்.

காத்துக் கொண்டிருந்தது போல அம்மாவின்கண்களிலிருந்து பொல பொலவென்று கண்ணீர் முத்துக்கள் உதிர ஆரம்பித்தன. அப்பா இடிக் குரலில் உறுமினார்.

''என்ன புதுசாக் கேக்கறே? அந்த நளினா எங்களுக்குப் பெண்ணாகப் பிறக்கல்லே. எங்களுக்கு யமனாகப் பிறந்திருக்கிறாள்.''

விஷயம் என்னவோ நளினாவைப் பற்றித்தான் என்பது புரிந்தது. என்னவாக இருக்கும்? சமையலறைக்குப் போய்ப் பார்த்தாள். ஒருத்தரும் இன்னும் காப்பிகூடக் குடிக்கவில்லை என்று தெரிந்தது. அப்படி அந்த நளினா என்னதான் பண்ணி இருப்பாள்? சுடச் சுடக் காப்பியைக் கலந்து கொண்டு வந்து கொடுத்துவிட்டுத் தன் காப்பியுடன் அம்மாவிடம் வந்து உட்கார்ந்தாள்.

''பதற்றப்படாமல் சொல்லு. என்ன நடந்தது? நளினா என்ன பண்ணினாள்?''

''உங்கக்கா ரெண்டு குழந்தைகளை வச்சிண்டு விவாகரத்து வாங்கிக்கப் போறாளாம்.''

அரவிந்தாவுக்குச் சப்பிட்டு விட்டது. ''ப்பு...இவ்வளவு தானா?'' என்று கேட்டதும், அம்மாவுக்குக் கோபம் வந்துவிட்டது.

''என்னடிது, இவ்வளவுதானான்னு கேட்கிறே?'' என்று அதிர்ச்சியுடன் கேட்டாள்.

''பின்னே என்னம்மா? புருஷன் தப்புப் பண்ணலாம். இவ அவனை வேண்டாம்னு சொல்லக் கூடாதா?''

''சொல்லலாம்டி அம்மா சொல்லலாம். காலம் கலி காலம். புருஷனை வேண்டாம்னு சொல்லலாம். மூனு வருஷத்துக்கு முன்னாடி அவன் தப்புப் பண்ணியபொழுதே இதைப் பண்ணினா அர்த்தமுண்டு. அவன் வந்து கூப்பிட்டபொழுதெல்லாம் நாய் மாதிரி பின்னால் போனாளாம். அவன் மனசு திருந்தி தப்புப் பண்ணிட்டேன்னு வரும்போது இவ விவாகரத்து வாங்கிக்கொள்ளப் போகிறாளாம்.'' படபடவென்று பொரிந்து கொதித்த அப்பாவின் முகம் சிவந்திருந்தது.

''அவர் மனசு திருந்தினா தப்பு பண்ணலேன்னு அர்த்தமா?'' என்று கிண்டலாகக் கேட்டாள் அரவிந்தா.

'உம்' என்று உறுமினார் அப்பா.

''எல்லாம் நம்ம வீட்டிலேதான் நுழையணுமா? கர்மம் கர்மம்'' என்ற அம்மா மண்டையில் அடித்துக்கொண்டாள்.

''அவ எனக்குப் பெண்ணே இல்லை'' என்றார் அப்பா.

''அவனும் ரெண்டு குழந்தைகளுக்குத் தகப்பன்டீ. அதுக்காக உறவு விட்டுப் போகுமா? குடும்ப பந்தம்கிறது அவ்வளவு இலேசானதல்ல. பரம்பரையைத் தோற்றுவிக்கிற மனுஷக் கடல்டி'' என்று பொங்கினாள் அம்மா.

அரவிந்தாவுக்கு அலுப்பாக வந்தது. ''இப்ப என்னை என்ன பண்ணணும்கறே?'' என்று கேட்டாள்.

''உங்கக்காவுக்குப் புத்தி சொல்லு போ.''

அரவிந்தா சொல்லும் புத்திகள் எல்லாம் நளினாவுக்கு எடுபடுமா என்ன? அதிகாலையில் வேகமாக ஓடியதுதான் மிச்சம். ''அரவிந்தா, புத்தி சொல்ற கட்டம் எல்லாம் தாண்டிப் போச்சு. இரண்டு பேர்களும் மனம் ஒப்பினால் விவாகரத்து கிடைத்துவிடும். அதற்கான ஏற்பாடுகளை எல்லாம் நான் செய்துகொண்டு வருகிறேன்.'' என்றாள் நளினா தீர்மானமாக.

''எப்படியோ தொலைந்து போ'' என்ற அரவிந்தா திரும்பி விட்டாள். ''உன் ரெண்டாவது பெண் சொன்னாக் கேட்க மாட்டாள்'' என்று கூறிவிட்டாள் அம்மாவிடம்.

ஞாயிற்றுக் கிழமை மூன்று மணிக்கு கிளம்பினாள் அரவிந்தா. அவளுக்காக சாகுல் தயாராகக் காத்துக் கொண்டிருந்தான். அவளைப் பார்க்க அவன் வீட்டினர் ஆவலாகக் காத்துக் கொண்டிருப்பதாகச் சொன்னான். அவளுக்கு அது சற்றுக் கர்வத்தைக் கூடக் கொடுத்தது எனலாம்.

முன் ஹாலில் சாகுலின் அம்மா உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

''இது என் அம்மா.''

முகத்தை நிமிர்த்திப் பார்த்துத் தலையை வருடிக் கொடுத்தாள் அந்த அம்மாள். ''லட்சணமா, லட்சுமி மாதிரி இருக்கே. உன்னைப் பற்றி அடிக்கடி சாகுல் பேசுவான். வாம்மா உள்ளே.''

அவள் உள்ளே போனாள். நான்கைந்து பெண்மணிகள் குத்து விளக்கைத் துலக்கி ஏற்றி வைத்தது போல். அவளைப் பார்த்ததும் சட்டென்று சூழ்ந்து கொண்டதில் ஓர் அன்னி

யோன்னியம் தெரிந்தது. மெல்லச் சிரித்தாள் அரவிந்தா. பிறகு சாகுலைப் பார்த்தாள். புரிந்து கொண்ட சாகுல் அவர்களை அறிமுகப்படுத்தி வைத்தான்.

''அரவிந்தா, இது என் தங்கை. இது என் பெரிய அண்ணி, இது ரெண்டாவது அண்ணி, இது மூன்றாவது அண்ணி — உங்க வகுப்பைச் சேர்ந்தவங்க.''

அவள் திடுக்கிட்டுப் போய்க் குவித்த கரத்தை விரித்தாள். இப்படியும் முடியுமா? இதுதான் இந்தியன் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டா? இது எப்படி முடிந்தது? இதை எதற்காகத் தன்னிடம் சொல்லுகிறான்? அவள் குழம்பிப்போனாள்.

''பலகாரம் சாப்பிட அவன் அம்மா அழைத்தாள்.

நீண்ட வரிசையில் அமர்ந்து கொண்டார்கள். ஒரு பையன் கொண்டு வந்த அயிட்டங்களை யெல்லாம் பார்த்து அவள் குனிந்து கொண்டாள்: மேஜையின் நடுவே வைத்திருந்த கேக், பழங்கள், பிஸ்கட் வகைகளை அவள் எதிரே எடுத்து வைத்தான் சாகுல்.

''நீ இதெல்லாம் சாப்பிட மாட்டாயா?'' என்று கேட்டாள் ஹமீதின் அம்மா.

அவள் தலையை அசைத்தாள். ''கொஞ்சம் போட்டுக் கொண்டுதான் பாரேன். பழகினா சரியாப் போகும். என் மூணாவது மருமக இப்படித்தான்'' என்றாள் சாகுலின் அம்மா. அவள் முடிப்பதற்குள்,

''என் அண்ணி என்னமா உருது பேசுவாங்க தெரியுமா? ஒன்றிரண்டு பாட்டுக்களைக்கூட கம்போஸ் பண்ணி இருக்காங்க.'' என்றான் ஹமீது.

''எதுவுமே பழக்கத்தினால் வரதுதான். நம்மைப் போல உயிரோட இருக்கிற ஜீவன்களை அழித்து நாம உணவாக்கிக் கொள்ள வேண்டுமா என்ற கருத்தைக் கொஞ்சம் கடைப்பிடிக்க லாமே?'' என்றாள் அரவிந்தா.

''எங்களுக்கு இதெல்லாம் தோணுவது இல்லே'' என்றாள் சாகுலின் அம்மா.

''தப்பா நினைக்காதிங்க அம்மா. தப்பாச் சொல்லியிருந்தா என்னை மன்னிச்சுடுங்க'' என்றாள் வினயமாக.

அதற்குப் பிறகு நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். உருதுப் பாடல்களைப் பற்றி, அவர்களின் ரம்ஜான் நோம்பைப் பற்றி யெல்லாம் தெரிந்து கொண்டாள். அவள் வீடு திரும்பும் பொழுது இருட்டி விட்டது. அன்று ஏகாதசி என்பதால் அம்மாவும் அப்பாவும் பகலில் பலகாரம் பண்ணி யிருக்கிறார்கள் அதனால் இரவு வெறும் பால் மட்டும் குடித்துவிட்டுத் தங்கள் விரதத்தை அனுசரித்தார்கள்.

அவளுக்கும் பசியில்லை. வெறும் தயிர் சாதமாகப் பிசைந்து சிவகுமாருக்குப் போட்டுவிட்டு அவளும் சாப்பிட்டுவிட்டதாகப் பெயர் பண்ணினாள். வீடு எட்டு மணிக்கே அடங்கி விட்டது. அவளுக்கு உறக்கம் வராதது போல் மனம் அலைந்தது. அதனால் காற்றுட மொட்டை மாடியில் வந்து அமர்ந்தாள். நளினுவின் விவாகரத்து விஷயத்தைக் கேட்டதிலிருந்து அம்மாவும் அப்பா வும் அரை உடம்பு ஆகிவிட்டாற்போல் அவளுக்குத் தோன்றியது.

மாடியின் தனிமையில் அமர்ந்ததும் சாகுல் ஹமீதின் நினைவு பீறிட்டது. இப்பொழுது என்ன செய்துகொண்டிருப்பான்?

இவர்கள்



வள்ளி

பி. யூ. சி யிலிருந்து ஓட்டப் பந்தயத்தில் பரிசு வாங்கிக்கொண்டு வருகிறார் வள்ளி, பச்சையப்பன் கல்லூரியில் எம். ஏ. படிக்கிறார்.
100 மீட்டர்ஸ், 1000 மீட்டர்ஸ் ரன்னிங் இவர் அதிகம் கலந்து கொள்வதாம். உடலை ஆரோக்யமாக வைத்திருக்க ஓட்டம் உதவுகிறதாம். இவரின் பொழுதுபோக்கு இந்துமதி, சிவசங்கரி நாவல்களைப் படிப்பதுதான். எப்போதாவது சிறுகதைகளையும் எழுதுவார்.

## இவர்கள்



### சவீதா

ஸ்டெல்லாமேரிஸ் கல்லூரியில் IIவது எம். எஸ். ஸி படிக்கும் வி. சவீதா வீணை வாசிப்பதில் நன்கு தேர்ந்துள்ளார். பல போட்டிகளுக்குச் சென்று வந்துள்ளார். வானொலியில் இளைஞர் இசையில் இப்போது தன் திறமையைக் காட்டிக்கொண்டு வருகிறார். சவீதா மியூசிக் அகெடமியில் பயிற்சிதரும் திருமதி. ஜெயலட்சுமியின் மாணவி. சவீதா வீணையில் சிறந்து விளங்க வேண்டுமென்பதே பெற்றோர்களின் ஆசையாம்.

எதற்காகத் தன்னை அவர்கள் வீட்டுக்கு அழைத்துப் போனுன்? தன்னுல் அந்தக் குடும்பத்தில் இணைய முடியுமா? 'எங்கள் குடும்பத்திலும் உன்னைப் போல் ஓர் இந்துப் பெண் வாழ்க்கைப் பட்டிருக்கிருள். நீ தயங்க வேண்டாம். உன் வருகையை வர வேற்கக் காத்திருக்கிறேன்' என்று சூசகமாக உணர்த்தத்தான் அழைத்துக் கொண்டு போனுனு?

அவளுக்குச் சிரிப்பைக் கொடுத்தது இந்த எண்ணங்கள். நளினு வின் விவாகரத்துச் சமாசாரத்தையே இறந்த வீட்டின் துக்க மாகக் கொண்டாடுகிருள் அம்மா. நான் ஹமீதின் குடும்பத்தில் இணைய முடியுமா? சாகுல் ஹமீதின் உள்ளம் புரிந்து கொண்டதால் மெல்லக் குத்திய ஊசியின் வலியாக வேதனை பீரிட்டது. இந்த எண்ணத்தை வளர விடலாமா? எப்படிச் சொல்வது?

மறுநாள் மாலை. அலுவலகம் முடியும் சமயம் சாகுல் ஹமீது அவளுக்காக வந்து காத்திருந்தான். வெளியே வந்த அவள் திகைத்துப் போனுள்.

''நீங்கள் உள்ளே வரக்கூடாது?'' என்று கேட்டாள்.

அவன் ஒரு சிரிப்பைச் சிரித்தான். அவனும் குழம்பிப் போயிருக்கிறுன் என்பதைப் புரிந்து கொண்டாள். ஓர் ஐஸ் கிரீம் பார்லரில் அமர்ந்து ஐஸ்கிரீம் சாப்பிடும்பொழுதுதான் மெல்லக் கேட்டான்.

''அரவிந்தா, நீ வந்து போனதிலிருந்து உன்னைப் பற்றியே என் வீட்டார் பேசிக் கொண்டிருந்தார்கள்.''

''எனக்குக்கூட உங்கள் வீட்டு நினைவாக இருந்தது'' என்றுள் மெல்லிய குரலில்.

அவன் அவளையே கூர்ந்து பார்த்தான்.

''உலகம் பூராவும் ஒரே மக்கள்தான் என்று நீ புரிந்துகொண்டிருப்பாய். இந்தத் தத்துவங்களைப் புரிந்து கொண்டால், இன, மத, வேறுபாடுகளைக் கடந்து விடலாம் அரவிந்தா. புரிந்து கொண்டாயா?''

''ஐஸ்கிரீமைவிட உங்கள் பேச்சு நன்றாகவே இருக்கிறது. நீங்கள் சொல்வது, சொல்ல வரப் போவது எல்லாமே எனக்குப் புரிகிறது. இன, மத வேறுபாடுகளைத் திருமணம் ஒன்றுல் மட்டும் ஒன்ருக்கி விட முடியுமா? சில பழக்க வழக்கங்களின் சகிப்புத் தன்மைகள் மிகவும் அவசியம் சாகுல். ஒரே குடும்பத்தில் ஒரே மதத்தில் தாய்-தந்தைக்கும், குழந்தைகளுக்கும் ஒற்றுமை இல்லாமல் போவதில்லையா?''

''பின்னே என்ன தடை?''

''தடை ஒன்றுமில்லை. என் குடும்பம் இன்னும் இவ்வளவு முற்போக்குகளில் ஈடுபடவில்லை. என் குடும்பத்தைப் பற்றி உங்களிடம் கூறியிருக்கிறேன். எத்தனை பூசல்கள்? திருமணம் என்பது இரு மனங்களின் சங்கமம் என்றுலும், பெற்றோர்களின் பூரண சம்மதம் தேவை. உங்கள் பக்கம் அது பூரணமாக இருக்கும். என் பக்கம் அது இல்லை. அதைத் தவிர நீங்கள் என் நண்பர். இந்தப் பிரச்னையை வைத்து நான் முடிவு காண முயன்றதே இல்லை சாகுல்.''

அவன் முகம் கூம்பி விட்டது. மீதி ஐஸ்கிரீம் நீர்த்துப்போய் அப்படியே இருந்தது. அவன் இப்படிப்பட்ட பதிலை எதிர்பார்க்கவில்லை என்பது அவளுக்குப் புரிந்தது.

''என்னை மணந்துகொள்ளவில்லை என்பதால் உன்னை நான் வெறுக்க மாட்டேன் அரவிந்தா. இந்தக் கணம் எப்படி இருக்கிறது தெரியுமா? பொன் மலரைக் கண்டெடுத்த லோபியின் மனத்தைப் போல இருக்கிறது. வெறும் உடல் வாழ்க்கைக்காக ஆத்மாவில் கிடைக்கும் சுகத்தை — உன் நட்பை நான் இழந்து விடத் தயாராக இல்லை. என் உதவி எப்பொழுது தேவையென்றாலும் கேட்கலாம். நான் காத்துக் கொண்டிருப்பேன்'' என்று கூறிய பொழுது அவன் குரல் தழுதழுத்தது.

''நாம் எப்பொழுதும் நல்ல நண்பர்களாக இருப்போம். என்னைத் தவறாக நினைக்காதீர்கள் ஹமீது.''

அவன் மனம் எப்படி உடைந்து விட்டிருக்கும் என்பதை அவள் உணர்ந்து கொண்டாள். அதனால் வேதனைஅடைந்தாள்.

''ஹமீது, என் மனத்தில்... என் மனத்தில்...'' என்று தடுமாறினாள்.

''என்ன அரவிந்தா?''

''ஏற்கனவே அங்கு ரமேஷ் — என் அத்தை மகன் குடிபுகுந்து இருக்கிறார்.''

தீ சுட்டது போல் தவித்துப் போனாலும், தன்னை அடக்கிக் கொண்டான் அவன்.

''அவன் கொடுத்து வைத்தவன் அரவிந்தா'' என்றான்.

அவளைத் தெருமுனை வரை கொண்டு விட்டான். பூக்கடை ஒன்றில் நின்று சண்பகப் பூக்களை வாங்கிக் கொடுத்தான். அவள் கண்ணீரைக் கரை கட்டி நிறுத்திக் கொண்டு தவித்தாள். போகும் பொழுது கையை ஆட்டிவிட்டுப் போனான். முகத்தில் குமைந்து நின்ற வேதனை நெஞ்சை உடைக்கும் எண்ணச் சிதறல்களை அவள் அறியாதவளா?

''வெரி சாரி ஹமீது, என்னால் இந்தப் பிரச்னையைத் தீர்க்க முடியாது'' என்று கூறிக் கொண்டாள்.

வீட்டுக்குப் போனதும் வேதனை தாளாமல் படுக்கையில் விழுந்தாள். அம்மா கதா காலட்சேபத்துக்குப் போயிருந்தாள். அப்பா எங்கோ போயிருந்தார். சிவகுமார்தான் அவள் வருகிறாள் என்பதை உணர்ந்து கதவைத் திறந்தான். அவள் படுக்கையில் கிடப்பதை அறியாமல், ''அக்கா, காப்பி குடி. ப்ளாஸ்கில் அம்மா ஊற்றி வைத்திருக்கிறாள்'' என்றான்.

நெஞ்சைப் பிளந்த விம்மல்களை அடக்கிக்கொண்டாள். எழுந்து காப்பியைக் குடித்துவிட்டு வந்தாள்.

''என்னக்கா, பேச மாட்டேன் என்கிறாய்?''

''தலையை வலிக்கிறது. படுத்துக் கொள்கிறேன் சிவா. அம்மா வந்தாக்கூட என்னை எழுப்பாதே'' என்றாள்.

கண்களை இறுக்க மூடிக்கொண்டாலும் வாடிய பூவாக சாகுலின் முகமே வந்து நின்றது. தனது முகத்தை யாரோ தடவுவதை உணர்ந்து திடுக்கிட்டுக் கண் திறந்து பார்த்தாள். தலைவலி மருந்துடன் சிவா அவள் நெற்றியைத் தேடிக் கரத்தை நீட்டித் துழாவிக் கொண்டிருந்தான்.

''அக்கா, அக்கா, அழறியா என்ன?'' என்று தனது ஈரப் பசை படிந்த விரல்களைக் கொண்டு கேட்டான்.

''உன் பாசத்தை நினைத்து அழுதேன் சிவா. கடவுள் உனக்குப் பார்வை இல்லாமல் பண்ணி விட்டார் பார்த்தியா!'' என்றாள் அரவிந்தா. கண்ணீர் கொட்டியது. எதுக்கு அழுகிறோம் என்ற முகாந்திரம் இல்லாமல் அழுதாள்.

''நீ கவலைப்படாதே அக்கா. ரமேஷ் அத்தான் பிரபல டாக்டர் கிட்ட கண்ணைக் காட்டி ஆபரேஷன் பண்ணி விடறேன்னு சொல்லி யிருக்கார். பாரேன், ஒரு நாள் எனக்குக் கண் வந்துவிடும். அப்ப என்ன பண்ணுவேன் தெரியுமா?''

அவனுடைய பேச்சில் அவளுடைய வேதனை சிறிது குறைந்தது. ''என்ன பண்ணுவே?''

''நிறையச் சினிமா பார்ப்பேன். முடிஞ்சா தினமும் பார்ப்பேன்.'' தான் சொன்னதைத் தானே அனுபவித்துச் சிரித்தான் சிவகுமார்.

கண் தெரியாத இந்தச் சிவகுமார் எப்படி நம்பிக்கையுடன் வாழ்கிறான்? ஹமீதின் ஆசையைத் தன்னால் நிறைவேற்ற முடியவில்லை. இதற்காக இப்படிக் குலைந்து போகலாமா? மளமளவென்று எழுந்தாள்.

''ஏன் எழுந்துட்டே?''

''ஒண்ணுமில்லேடா. ஸ்வாமிக்குக் கூட வந்து நமஸ்காரம் பண்ணவில்லை. ஒரு நிமிடம் பண்ணிட்டு வந்துடறேன்.''

முற்றத்துத் தொட்டி தண்ணீரை வாரி வாரி முகத்தில் இறைத்துக் கொண்டாள். புதுத் தெம்பு பிறந்தது. விளக்கேற்றி ஸ்வாமிக்கு நமஸ்காரம் பண்ணினாள்.

''கடவுளே, எனக்கு நம்பிக்கையைக் கொடு. நல்ல மனத்தைக் கொடு.''

மனத்தில் ஏதோ ஓர் அமைதி பிறந்தது.




### சுண்டல் கூட்டு!

நவராத்திரி கொலுவுக்கு என்று அழைத்திருந்த ஏழெட்டு பேர் வீட்டுக்குப் போய் விட்டுத் திரும்பினால் வீட்டில் காராமணி, பட்டாணி, மொச்சை என்று பல விதமான சுண்டல் பொட்டல மயம்! என்ன செய்வது என்று யோசித்தேன்! அடுப்பில் வாணலியைப் போட்டு இரண்டு ஸ்பூன் டால்டா ஊற்றிக் காய்ந்ததும் பட்டை சோம்பு மசாலா சேர்த்து இரண்டு வெங்காயத்தையும் தக்காளியையும் பொடியாக நறுக்கி போட்டு வதக்கியதும் ஒரு எலுமிச்சம் பழம் அல்லது புளி கரைத்து விட்டு ஒரு ஸ்பூன் சர்க்கரையுடன் மொத்தக் கலவை சுண்டலையும் அதில் கொட்டி ஒரு மசாலா கூட்டு தயாரித்து விட்டேன். இரவு சப்பாத்திக்கு அதை பரிமாறியதும் 'பிரமாதம்' என்று வீட்டில் எல்லோரும் ரசித்துச் சாப்பிட்டார்கள்! நவராத்திரி காலங்களில் உங்கள் வீட்டிலும் இம்மாதிரி சுண்டல்கள் நிறைய வந்து விட்டால் இதே வழியைக் கையாண்டு புது மசாலா கூட்டு செய்து பார்த்துவிடுங்கள்!

-திருமதி. ரமணிரங்க நாதன்.

அன்று கோர்ட்டில் நளினுவுக்கும் வசந்துக்கும் விசாரணை நாள். வசந்தினால் இதற்கு ஒப்புக்கொள்ளவே முடியவில்லை. நேராகவே வந்து கெஞ்சினான்.

''நீ என்னைக் கணவனாக நினைக்கா விட்டாலும் சரி; கூட வாழாவிட்டாலும் சரி; நமக்கு ஒரு பாலமாகக் குழந்தைகள் இருக்கிறார்கள். நான் ஒரு கரை, நீ மறு கரை இந்த இரு கரைகளும் பாலத்தை இணைக்க மிகவும் அவசியம் நமது உறவு நளினா'' என்று மன்றாடிப் பார்த்தான்.

நளினா மசியவே இல்லை. அவன் வரப்போவது தெரிந்ததும் குழந்தைகளைப் பாட்டி வீட்டில் கொண்டுவிட்டுவிட்டாள். வந்தவன் மூன்றாம் மனிதனாக மன்றாடிவிட்டுப் போனான். கடைசியில் இருவரும் பிரிந்து போவதாகக் கூறி நீதிமன்றம் வரை வந்து விட்டது. நளினா குழந்தைகளுடன் வந்து காத்திருந்தாள்.

வசந்த் நீதிமன்றத்தின் படிகளில் ஏறி வருவதைக் குழந்தைகள் பார்த்து விட்டார்கள்.

''அப்பா வந்தாச்சு; அப்பா வந்தாச்சு'' என்று கைகளைக் கொட்டிக் கொண்டு குதித்தனர். சிலர் இவர்களைப் பார்த்துக் கொண்டே போனார்கள்.

''இதுக்குப் போய் என்ன கும்மாளம்?'' என்று சீறிய நளினா பொத்துப் பொத்தென்று முதுகில் நான்கு சாத்துச் சாத்தினாள்.

இரண்டும் ஓவென்று அழத் தொடங்கின. தூரத்தில் வசந்த் தளர்ந்த நடையில் வராந்தா கோடியில் வந்து கொண்டிருந்தான். அவ்வளவுதான். குழந்தைகள் இருவரும் ஓடிப்போய் அவன் கால்களைக் கட்டிக் கொண்டார்கள். வசந்த் இருவரையும் இரு பக்கத்தில் வைத்து அணைத்தான். இதுதான் இவர்களைக் கொஞ்சும் கடைசி நாளோ? கண்கள் கலங்கின.

''அப்பா, அப்பா, அம்மா எங்களை எப்படி அடிச்சா பார். நீ வந்து கேளுப்பா. நீ அம்மாவை அடிப்பா'' என்றான் மோகன்.

கையைப் பிடித்து இழுத்தன ஆளுக்கொரு பக்கமாக. இதை நளினா தூரத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்தாள்.

''இங்கே வாங்கடா'' என்று அதட்டலாக அழைத்தாள்.

வசந்த் பரிதாபமாகத் தோற்றமளித்தான். சில நாட்களாகவே மழிக்கப்படாத தாடி, மீசை. கண்கள் கூட சற்று உள்ளடங்கி! இதெல்லாம் தன்னைக் கரைக்க அவன் போடும் வேஷங்கள் என்று குமுறினாள் நளினா.

''நீ ஏம்பா வீட்டுக்கே வரல்லே?'' என்று கேட்டாள் ஆனந்தி.

''நீ ஊருக்குப் போயிருந்தே இல்லேப்பா?''

''அப்பா, நம்மாத்திலேயும் டி. வி. வாங்கி வைப்பா. எதிர் வீட்டுப் பாலு என்னமாய்ப் பீத்திக் கொள்கிறான் தெரியுமா?'' என்ற மோகன் குதியாய்க் குதித்தான். வசந்த் தன்னுடைய வார்ப்படமாக அமைந்துள்ள அச்சிறு உருவத்தையே கண்ணிமைக்காமல் பார்த்தான்.

இதை யெல்லாம் நளினவும் கேட்டுக்கொண்டுதான் இருந்தாள். வசந்த் அவள் அருகில் வந்து நின்றான்.

''குழந்தைகள் பேசுவதை யெல்லாம் கேட்டாய் அல்லவா? தவறு செய்யாத மனிதனே இல்லை எனலாம். நளினா, நான் தவறு செய்தேன். நீ என்னைத் திருத்தப் பக்கத்தில் இருந்தாயா? பூதக் கண்ணாடி போட்டுக் காட்டிவிட்டு பிறந்த வீட்டுக்கு ஓடி வந்து விட்டாய். இந்த மோகன் பிறந்த பிறகு நீயும் நானும் ஒரு நாள் கூட சேர்ந்து வாழவில்லை. பாசத்தைக் காட்டக் குழந்தைகள், நீ ஒருத்தரும் என் அருகில் இல்லை.''

''என் ஆண்மை விம்மில் துடித்தது. எத்தனை ஆண்டுகள் ஆகிவிட்டன நம் திருமணம் நடந்து? அப்பா அம்மா பந்தத்தைச் சட்டம் பிரிக்கலாம். ஆனால் நினைவால் குழந்தைகளின் பாசத்தைப் பிரிக்க முடியாது.''

அவன் பேசப் பேச அவள் புடவைத் தலைப்பால் கண்களை ஒற்றிக் கொண்டாள்.

''அப்பப்பக் குழந்தைகளைப் பார்த்து, 'நான்தான் உங்கப்பா'ன்னு ஆஜர் கையெழுத்து உன் பிறந்த வீட்டில் வந்து போட்டுவிட்டுப் போவேன். அப்பொழுதுகூட குழந்தைகளை வெளியே அனுப்பி விடுவாய். கடைசியாக குழந்தைகளைப் பார்த்து நான் கிட்டத்தட்ட ஒரு வருடத்துக்கும் மேலாகப் போகிறது. இருந்தாலும் தூரத்தில் பார்த்தே என்னை எப்படி அடையாளம் கண்டு கொண்டார்கள்? நீதிமன்றத்தில் எத்தனையோ பேர்கள் வருகிறார்கள் — போகிறார்கள். அவர்களை ஏன் அப்பான்னு கூப்பிடலை?''

நளினாவால் பேச முடியவில்லை. அவன் அவள் அருகே வந்தான். ''நளின், இப்பவும் தாமதமாகிவிடவில்லை. பிரிவு வரை வந்து இணைந்த தம்பதியாக நாம் இருக்கலாம். குழந்தைகளுக்காகவாவது நாம் சேர்ந்து வாழலாம்.''

நளினா அவன் பக்கத்தில் வந்து நெருங்கி நின்றாள்.

''ஏம்மா, நீ அப்பா கூடக் 'கா' விட்டிருந்தியா?'' என்று கேட்டான் மோகன்.

நளினாவும் வசந்தும் சிரித்தார்கள்.

''என்ன பண்ணுவோம் சொல்லு. எல்லாம் நீ சொல்றபடி நடக்கறேன்.''

''சரி, ஒரு ஹோட்டல்லே போய்ச் சாப்பிட்டுவிட்டு சினிமா போவோம். பிறகு எங்க வீட்டுக்குப் போவோம். நான் இப்போ இருக்கிற வீட்டிலேயே நம்ம குடித்தனத்தைப் பண்ணலாம். நான் இந்த வேலைக்குப் போய்க் கொண்டு இருப்பேன்.''

எல்லாவற்றுக்கும் ஒப்புக்கொண்டான் வசந்த்.

''ரெண்டு ஐஸ்கிரீம்'' என்று குழந்தைகள் கையைப் பற்றிக் கொண்டார்கள்.

திடீர் என்று ஒரு நாள் காலை ரமேஷ் வந்து நின்றான். அவனை அவர்கள் எதிர்பார்க்கவே இல்லை. கதவைத் திறந்த அரவிந்தா திகைத்துப் போனாள்.

''என்ன திடீர்னு?'' முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு நின்றாள்.

''என்ன பார்க்கிறாய்? எனக்கு பம்பாய்க்கு மாற்றல் ஆகிவிட்டது.''

அரவிந்தா வழி விட உள்ளே வந்தான் ரமேஷ். அவள் காப்பியைக் கலந்து கொண்டு வந்தாள். ''இதைச் சொல்லவா இவ்வளவு தூரம் ஓடி வந்தீர்கள்?'' என்று கேட்டுவிட்டு அழகாகச் சிரித்தாள்.

''இல்லை; என் அம்மாவிடம் போய் வேறு ஒன்றைச் சொல்ல. உனக்காக நான் எவ்வளவு காலம் காத்திருப்பது? இதை என் அம்மாவுக்குச் சொல்ல வேண்டாமா?''

''யாரு, ரமேஷா?'' குளியலறையிலிருந்து அரவிந்தாவின் அம்மா வந்தாள்.

மாடியிலிருந்து மகாலிங்கம் எழுந்து வந்தார். அரவிந்தா சமையலறைக்குள் மறைந்தாள்.

''ரமேஷ், எங்கே யிருந்து வரே? டெல்லியிலிருந்தா? மீனாவைப் பார்த்தியா?'' என்று கேட்டார் மகாலிங்கம்.

''இல்லை; எனக்கு பம்பாய்க்கு மாற்றலாகிவிட்டது. நேரே தஞ்சாவூர்லேந்து வரேன். அம்மா உங்களை முகூர்த்தத்துக்கு நாள் பார்க்கச் சொன்னாள்.''

அவன் சொன்னதைக் கேட்டுத் திகைத்தார்கள். அவர்கள் அரவிந்தாவின் வருமானம் இல்லாமல் எப்படிக் குடும்பம் நடக்கும் என்று அப்பா தவித்தார். கல்யாணத்தை நடத்துவதும் முடியாத காரியம். ரமேஷின் அப்பா, அம்மாவே புறப்பட்டு வந்து விட்டார்கள்.

கல்யாணம் நிச்சயமாகி விட்டது. இதை அவள் சாகுல் ஹமீதிடம் சொன்னாள். அந்தக் கணத்தில் அவன் முகம் வாடியது.

தன்னைச் சட்டென்று சமாளித்தவனாக, "என் வாழ்த்துக்கள் அரவிந்தா. இந்த ஏழை நண்பனை மறக்க மாட்டாயே?" என்று கம்மிய குரலில் கேட்டான்.

அவள் பூவாகச் சிரித்தாள். "எல்லாவற்றுக்கும் இந்த மனம்தான் காரணம் ஹமீது. நான் என்றைக்கும் மறக்க மாட்டேன்."

கல்யாணத்தன்று சாகுல் ஹமீது வந்திருந்தான். மனத்தை முகத்தில் காட்டாத பெருந்தன்மை. முகூர்த்தம் முடிந்து அவர்கள் மணையில் அமர்ந்திருந்த சமயம் வெள்ளிக் குத்துவிளக்கை அவளிடம் கொண்டு வந்து நீட்டினான்.

"அரவிந்தா உங்கள் பூஜை அறையில் இந்த விளக்கை உன் கையாலேயே ஏற்ற வேண்டும்"

அவனது உருக்கமான வேண்டுகோள் அவள் கண்களில் நீரை வரவழைத்தது. இதை மறைக்க அவனை ரமேஷுக்கு அறிமுகம் செய்து வைத்தாள்.

"ரமேஷ், இது என் ஃப்ரண்ட் சாகுல் ஹமீது."

ரமேஷ் அவனைக் கூர்ந்து பார்த்தான்.

அரவிந்தா ரமேஷுடன் பம்பாய்க்குக் கிளம்பும் நாளும் வந்தது. நளினி, அலமேலு என்று வீடு கொள்ளாமல் மனிதர்கள். அரவிந்தா கண் கலங்கினாள்.

"நாங்கள் உதவி செய்கிறோம்" என்று தைரியம் சொன்னார்கள் நளினியும் அலமேலுவும்.

"வேலையை விட்டுவிடு" என்றான் ரமேஷ்.

"இவ்வளவு வருடங்கள் பார்த்த வேலை. நாம் திரும்பச் சேர நினைத்தால் கிடைக்குமா? நீயே ஒருவேளை சென்னைக்கு மாற்றிக் கொண்டு வந்தால் அரவிந்தா வேலைக்குப் போகலாமே?" என்று கூறினார் அப்பா.

அதனால் அவள் லீவில் அவனுடன் கிளம்பினாள்.

"அக்கா, என்னை மறந்துடாதே. நல்ல டாக்டராகப் பார்" என்றான் சிவகுமார்.

அவனை அணைத்துக்கொண்டு அழுதுவிட்டாள் அரவிந்தா. நளினி, அலமேலு வீட்டுடனேயே வழியனுப்பி விட்டார்கள். மகாலிங்கம் மட்டும் வந்தார்.

புகைவண்டி நிலையத்திற்கு சாகுல் ஹமீது வந்திருந்தான். பழங்கள், பிஸ்கட்டுகள் என்று பை கொள்ளாமல் கொண்டு வந்திருந்தான். ரமேஷ் வழியில் படிக்கப் புத்தக ஸ்டாலுக்குப் போய் புத்தகம் வாங்கப் போனான். மகாலிங்கம் கீழே நின்று கொண்டிருந்தார்.

"அரவிந்தா, எனக்குக் கடிதம் போடுவாயல்லவா? பாலையில் மழை வராதா என்று காத்திருப்பது போல் காத்துக்கொண்டிருப்பேன். என்னை மறக்க மாட்டாயே?"

அரவிந்தாவின் கண்கள் நீர்த் திரை இட்டது.

"என்னால் எப்படி மறக்க முடியும்? அவ்வளவு நன்றி கெட்டவளா, நான்? மனைவியாக வாழ முடியாமல் சம்பிரதாயங்களும், வரைமுறைகளும், பழக்க வழக்கங்களும் மறுக்கலாம். ஆனால் சகோதரியாக வாழ எந்தச் சம்பிரதாயங்களும் குறுக்கே நிற்க



## யோசனை

பெரும்பாலும் எல்லோர் வீட்டிலும் 'டெலிபோன் டைரக்டரி' இருக்கும். அதில் உள்ள சிறிய எழுத்துக்களையோ, நம்பர்களையோ படிக்க முடியாமல் திண்டாடுபவர்களுக்கு ஒரு சிறந்த யோசனை. வீட்டிலிருக்கும், கண்ணாடி 'பேப்பர் வெயிட்' (Glass paper weight) ஒன்றை அந்த எழுத்துக்களின் மீதோ நம்பர்களின் மீதோ வைத்து நகர்த்தினால், எழுத்துக்கள் பெரியதாக, படிக்கக் கூடியதாக இருக்கும்.

— அ. வா. தேவன்

# FOR TOTAL RELIABILITY IN HIGH TENSILE FASTENERS: 'TVS'

Yes, for years, the name 'TVS' has been synonymous with total reliability in quality high tensile bolts, screws and nuts.

Precision engineered, cold forged and heat treated–the standard and special fasteners are manufactured to meet specific requirements.

What's more, Sundram Fasteners plans production to suit delivery commitments which will optimize your procurement efficiency. The result: a big saving in inventory costs.

Cars, trucks, buses, three-wheelers, scooters, motorcycles, tractors, industrial engines, tillers, diesel locomotives and earth-moving equipment are fitted with TVS fasteners as OE. They are also used in other non-automotive engineering applications.

'TVS' high tensile fasteners conform to Indian, ISO, American, British and DIN standards. Fasteners are also made to customers' specifications.

Available in diameters from 6 mm (¼") to 24 mm (1"), and in lengths from 12 mm (½") to 200 mm (8").

Sundram Fasteners—a single source for all your standard and critical special fasteners needs.

**Where fastening is critical 'TVS' the first choice**




Manufactured by:
**Sundram Fasteners Limited**
PADI, MADRAS 600 050

PHONE: 632101 GRAMS: SUNLOC
TELEX: 041-7549 FASN IN

SAA/SFL/3115

## யோசனை

கஞ்சி வடித்து, அன்றைய புடவையை அலச உபயோகப் படுத்தவில்லையென்றால் கீழே ஊற்றி விடாதீர்கள். ஒரு கண்ணாடிக் குடுவையில்



ஊற்றி ஃப்ரிஜ்ஜில் வைத்து விடுங்கள். மறுநாள் புதிய கஞ்சியையும் அதனுடன் சேர்த்து உபயோகித்துக் கொள்ளலாம்.

முடியாது. இமயம் முதல் குமரி வரை ஒரே சம்பிரதாயங்கள் தான்'' என்று கூறினாள்.

ரமேஷ் வந்துவிட்டான். வண்டி கிளம்பியது. சிறு புள்ளியாக ஹமீது மறையும்வரை கைகளை ஆட்டிக்கொண்டிருந்தாள் அரவிந்தா.

''போதும், உள்ளே தலை எடுத்துக்கொள். கை எங்கேயாவது சுளுக்கிக் கொள்ளப் போகிறது'' என்று ஏளனமாகக் கூறினான் ரமேஷ்.

அவள் திடுக்கிட்டுத் தலையை உள்ளே இழுத்துக்கொண்டாள். நல்ல உடையைக் களைந்து லுங்கி ஒன்றை உடுத்திக்கொண்டான்.

''அரு, உனக்கு எவ்வளவு தோழிகள், நண்பர்கள்... அவர்கள் எல்லாம் ஏன் இந்த ஹமீது மாதிரி இல்லை?'' என்று கேட்டவன் சிகரெட் ஒன்றைப் பற்ற வைத்துக் கொண்டான்.

அவள் திடுக்கிட்டுப் போய் அவன் முகத்தைப் பார்த்தாள். அவன் சிரித்தான்.

''ஹமீது மிகவும் நல்ல நண்பர்.''

''அப்படியானால் மற்றவர்கள் எல்லாம் கெட்ட நண்பர்களா?''

''இதென்ன இப்படி ஒரு லாஜிக்கல் தியரி பேசுகிறீர்கள்?''

''ஏன் கேட்கக் கூடாதா?''

''கேட்கும் மாதிரி நன்றாக இல்லையே?''

அவன் பதில் பேசாமல் அவளை அணைத்துக் கொண்டான். அவள் மனத்தில் உறுத்தல் இருந்தது.

**ப**ம்பாய் நகர சந்தடி மிகுந்த வாழ்க்கை அவளுக்குப் புதுமையாக இருந்தது. வாழ்க்கை மிகவும் இனித்தது. அவன் சிறு பிளாட் ஒன்றை வாடகைக்கு எடுத்திருந்தான். ஒரு பெட் ரூம், சின்ன ஹால், மற்றும் ஒரு சிறு அறை, சமையலறை என்று வசதியாக இருந்தது. அவனும் அதற்குப் பிறகு சாகுலைப் பற்றிப் பேசவில்லை. அதுவே அவளுக்குப் பெருத்த நிம்மதியைக் கொடுத்தது. ஒருவேளை தான் அன்று சாகுலிடம் அதிகமாகவே அக்கறை காட்டி விட்டோமோ? அது மிகவும் தவறாக ரமேஷ் எடுத்துக் கொண்டு விட்டானோ? என்று எண்ணித் தடுமாறினாள்.

ரமேஷ் அலுவலகம் செல்லத் தொடங்கினான். அவர்கள் இருந்த இடம் மூன்றாவது மாடி. பக்கத்தில் ஒரு மலையாளிக் குடும்பம், ஒரு பஞ்சாபிக் குடும்பம் என்று இருந்தன. அவன் ஒரு பெரிய கம்பெனியில் விற்பனையாளனாக இருப்பதால் அடிக்கடி வெளியூர் போக நேரிடும். அச்சமயங்களில் இந்த பிளாட்டில் இருப்பது வசதியாக இருக்கும் என்று எண்ணினாள் அரவிந்தா. மலையாளி குடும்பம் அவளிடம் நன்றாகப் பழகினார்கள். அவள் தன்னைப் பற்றி பம்பாய் வாழ்க்கையைப் பற்றி எல்லாம் எழுதினாள். ரமேஷ் அவளை ஊரைச் சுற்றிப் பார்க்கக் கூட்டிக் கொண்டு போனான். பம்பாய் வாழ்க்கை இனித்தது.

ஒரு மாலையில் ரமேஷ் தன் நண்பர்கள் என்று இருவரை அழைத்துக் கொண்டு வந்தான். அளவுக்கு மீறிய உபசரிப்புக்கள்.

''அரு, நம் பக்கத்து டிபன் ஏதாவது பண்ணு. இவர்களுக்கு அது ரொம்பப் பிடிக்கும்'' என்றான் ரமேஷ்.

அவளும் ஏற்கனவே அடைக்கு அரைத்து வைத்திருந்தாள். அதனால் அடை தட்டி, கேசரி பண்ணி வைத்தாள். ஏனோ அவர்களைக் கண்டால் அவள் மனத்திற்குள் அத்தனை பிடித்தம்

# நாடெங்கும் நலம் கொழித்திடவே வாழ்த்துகின்றோம்

பொங்கல் திருநாளை எல்லோரும் மகிழ்ச்சியுடன்
கொண்டாட எங்கள் நல்வாழ்த்துக்கள்

பல்வேறு துறைகளில் ஆக்கப்பணி



டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட்
சென்னை : 600 001

சைக்கிள்கள், சைக்கிள் சீட்கள், செயின்கள், டைனமோ
லாம்ப் செட்டுகள், எஃகு குழாய்கள், மெட்டல்
செக்ஷன்கள் மற்றும் "Z" பார்லின்கள் தயாரிப்பாளர்கள்.

Imageads-TI-1314

இல்லாமல் போய்விட்டது. அவள் டிபனைப் பரிமாறினாள். டிபன் பின்பு அவர்கள் சீட்டாடத் தொடங்கினார்கள்.

''அரு, ஒரு கை குறைகிறது. நீயும் ஆடேன்'' என்றான் ரமேஷ்.

''ஐயையோ, எனக்கு ஆடத் தெரியாது'' என்று மறுத்தாள் அரவிந்தா.

''இதென்ன பிரம்ம வித்தையா? கம் ஆன், வந்து கற்றுக் கொள். பொழுது போகாவிட்டால் நீயும் நானும் ஆடலாம் இல்லையா?'' என்றான் ரமேஷ்.

அவள் மேலும் மறுத்தாள். ''ஏய், என்ன இதெல்லாம். நீ என்ன சின்னக் குழந்தையா? என் பேச்சைக் கேள். இவர்கள் எதிரே சிரிக்கப் பண்ணாதே'' என்றான்.

மீற முடியாமல் உட்கார்ந்து கொண்டாள் அரவிந்தா. ரமேஷ் சொல்லிக் கொடுத்தான். அவள் பக்கம் ஜோஷி உட்கார்ந்திருந்தான். ஆட்ட மும்முரத்தில் மெல்ல விரல்களைக் கவ்வினான். அவள் இதைப் பாராட்டாமல் இருந்தாள். பிறகு மெல்ல கால்களால் அவள் கால்களை வருடினான். அவளால் பொறுக்க முடியவில்லை. சீ! இவர் ஓர் ஆண் பிள்ளைதானா? இதெல்லாம் இவர் கண்களுக்குத் தெரியவில்லை?

அவள் சட்டென்று எழுந்துவிட்டாள். ''எனக்குத் தலையை வலிக்கிறது.'' ரமேஷ் பற்களைக் கடித்தான்.

ஒரு வழியாக அவர்கள் பத்து மணிக்குப் போனார்கள். அவன் கதவைச் சாத்திக் கொண்டு படுக்கை அறைக்கு வந்தான். அவள் ஏதோ ஒரு புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தாள். அவன் அவள் தோளைப் பற்றிக் கொண்டு எழுப்பினான். தலை முடியைப் பற்றி நிறுத்தினான். கன்னங்களில் மாறி மாறி அறைந்தான். அவளுக்கு என்ன நடக்கிறது என்பதைப் புரிந்துகொள்ளச் சில கணங்கள் ஆயின. கன்னங்கள், மூஞ்சி எல்லாம் எரிந்தது. ஓய்ந்துபோய்க் கட்டிலில் உட்கார்ந்தான் ரமேஷ்.

''உனக்குப் பண்பாடு ஏதாவது தெரிகிறதா? ஜோஷி என்னை என்னமா கிண்டல் பண்ணிட்டான்'' என்று முசுமுசுவென்று இரைந்து கத்தினான்.

''எனக்குத் தெரிந்த பண்பாடு நம் குடும்பத்தை நடத்தப் போதும். உங்கள் மனைவியைப் பற்றி இந்த ஜோஷி ஏன் விமரிசிக்க வேண்டும்? இதைப் பற்றி நீங்கள் ஏன் ஒரு வார்த்தை கேட்கக் கூடாது? இந்த ஜோஷி யார் என்னைப் பற்றிச் சொல்ல?'' என்று சீறினாள்.

''ஜோஷி இல்லேன்னா இந்த வீடு எப்படிக் கிடைக்கும்? இப்படிச் செலவழிக்கிறேனே இந்தப் பணம் எப்படி....'' நாக்கைக் கடித்துக் கொண்டு நிறுத்தினான்.

''இதற்கெல்லாம் என் ஃபிரண்ட்ஷிப்தான் நீங்ககொடுக்கிற விலையா?'' என்று கேட்டுவிட்டு அவனைக் கூர்ந்து பார்த்தாள்.

அவன் சட்டென்று விழித்துக் கொண்டான்.

''நீ இப்ப என்ன பண்ணிட்டே? ஜஸ்ட் ஒரு கம்பெனி கொடுக்கக் கூட உன்னாலே முடியவில்லை இல்லையா?'' என்று முணு முணுத்துவிட்டு அவன் படுத்துக்கொண்டான்.

அதற்குப் பிறகு ஒரு வாரம் அவளுடன் அவன் பேசவில்லை. பிறகு மெல்ல உடைந்தது இந்த மௌனம். இதுதான் தாம்பத்திய ரகசியம் என்பதை அவள் புரிந்து 'கொண்டாள். இப்படிச் சிறுசிறு

---



## யோசனை

உங்கள் கணவரின் நண்பர்கள் ஓய்வு நாளில் வந்து கூடும்போது அறை முழுக்க சிகரெட் புகை நிரம்பி விட்டதா? இரண்டு மெழுகுவர்த்திகளை ஏற்றி வையுங்கள். விளைவைப் பார்த்து நீங்களே ஆச்சர்யப் படுவீர்கள்.

பூசல்களுடன் ஆறு மாதங்கள் ஓடின. எத்தனை திட்டல்கள்—எத்தனை அடிகள்—

'அரவிந்தா, நீ இந்த வாழ்க்கைக்காகவா இப்படி ஏங்கினாய்?—நினைவில் அம்மா, அப்பா, சிவகுமார் என்று வந்து போனார்கள். கண் சிகிச்சை காரணமாக சிவகுமாரை வரவழைத்தால் என்ன? அவளுக்கு இப்பொழுது அலமேலுவின் வாழ்க்கையின் மேல் கூடப் பொறாமை எழுந்தது.

அன்று அப்பா எழுதியிருந்தார். சிவகுமார் தன் கண் சிகிச்சைக்கு அங்கே வரவேண்டும் என்று துடிப்பதாக. இந்தக் கடிதத்தை அவனிடம் காட்டினாள். படித்துவிட்டுத் தூக்கிப் போட்டான்.

''இங்கே பணம் கொட்டிக் கிடப்பதாக உன் தம்பி நினைத்துக் கொண்டிருக்கிறானோ?'' என்று ஏளனமாகக் கேட்டுச் சிரித்தான்.

''உலகம் தெரியாத அவன்கிட்டே ஆபரேஷன் ஆனால் பார்வை தெரியும்னு ஏன் சொன்னீர்களாம்? இந்த ஆசையை ஏன் விதைத்தீர்கள்?''

''அதுவா? உன்னைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளத்தான்'' என்றவன், ஏதோ ஹாஸ்யத்தைக் கூறிவிட்டவன் போல் பலமாக நகைத்தான்.

அன்று நடுப்பகல். வேலையை முடித்துவிட்டுத் தலையை உலரப் போட்டபடி ஹாலின் தரையில் சிறு தலையணையைப் போட்டுக் கொண்டு படுத்துக் கொண்டிருந்தாள். தோகையாய்ப் புரண்ட கூந்தல் தரையில் புரண்டது. பஸ்ஸர் ஒலித்தது. சிறு துளை கண்ணாடி வழியே பார்த்தவள் மகிழ்ச்சியால் துடித்துப் போனாள். மூடிய கதவுக்கு வெளியே கை கொள்ளாத சாமான்களுடன் சாகுல் ஹமீது நின்று கொண்டிருந்தான்.

கதவைத் திறந்தவளைப் பார்த்தான். திகைத்து விட்டான். பூத்த மலராக, மின்னும் அரவிந்தாவா இப்படி.... அந்தத் திகைப்பை அவனால் அடக்க முடியவில்லை.

''அரவிந்தா, நீயா? உன்னை நீ கண்ணாடியில் பார். என்ன இப்படி இளைத்துக் கண்கள் குழி விழுந்து....''

''உள்ளே வாருங்கள்'' வழி விட்டதும் அவன் ஹாலில் வந்து சோபாவில் அமர்ந்து கொண்டான். கையில் கொண்டு வந்திருந்த இனிப்புக்கள், பழங்களை டீப்பாய் மீது பரத்தினான்.

''எதுக்கு இவ்வளவு சாகுல்?''

''உன்னைப் பார்க்க வரும் மகிழ்ச்சியில் என்ன வாங்கறது. உனக்கு என்ன பிடிக்கும் என்பதெல்லாம் மறந்தே போய்விட்டது. பறந்து வர மாட்டோமான்னு துடிக்கப் போனேன்.''

அவள் காப்பியைக் கலந்து கொண்டு வந்தாள். அவன் கொண்டு வந்தவற்றை யெல்லாம் பிரித்துத் தட்டில் வைத்து அவனுக்கே உபசாரம் பண்ணினாள்.

''எங்கே இவ்வளவு தூரம்?''

''ஒன்றிரண்டு கடிதங்கள் போட்டுவிட்டு நிறுத்திக்கொண்டு விட்டாயே? எனக்கு எப்படியோ இருந்தது. எனக்கு இங்கேயே வேலை கிடைச்சுப் போச்சு. வந்துட்டேன்.''

ரமேஷ் கடிதத் தொடர்பைப் பற்றிக் கண்டித்ததைச் சொல்லவா முடியும்?



''என்னங்க இது, இவ்வளோ பெரிய டம்ளர் கொண்டு வந்திருக்கீங்க?''

''உங்களுக்கு பிரஸன்ட் பண்ணத்தான்; வெச்சுக்கோங்க''

''சேச்சே, இதெல்லாம் எதுக்குங்க..''

''இல்லே, இனிமேலாவது நான் வரும்போது உங்க மனைவியை பெரிய டம்ளர்ல காபி கொடுக்கச் சொல்லுவீங்கன்னுதான்''

— ஹேமா

''ஸாரி, புதுக் குடித்தனம் இல்லையா? வெளியே வாசல்லே போக, நண்பர்கள் வர சரியாய்ப் போய்விட்டது.''

குரலில் மன்னிப்புக் கேட்கும் நயம் வழிந்தது.

அவன் நம்பாமல் பார்த்துவிட்டு, ''என்னால் நம்ப முடியவில்லை அரவிந்தா. நீ மகிழ்ச்சியாக இருந்தால் என்னைவிட வேறு யார் சந்தோஷப்பட முடியும்?''

அவள் கைவிரல்களைக் கோத்துப் பிரித்தாள். அவன் தான் தங்கியுள்ள மாதுங்கா பகுதி விலாசத்தைக் கொடுத்தான். ''இங்கிருந்து அதிக தூரம் இல்லை. நீயும் ரமேஷும் வரவேண்டும்'' என்றான்.

அவள் தலையை ஆட்டி விடை கொடுத்தாள். அவன் போன பின்பு அழுகை வெடித்தது. எதற்காக அழுகிறோம் என்று புரியாமல் அழுது தீர்த்தாள்.

அன்றிரவு அவள் இனிப்புக்களையும், பழங்களையும் தட்டில் வைத்து ரமேஷிடம் நீட்டியபொழுது—

''என்ன இன்னிக்கு? வாங்கினியா, வீட்டில் செய்தாயா? தெரிந்திருந்தால் ஜோஷியையும் மாத்ருவையும் வரச் சொல்லி இருக்கலாம்.''

அவள் ஜன்னல் கர்ட்டனை நேராகப் பிரித்து விட்டாள். ''இன்னிக்கு சாகுல் ஹமீது வந்திருந்தார். அவர்தான் கொண்டு வந்தார்.''

கையில் எடுத்த பழத்தைத் தட்டிலேயே போட்டான். முகத்தில் சுகமான ரசிப்பு இல்லை. ''அவன் இனிமேல் அடிக்கடி வருவான்னு சொல்.''

''ஏன், உங்கள் நண்பர்கள் இல்லையா? அதுபோல் எனக்குத் தெரிந்த நண்பர்கள் வந்தால் நான் மகிழ்வது இயல்புதானே?''

''எல்லாம் அளவோடு நிற்கட்டும்.''

''நான் எந்த விதத்திலும் கட்டுப்படவில்லை. எல்லாம் அளவோடு நிற்கும்'' என்றாள்.

பளீர் என்று ஓர் அடி காது மடலையும் சேர்த்து விழுந்தது தான் தெரியும். அப்படியே உட்கார்ந்து விட்டாள்.

சென்னையில் பழகிய ரமேஷ் நினைவில் நிழலாடினான். சுடர் விளக்காக மின்னிய திரியில் விட்டில் பூச்சியாக அவள் விழுந்து விட்டாள். ரமேஷ் எண்ணெய் வற்றிய சுடர் விளக்கு. அதில் ஜீவன் இல்லை என்பதை ஏன் அவளால் உணர முடியாமல் போய்விட்டது?

மாதுங்காவில் ஓர் ஓட்டலில் சாகுல் ஹமீதை ரமேஷ் பார்த்தான்.

''ஹல்லோ ரமேஷ்!'' என்று அவன் எதிரே வந்து அமர்ந்தான்.

''ஓ.... நீங்களா?'' என்று சுரத்தின்றிக் கேட்டான். சாகுல் ஹமீது டிபன்களை வரவழைத்தான்.

''மிஸ்டர் ஹமீது, ஒரு ரிக்வெஸ்ட். நீங்கள் அரவிந்தாவின் வாழ்வில் அக்கறை கொண்டவர்தானே?'' என்று நிதானமாகக் கேட்டான்.

''ஏன் இந்தச் சந்தேகம்?''

''உங்கள் குறுக்கிட்டால் அவள் மனம் சஞ்சலப்படுவதை என்னால் சகிக்க முடியவில்லை. அதனால் அடிக்கடி அவளைத் தேடிக்



## யோசனை

கண்ணாடி உடைந்துவிட்டால் சாணியை தேடிக்கொண்டு போக வேண்டாம். ரொட்டி துண்டை ஒரு பந்து போல சுருட்டிக் கொண்டு சிதறிய துகள்களை கவனமாக ஒத்தி எடுத்து விடுங்கள்.

கொண்டு வராதீர்கள். இது அவளுடைய நிம்மதியான வாழ்க்கைக்கு நல்லதல்ல.''

ஹமீதின் முகம் சிறுத்துப் போயிற்று.

''தங்களுக்குப் பிடிக்காததை நான் செய்ய மாட்டேன் ரமேஷ், இது உறுதி'' என்றான்.

ஆனால் இந்த முள் குத்திய ரணம் அப்படியே சீழும் ரத்தமுமாகக் கட்டிக் கொண்டிருக்கிறது என்பதை யாரால் அறிய முடியும்?

இது அரவிந்தாவுக்குத் தெரிய நியாயமில்லை. ரமேஷின் முரட்டுத்தனத்தை ஹமீது நன்றாகவே புரிந்துகொண்டிருந்தான். அவளுடைய வாழ்வில் குறுக்கிடத் தனக்கு என்ன உரிமை இருக்கிறது? தன்னால் அவளுக்குத் துன்பம் வரக் கூடாது என்று தவித்த மனத்துக்குத் தடை போட்டான். ஆனால் அரவிந்தாவோ ஒவ்வொரு கணமும் அவன் வரவை எதிர்பார்த்தாள்.

அன்று நடுப்பகல். கதவு தட்டப்படும் சத்தம் கேட்டதும் ஓடிவந்தாள் அரவிந்தா. சாகுல்தான் உள்ளே நுழைந்தான். விரிந்து கிடந்த முடியை அள்ளிப் பூப்பந்தாக முடித்தாள் அரவிந்தா.

''வழி மறந்து போச்சோன்னு நினைச்சேன்.''

''மறக்க முயற்சி பண்றேன். முடியவில்லை'' அவன் தழுதழுத்தான்.

''ஏன் மறக்கணும்?''

''உங்கிட்ட என்ன உரிமை இருக்கு அரவிந்தா'' என்று வேதனையுடன் கேட்டான்.

கலகலவென்று நகைத்தாள் அரவிந்தா.

''சகோதரியாக வாழ எந்தச் சம்பிரதாயமும் தடை பண்ணாது என்று சொன்னதை மறந்து விட்டீர்களா சாகுல்!''

அவன் தலையை உசுப்பிக் கொண்டான்.

''முதலில் என் அன்பளிப்பைத் தருகிறேன்'' என்று புடவைப் பெட்டியை நீட்டினான். ''ஹேப்பி பர்த் டே'' என்றான்.

அவள் புருவங்கள் வளைந்தன. ''பிறந்த நாளா? எனக்கா?''

''ஆமாம். இன்று உன் பிறந்த நாள். என்னுடைய டைரியில் குறித்து வைத்திருக்கிறேன்.''

அவளுக்கு எப்படி மறந்து போயிற்று? ''தாங்க் யூ சாகுல்.'' புடவைப் பெட்டியைப் பிரித்துப் பார்த்தாள்.

''ரொம்ப நன்றாக இருக்கிறது.''

''மாலையில் புடவையை உடுத்திக் கொள். என்னால் அடிக்கடி வர முடியாது. என் விலாசம் ஞாபகம் இருக்கிறதா?''

''ஓ... மனப்பாடம் ஆகிவிட்டதே?'' என்றவள், வாயால் ஒப்பித்தாள்.

வந்த சுருக்கோடு போய்விட்டான்.

எங்கோ பன்னிரண்டு அடிப்பது கனவாகக் கேட்டது. கீழ்தளத்தில் போன் வந்தது. கூர்க்கா பையன் வந்து கதவைத் தட்டினான். ரமேஷ் கீழே போய்விட்டு வந்தான். அவளைத் தட்டி எழுப்பினான். அவள் கண்களைக் கசக்கிக் கொண்டு எழுந்து அமர்ந்தாள்.

''எங்க கம்பெனிக் கட்டிடம் தீப்பிடித்துக் கொண்டு விட்டதாம். போகிறேன். பணம் கொடு.''




பையன் : ''அம்மா, எனக்குதான் பெரிய சாக்லெட் தரணும்; அண்ணனுக்குச் சின்னதுதான் தரணும்''

அம்மா : ''ஏண்டா?''

பையன் : ''அவன்தான் நான் பொறக்கறதுக்கு மூணு வருஷத்துக்கு முன்னாலிருந்தே தின்னு கிட்டிருக்கானே!''

— ஹேமா

அவள் அலமாரியைத் திறந்து பணத்தை எடுத்துக் கொடுத்தாள். பிறகு ஹாலுக்கு வந்தாள். ஜோஷியும், மாத்ருவும் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் எதிரே பாட்டில்கள் வண்ணம் வண்ணமாக....

''இதென்ன புதுப் பழக்கம்!''

''உனக்குப் புதுசு. எனக்கு எத்தனை குடிச்சாலும் நிதானம் தவறாது.'' செருப்பை மாட்டிக் கொண்டே சொன்னான் ரமேஷ்.

''இவர்களை என்ன செய்யப் போகிறீர்கள்?''

''உனக்குத் துணையாக இருப்பார்கள்.''

''எனக்கு எதற்குத் துணை? நீங்கள் கேம்ப் போனபொழுது யார் துணைக்கு இருக்கிறார்கள்?'' என்று சீறினாள்.

''உஷ்....குறுக்கே குறுக்கே பேசாதே. நான் இல்லாத நேரத்தில் எல்லாம் ஹமீதுடன் கொஞ்சுவதற்கு இது ஒண்ணும் கெட்டுப்போகவில்லை'' என்றவன் மளமளவென்று போய்விட்டான்.

அவள் கண்களில் சூடான கண்ணீர் கொப்பளித்தது. ஜோஷி கதவைத் தாள் போட்டான். பிறகு அவள் அருகில் வந்தான். அவள்தான் எல்லாவற்றையும் புரிந்துகொண்டு விட்டாளே!

''பக்கத்தில் வராதே.''

''திவிபத்தை நம்புகிறாயா? நாளைக்கு நாங்கள் பணம் தர எண்ணி வாங்குவானே?'' என்றான் ஜோஷி ஆங்கிலத்தில்.

அவள் திக்பிரமை பிடித்துப் போய் நின்றாள். இந்த நேரத்தில் தன்னை யார் காப்பாற்றப் போகிறார்கள்? யாரோ கதவை தடதடவென்று தட்டினார்கள்.

''போய் திற'' என்ற ஜோஷி எதுவும் அறியாதவன் போல பழைய இடத்தில் அமர்ந்து கொண்டான்.

ஒன்றுமறியாதவள் போலக் கதவைத் திறந்தாள் அவள். கூர்க்கா பையன்தான் நின்றான்.

''ஸாபுக்கு போன் வந்திருக்கு.''

''போன் வந்திருக்கு. கேட்டுவிட்டு வரேன்'' என்றவள் குபீரென்று பாய்ந்து படிகளில் தலை தெறிக்க ஓடிவந்தாள். அவள் போனுக்கே போகவில்லை.

போன் மாடியில் இருக்கும் மலையாளி ரமேசனுக்கு. வாட்ச்மேன் பையனுக்கு (கூர்க்கா) ரமேஷும் சரி, ரமேசனும் சரி ஒன்றுதான். அதனால் தூக்கக் கலக்கத்தில் சொல்லிவிட்டு கீழே இறங்கினான்.

பாய்ந்து ஓடிய அரவிந்தா எதிரே வந்த ஆட்டோவைப் பிடித்து ஏறிக்கொண்டாள். ஹமீதின் விலாசத்தைக் கூறினாள். ஆட்டோ புறப்பட்டது. அவள் கண்கள் பனித்தன.

தூக்கக் கலக்கத்துடன் கதவைத் திறந்த சாகுல் திடுக்கிட்டான்.

''என்ன அரவிந்தா, இந்த நேரத்தில்...''

''ஆட்டோவுக்குப் பணம் கொடுத்து அனுப்புங்கள். எல்லாவற்றையும் சொல்கிறேன்.''

பணத்தைக் கொடுத்து அனுப்பிவிட்டு உள்ளே வந்தான் சாகுல். சின்ன ஹீட்டரைப் போட்டுத் தண்ணீரைச் சுடவைத்தான். ஹார்லிக்ஸ் போட்டுக் கொடுத்தான். தான் வாங்கிக் கொடுத்த புடவையை அவள் உடுத்தியிருப்பதைக் கவனித்தான்.

''அப்பச் சொல்லு அரவிந்தா.''

''ஹமீது, நளினாவின் கணவரை என் கணவர் நல்லவராக்கி விட்டார். சுடர் விட்டு எரியும் திரியில் விட்டில் பூச்சியாக விழுந்து விட்டேன். ஆனால் கருகாமல் தப்பிவிட்டேன் என்பதைப் புரிந்து கொள்ள முடிகிறதா உங்களால்?'' என்று அழுதாள்.

''புரிந்து கொண்டேன் அரவிந்தா.''

''அப்பா வேலையை விடாதேன்னு சொன்னது எத்தனை நல்லதாகி விட்டது!''

''மேலே என்ன செய்யப் போகிறீர்கள்?''

''ஓர் உதவி தேவை ஹமீது.''

''காத்துக் கொண்டிருக்கிறேன்.''

''அன்றொரு நாள் பஸ்ஸில் எனக்கு ஒரு டிக்கெட் வாங்கினீர்கள். இன்று சென்னை செல்ல உங்கள் சகோதரிக்கு ஒரு டிக்கெட் வாங்கித் தரவேண்டும். இதற்கு நன்றி சொல்லப் போவதில்லை.''

கண்களில் துளிர்த்த கண்ணீரைத் துடைத்துக்கொண்டான் அவன்.

அன்பு செலுத்த யார் எங்கே இருந்தால் என்ன? எந்த மதமானால் என்ன? என்ன இனமானால் என்ன?

''கவலைப்படாமல் தூங்கு அரவிந்தா. நான் அறைக்கு வெளியே படுத்துக் கொள்கிறேன். காலையில் எப்படியாவது ஒரு டிக்கெட் வாங்கித் தருகிறேன்'' என்றான்.

அரவிந்தா நிம்மதியாகப் பெருமூச்சை விட்டாள்.

"நான் ஒரு குடும்பப்பெண்
எனவே நான் உடுத்தும் உடைகள் குடும்பப் பாங்காக இருக்க வேண்டும்."



உங்கள் அந்தஸ்தே தனி
அதற்கேற்ற துணி

மஃபத்லால்
ஃபேப்ரிக்ஸ்



மஃபத்லால் இண்டஸ்ட்ரீஸ் மஃபத்லால் ஃபைன்

MF-18 TAM

Regd. No. TN MS (S) 231

# புதிய பொலிவுடன் இனிய மணம் கமழும் கோகுல் ஸாண்டல்வுட் முகப்பவுடர்...

கோகுல்—
இந்தியாவிலேயே
முதன்முறையாக
ISI முத்திரை
பெற்ற பவுடர்




CM/L.NO.8223

இப்பொழுது கோகுல் ஸாண்டல்வுட் முகப்பவுடர் புதிய முறையில் சீல் செய்த பிளாஸ்டிக் டப்பியில் கிடைக்கிறது. கலப்படம் செய்ய முடியாதது. சீல் உடையாமல் இருக்கிறதா என்று கவனித்து வாங்கவும்.



**கோகுல்**

ஸாண்டல்வுட் &
ஸான்டால் பவுடர்கள்

டி.எஸ்.ஆர் & கம்பெனி
மதுராஸ்






